# ஒரு வீட்டின் கதை

வல்லிக்கண்ணன்




14, சித்திரைக்குளம் மேற்குத் தெரு,
மயிலாப்பூர், சென்னை-600 004.
தொலைபேசி : 4943074

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஒரு வீட்டின் கதை |
| நூலாசிரியர் | : | வல்லிக்கண்ணன் |
| நூலின் பொருள் | : | புதினங்கள் தொகுப்பு |
| மொழி | : | தமிழ் |
| நூல் உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியீடு | : | பூங்கொடி பதிப்பகம் |
| பதிப்பு ஆண்டு | : | முதற் பதிப்பு டிசம்பர் 2001 |
| பக்கங்கள் | : | 136 |
| நூல் அளவு | : | 1 x 8 கிரெளன் |
| எழுத்து | : | 10 புள்ளி |
| தாள் | : | 10.9 கி.கி. வெள்ளைத்தாள் |
| பைண்டிங் | : | சாதா அட்டை |
| ஒளி அச்சுக் கோர்ப்பு | : | குவிக் பிரிண்ட் சர்வீஸஸ் மயிலாப்பூர். தொலைபேசி : 4611399 |
| Printed at | : | Ravi Raja Offset, Chennai - 14. |

விலை : ரூ. 30.00

# பதிப்புரை

மூத்த எழுத்தாளர் மதிப்புமிக்க திரு. வல்லிக்கண்ணன் அவர்கள் எழுதிய மூன்று குறுநாவல்கள் தொகுக்கப் பெற்று "ஒரு வீட்டின் கதை" என்ற தலைப்பில் இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது.

இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ள "ராதை சிரித்தாள்" 1948-ம் ஆண்டிலும் "குமாரி செல்வா" 1951-லும் "ஒரு வீட்டின் கதை" 1979-லும் எழுதப்பெற்றவை.

"ஒரு வீட்டின் கதை" நாவலுக்கு எழுத்தாளர் ஜெயகாந்தன் அவர்கள் எழுதியுள்ள பின்னுரை இந்நூலுக்குச் சிறப்புச் செய்கிறது.

இந்நூலை வெளியிடுவதில் பூங்கொடி பதிப்பகம் பெருமை கொள்கிறது.

வே. சுப்பையா
பூங்கொடி பதிப்பகம்

# பொருளடக்கம்


பக்கம்

1. ராதை சிரித்தாள் . 5

2. குமாரி செல்வா . 27

3. ஒரு வீட்டின் கதை . 58

# ராதை சிரித்தாள்

## 1

'வாங்க, சௌக்கியந்தானா?' என்று கேட்டாள் ராதை.

வண்டியிலிருந்து இறங்கி வந்த சிவராமன் அவளது புன்னகைக்கும் இன்மொழிக்கும் பதிலாகத் தலையசைப்பும் மென்னகையும் அளித்தான். 'ஏய், சாமான்களையெல்லாம் உள்ளே கொண்டுவந்து வையப்பா' என்று வண்டிக்காரனுக்கு உத்திரவிட்டு விட்டு வாசற்படியைப் பார்த்தான்.

அங்குதான் அவள் நின்றாள். 'வாங்க, உள்ளே வந்து உட்காருங்க' என்று அன்பாக உபசரித்தாள். 'எங்க அம்மா அப்பால்லாம் சௌக்கியம் தானே?'

'ஊம்' என்று தலையசைத்தான் அவன். அவளை ஒருமுறை பார்த்தான். வேறு என்ன சொல்வது, அல்லது எப்படிப் பேசுவது என்று அவனுக்குத் தெரியவில்லையோ என்னவோ! மௌனமாக நின்றான்.

அவள் அவனை வியப்புடன் கவனித்தாள். வழிவிட்டு விலகி உள்ளே போனாள். 'அவுக கடைக்குப் போயிருக்காக. மத்தியானச் சாப்பாட்டுக்குத்தான் வருவாக இனிமே' என்று அவளாகச் சொன்னாள்.

அப்போதுதான் அவனுக்குப் பட்டது 'பார்த்தியா! அவரைப் பற்றி விசாரிக்கவே இல்லையே' என்று. 'என்ன குழப்பம்!' என்று நெஞ்சோடு புலம்பிக் கொண்டான் அவன். ஏதோ நினைத்தவனாய் 'அப்படியானா அவாளை ஆபீஸ்லே போயி.....' என்று தொடங்கினான்.

அவள் குறுக்கிட்டாள்: 'அதுக்கு இப்ப என்ன அவசரம்? முதல்லே குளியுங்க. அப்புறம் காபி சாப்பிட்டு விட்டு மற்றதுகளை கவனிக்கலாம்.'

அவள் அவனையே பார்த்தபடி நின்றாள். பிறகு வேலையற்றவளாய் அப்படியும் இப்படியும் அலைந்தாள். விரலால் கதவைத் தடவினாள். சிரித்தாள்.

அவன் திடுக்கிட்டு நோக்கினான். அவள் ஏன் சிரித்தாள்? அவனுக்கு விளங்கவில்லைதான்.

அவள் நகைத்தபடியே சொல்லுதிர்த்தாள்: 'நல்லாருக்கு நீங்க வந்ததும், எதையோ பறிகொடுத்தது போல குறுகுறுன்னு நிற்பதும்.....ஏன், என்ன விசயம், சொல்லுங்களேன்!'

சிவராமன் தனது தவறை உணர்ந்தான். தலையையாட்டி மழுப்பி, அசட்டுச் சிரிப்பு சிரித்தான். 'ஒண்ணுமில்லே. ஏதோ யோசனையாக அப்படியே நின்னுட்டேன்.....'

'நீங்களும் உங்க யோசனையும்!.... நாலு வருஷங்களுக்கு முன்னாலே எப்படி யிருந்தீகளோ அதே மாதிரித்தான் இன்னைக்கும் இருக்கீக. கொஞ்சம் கூட மாறலே போலிருக்கு. ஊம்' என்று மெதுவாக நகைத்தாள் ராதை. பிறகு 'பரவால்லே, உட்கார்ந்து யோசியுங்க. நான் போயி சூடான காபி கொண்டுவாறேன். அதைக் குடித்த பிறகு யோசித்துக் கொண்டே யிருந்தாலும் சரி. குளிச்சாலும் சரி. என்ன சரிதானா?' என்று சொல்லி ஒயிலாகத் தலையசைத்து, குறும்புப் பார்வை சிதறிவிட்டு உள்ளே போனாள்.

'ராதா, நீ கூட மாறவில்லைதான்' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது அவனுக்கு. ஆனால் வார்த்தைகள்தான் உதிரவில்லை.

அவன் பார்வை வெளியே புரண்டது. வண்டிக்காரன் சாமான்களை இறக்கி வைத்து விட்டு நின்றான். அவனுக்கு உரிய காசைக் கொடுத்து அனுப்பக் கூட மறந்துபோனதை நினைத்ததும் சிவராமனுக்கு சிரிப்பு வந்தது. மீண்டும் அலுத்துக் கொண்டான் தனது மனக் குழப்பத்தை எண்ணி. அவனை அனுப்பியதும், 'சே, என்ன குழப்பமிது! அர்த்தமற்றது! அவள் என்ன நினைக்கமாட்டாள்?' என்று எண்ணினான்.

'நான் இங்க வந்திருக்கவே கூடாது. முடியாது என்று எவ்வளவு மறுத்தும் அவள் அம்மாவும் அப்பாவும் கெஞ்சு கெஞ்சு என்று கெஞ்சப் போய் தட்ட முடியவில்லை. என்ன செய்வது? ஆனால் முன்பு நடந்ததையும் மறக்க முடியவில்லையே!' என்று பெருமூச் செறிந்தான்.

ஈஸிச்சேரில் சாய்ந்தான். அதற்குள் அவளும் காப்பி

கொண்டு வந்து விட்டாள். 'ஊம்' என்று நீட்டினாள்.

'சரி, மேஜை மேலே வையேன, குடிக்கிறேன்' என்றான்.

'வாங்கிக் குடியுங்க. அப்புறம் ஆறிவிடப் போகுது' என்று அருகில் கொணர்ந்தாள் டம்ளரை. அவன் பார்வை வளையணிந்த அந்த அழகிய கரத்தில் பதிந்தது. 'ஊம்' என்று அவசரப் படுத்தினாள் ராதை. கை நீட்டி வாங்கிக்கொண்டான். குடித்தான்.

'ஊரிலே என்ன விசேஷம்? அம்மா ஏதாவது சொல்லி அனுப்பினாளா? அவளே வருவதாக எழுதியிருந்தாளே, ஏன் வரலே?' இப்படி 'ஆயிரம்' கேள்விகள் கேட்டாள்.

அவன் சொன்னான்: 'உன் அம்மாவும் அப்பாவும்தான் வாறதா இருந்தது. ஆனால் திடீர்னு உன் அப்பாவுக்கு ஜுரம் வந்திட்டுது. வேறே அவசர வேலைகள் கிடக்கு. அதனாலே பொங்கல்படியையும் மற்றச் சாமான்களையும் கொண்டு போய்க் கொடுக்கும்படி சொன்னாக. நான் என்னாலே முடியாதுன்னுதான் சொன்னேன். எவ்வளவோ சொல்லிப் பார்த்தும் முடியலே. வேறே வழியில்லை, நீதான் போயாகணும்னு மாமா கட்டாயப்படுத்தி என்னை அனுப்பி வச்சிட்டாக.'

'இங்கே என்ன புலி கரடி யிருக்கா, உங்களைப் புடிச்சு தின்றும்னு பயப்படதுக்கு? நீங்க ஏன் அப்படி அடம் சாதிக்கணும்...' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் அவள்.

'இல்லே, ராதா.... வந்து....'

அவனுக்கே தெரியவில்லை என்ன காரணம் சொல்வது என்று.

'நான் உங்களைப் பார்த்தே நாலு வருஷமிருக்குமே. போன தடவை நான் ஊருக்கு வந்திருந்த போது, நீங்க இல்லை. ரெண்டு மூணு தடவை வந்த போதெல்லாம் உங்களைப் பார்க்கவே முடியலியே. எப்ப பார்த்தாலும் ஸர்க்யூட்டு தானாக்கும்! இப்பகூட வேலை எதுவும் பார்க்கலியே?'

'வேலை என்ன வேலை! அதெல்லாம் ஒண்ணும் எனக்குப் பிடிக்கலே, இஷ்டப்பட்டால் ஊரிலே தங்குவது, இல்லைன்னா இப்டீ சும்மா ஊர் சுற்றுவது. இதுதான் என் வாழ்க்கையாப் போச்சே. எனக்கு இதுதான் பிடிச்சிருக்கு' என்றான் அவன்.

காப்பி குடித்து விட்டுக் கையிலேயே வைத்திருந்த டம்ளரை, குனிந்து தரையிலே வைக்கப் போனான். அதற்குள் அவள் விரைந்து பற்றிக் கொண்டாள்.

அப்படி அவள் வேகமாகச் குனியும்போது நெளிந்த கூந்தலையும், அழகாக ஆடிய லோலக்குகளையும், கவனித்தான் சிவராமன். 'ராதையின் கழுத்து ரொம்ப அழகாகத் தானிருக்கிறது!' என்ற எண்ணம் உதித்தது அந்த 'யோக்கிய சிகாமணி'யின் மனசிலே. உடனேயே 'சே, என்ன நினைப்பு!' என்று கடிந்து கொண்டது உள்ளம்.

அவள் அலை மிதந்து போவதுபோல எழிலாகத் திரும்பிச் சென்றாள். அவள் பக்கமிருந்து அவன் பார்வையைத் திருப்பிக் கொள்ளவில்லை, அவள் மறைந்த பிறகுதான் 'இப்படி நான் பார்த்திருக்கக் கூடாது' என்ற நினைப்பு பிறந்தது.

'இதற்குத்தான் நான் இங்கு வரக்கூடாது என்று நினைத்தேன். அவள் ஒவ்வொரு அசைவும் பேச்சும் மறக்க முடியாத பழைய தொல்லைகளையேதான் நினைவுக்கு இழுக்கின்றன.... போகுது, வந்ததோ வந்தாச்சு, இனி சீக்கிரம் திரும்பிப் போக வேண்டியது தான். அதற்கானதைத்தான் கவனிக்கணும்' என்று முனங்கிக் கொண்டான்.

'குளிக்க வெந்நி வேணுமா உங்களுக்கு?' என்று கேட்டுக் கொண்டு வந்தாள் ராதை.

'இல்லை இல்லை, பச்சத் தண்ணியே போதும்' என்றான்.

'அப்பொ நீங்க குளிக்கலாமே. செம்பு, சோப்பு டப்பா எல்லாம் பம்பு அடியிலேயே இருக்கு' என்று விளக்கினாள் அவள்.

'ஊம்' என்று கிளம்பிப் போனான். எல்லாம் தயாராக இருந்தது. 'சோப்பு என்னத்துக்கு!' என்று முனங்கியபடி அந்த அழகான டப்பாவை எடுத்துப் பார்த்தான். ஈரம் காய்ந்திராத அந்தச் சோப்பு மீது நீண்ட ரோமம் ஒன்று வளைந்து நெளிந்து படிந்திருந்தது. 'அவள் உபயோகிக்கிற சோப்பையே எனக்கு வச்சிட்டா போலிருக்கு ஹூம்!' என்று அதை ஒதுக்கி வைத்துவிட்டான்.

'நான் இங்கு வந்தது சரியில்லை என்றுதான் படுது. நாலு வருஷங்களாச்சுதான் என்றாலும் அவள் மாறலே. மறக்கவு மில்லை

அதைன்னு நல்லாத் தெரியுது' என்று நினைத்தான் சிவராமன்.

அவன் மறுபடியும் முன் அறையில் ஈஸிச் சேரில் சாய்ந்திருந்தபோது அவள் வந்தாள். 'என்ன நீங்க சோப்புப் போட்டுக் கிடவே யில்லை போலிருக்கே?' என்று விசாரித்தாள்.

'ஆமா. நான் சோப்பு உபயோகிக்கிறதேயில்லை' என்றான் அவன்.

'ஓ, சரிதான்!' என்று அவள் சொன்ன குரலில் எவ்வளவோ அர்த்தமிருந்தது. அவள் இதழ்களில் தனி நகை தவழ அவனைப் பார்த்துவிட்டு உள்ளே போனாள். அந்தச் சிரிப்பு அவனுக்கு பழைய நினைவுகளையே திரும்ப இழுத்தது.

நான்கு வருடங்களுக்கு முன்பு நடந்ததுதான். எனினும் அதை அவன் என்றுமே மறந்துவிட மாட்டான். அவன் வாழ்க்கையிலேயே முக்கியமான சம்பவங்களில் அதுவும் ஒன்று. அதன் நினைவு அடிக்கடி அவன் மனதை உறுத்தும். அதனால்தான் அவன் ராதையைப் பார்க்க வருவதற்குக் கூடத் தயங்கினான்.

ராதைக்கு அப்போது கல்யாணமாகவில்லை. 'பெண்ணுக்கு வயசு வருதா, போகுதா! உடனோ டொத்த பெண்களுக் கெல்லாம் கல்யாணமாகி, பிள்ளையும் குட்டியுமாக் காட்சிதருதுக. ஆனா ராதாவுக்கு என்னமோ இன்னும் வேளை வரலே. அவ அப்பா அதைப்பற்றி கவலைப்படுவதாகவே தெரியலே' என்று அவள் தாய் அடிக்கடி புலம்பிக் கொண்டிருப்பாள்.

ராதைக்கு அப்போது வயது இருபதிருக்கும். காலத் தென்றலின் இனிய வருடுதலால் மலந்து நின்ற பூ வண்டின் வரவை நாடிக் காத்திருந்தது. வண்டுதான் வரவில்லை! தேடுவாரற்ற இடத்திலே புஷ்பித்து வாடி வதங்கிய மலர் போலிருந்தாள் ராதை. அவள் கண்ட கனவுகளும், எண்ணி ஏங்கிய இன்ப நினைவுகளும் அவளுக்கு அளித்திருந்த சோபை கூட வரவரக் குறைந்து, அவள் முகத்தில் சோக முலாமே பூசின. அவள் கண்களில் ஒரு வெறுமை, தனிரக ஏக்கம் மிதந்தது.

'சிவகாமிக்கு பதினாலாவது வயதிலேயே கல்யாணமாகி விட்டது. என்னைவிட ஒன்றரை வயசு குறைந்த கல்யாணி இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டாள். மேலத் தெரு ருக்குவுக்குக் கூடக் கல்யாணமாகி விட்டது. ஆனால்....' என்று கணக்கெடுத்துக்

கணக்கெடுத்து நெடுமூச்செறிவது அவள் வழக்கமாகி விட்டது. அவள் இரவு நேரங்களில் தூங்கவா செய்தாள்! எப்படித் தூங்க முடியும்?

கடல் போலப் பெருமூச்சுடன் புரண்டு புரண்டு பொறுமுகிற மகளைப் பார்க்கும் போது அன்னைக்குத் துயரமாகத் தானிருக்கும். ஆனால் என்ன செய்வது? ‘அவ அதிஷ்டம், அவ கையைப் பிடிக்க எவனும் வரமாட்டேன்கிறானே. ஊம். எதுக்கும் வேளையும் பொழுதும் கூடி வரணும்’ என்று வருத்தப்படுவாள்.

தந்தை சங்கரன் பிள்ளை மகளுக்குக் கல்யாணம் செய்து வைக்கவேண்டும் என்கிற நினைப்பு இல்லாமல் வாழவில்லை. அவரும் அங்கே, இங்கே என்று எவ்வளவோ முயன்று பார்த்தும், சரியான மாப்பிள்ளையாக வந்து வாய்க்கவில்லை. அது போக, ‘இவ்வளவு நகை செய்து போடணும். பெண் பேருக்கு என்ன சொத்து எழுதி வைப்பீர்கள்?’ என்றெல்லாம் ‘கண்டிஷன்’ பேசினார்கள் ‘பிள்ளையைப் பெற்றவர்கள்.’

‘ஏதோ என்னாலானதைச் செய்வேன். என் மகளுக்கு என்ன செய்யணும்கிறது எனக்குத் தெரியாதா! சொத்து, கித்துன்னு பேசுறதுக்கு ஒண்ணுமில்லே. நான் செத்த பிறகுதான் அதெல்லாம் பற்றி யோசிக்கணும். தெரிஞ்சுதா? எங்க வீட்டிலே வச்சு கல்யாணத்தை சிறப்பாகச் செய்து பெண்ணைக் கூட்டி அனுப்புவேன். அதுக்குப் பிறகு என்ன செய்யணும்கிறது நானே தெரிஞ்சு செய்வேன்’-இப்படிக் ‘கறாராகப்’ பேசுவார் அவர். அது மற்றவர்களுக்கு எப்படிப் பிடிக்கும்?

தாய், நல்ல இடத்துச் சம்பந்தம், பணக்காரனாக, படித்தவனாக, நல்ல உத்தியோகம் பார்க்கிறவனாக இருக்கணும் மாப்பிள்ளை. மாமியார், நாத்தனா ரெல்லோரும் நல்ல மனுஷிகளாக இருக்கணும். அப்புறம் ராதா கண்ணைக் கசக்கிக் கிட்டு நிற்கப்படாது’ என்று சொல்லி வந்தாள்.

ராதை அழகாக, படித்தவனாக, நல்ல குணத்தோடு, தன்னுடன் சிரித்து மகிழ்ந்து குடும்பம் நடத்துபவனாக மணாளன் வரவேண்டும் என்று பிரார்த்தித்து, குத்து விளக்குக்குப் பூஜை பண்ணி வந்தாள். வெள்ளி, செவ்வாய் விளக்கை பொன் போல் பளபளக்கும்படி துலக்கி, அழகாகக் குங்குமப் பொட்டிட்டு, அரளிப்

பூவும் பச்சிலையும் கலந்து கட்டிய சரம் சாத்தி, பக்தி பூர்வமாக வணங்கி நின்று பூஜைகள் செய்தாலும் கூட 'விளக்கு நாச்சியார்' அவள் வாழ்வில் ஒளி பிறக்க வகை செய்யவில்லை.

வருஷங்கள்தான் ஓடின.

'எனக்கு ஏது கல்யாணம்! கல்யாணமே ஆகாதுன்னுதான் நினைக்கிறேன்' என்று குமுறினாள் ராதை. தன் மனக்குறையைச் சிலரிடம் கூட அவள் வாய் விட்டுச் சொன்னது உண்டு.

கல்யாணம் என்பது ஒருவகை வியாபாரமாக மதித்து பேரம் பண்ணப்படுகிற இன்றைய மத்திய தர வகுப்புக் குடும்பங்களிலே பிறந்த பெண் மனம் குமைந்து வாழவேண்டி யிருக்கிறது. பெண்ணின் உள்ளமும் உணர்வும் பெற்றவர்களுக்குக் கூடத் தெரிவதில்லை பெரும்பாலும்! ராதையின் தந்தையும் தாயும் அதே தன்மையில் தானிருந்தார்கள்.

பருவ மங்கை வீட்டிலே அமைதியற்ற காற்றுப் போல தனிமையில் புழுங்குகிறபோது, இரவின் ஆழத்தில், அடைத்த கதவுக்குப் பின்னால் தந்தை, தாயின் மெல்லிய சிரிப்பும், ரகசியப் பேச்சும் எழும். ராதை விழித்துக் கொண்டு படுக்கையில் கிடப்பாள். அவள் காதில் விழும் ஒலிகள் அவள் கற்பனைக்கு விஷவேகம் கொடுத்து, தேகத்து நரம்புகளில் வெறி ஏற்றும். அவள் புரண்டு புரண்டு தவிப்பாள். பாவம், அனுபவங்கள் எவ்வளவோ பெற்று சுடரொளியாகத் திகழ வேண்டிய தருணி. வாடி வதங்கும் கொடியாகி மனத்தின் அரிப்பிலும், உணர்ச்சிகளின் கொதிப்பிலும் தன்னைக் கறுக்கிக் கொண்டிருந்தாள்.

அப்போதுதான் அவள் பார்வையில் சிவராமன் பட்டான். சிவராமன் அவர்களுக்கு ஏதோ ஒரு விதத்தில் என்னவோ ஒரு உறவு! அவன் வீடும் அவர்கள் வீடும் பக்கத்தில் பக்கத்தில் தானிருந்தன. ஒரே 'காம்பௌண்டு'. இரண்டு வீடுகளையும் தனியாக்கி விடுகிற அந்த வளைவுக்குத் தெரு வாசலும், கதவும் ஒன்றுதான். இரு வீடுகளும் ஒரே மாதிரி அமைப்பில் கட்டப் பட்டவைதான். அடுப்பங்கரை, பட்டாசாலை, திண்ணை முதலிய பிராந்தியங்கள், நடுவிலே வானவெளி, வீட்டு முகப்பிலே உயர்ந்த முற்றம் எல்லாம் இருந்தன. இரண்டு வீடுகளுக்கும் பொதுவாக ஒரு 'பம்பு' தான் இருந்தது.

அவன் அந்தப் பெரிய வீட்டில் தனியாகத்தான் இருந்தான். அவன் தாய், தந்தையர் எல்லோரும் இறந்து பல வருஷங்களாகி விட்டன. கடன் வகைகளில் சொத்தெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து போன பிறகு, அந்த வீடும், ஏதோ கொஞ்சம் நிலமும் மட்டும் தங்கியிருந்தன. 'சரிதான், சாகிறவரை சாப்பாட்டுக்குப் போதும். வேலை கீலை ஒண்ணும் பார்க்க வேண்டியதில்லை' என்று முடிவு கட்டி விட்டவன் அவன். தனது திட்டத்துக்குக் குடும்பவளர்ச்சி வீண் தடங்கலாக அமையும் என்றெண்ணி, கல்யாணமே வேண்டாம் எனத் தீர்மானித் திருந்தான். எத்தனையோ பேர்கள் 'புத்தி' சொல்லிப் பார்த்தும், கேட்காததனால் 'அவனா! உருப்படத் தெரியாதவன்!....எங்கே உருப்படப் போறான்' என்று சமூகப் பெரியார்கள் கைகழுவி விட்டார்கள். அதை யெல்லாம் பற்றி அவன் கவலைப்படவில்லை. ஹோட்டலில் சாப்பிடுவது, இஷ்டம் போல் சுற்றுவது, திடீரென்று நினைத்துக் கொண்டு எந்த ஊருக்காவது பிரயாணம் கிளம்பிவிடுவது என்கிற தனது நியமங்களை ஒழுங்காகச் செய்து வந்தான். அப்பொழுது அவனுக்கு இருபத்தெட்டு, முப்பது வயசிருக்கும்' என்று தெரிந்தவர்கள் பேசிக் கொண்டார்கள்.

அவன் ராதையின் நிலைமையை கவனித்தது உண்டு. பாழாகும் அந்தப் பெண்ணின் வாழ்வை எண்ணிக் கூட அவன் சிலசமயம் வருத்தப்படுவதும் உண்டு. 'பாவம், இப்படித்தான் எத்தனையோ பெண்கள் சமூகத்திலே வதங்கிச் சாகிறார்கள். காலாகாலத்திலே கல்யாணமாகி, அனுபவிக்க வேண்டிய சுகங்களை யெல்லாம் அனுபவிக்க முடியாமல் போகிறபோது, ஏக்கமும் சோகமும் தானாக வளர்கின்றன. பல வருஷங்களுக்குப் பிறகு கல்யாணமானதும் கூட மகிழ்வு இருப்பதில்லை. ஏக்கமும் குமுறலும் ஹிஸ்டீரியாவிலே கொண்டுபோய் விட்டு விடுகின்றன. அப்புறம், பெண்ணுக்கு ஏதோ தெய்வக் குற்றம், பிசாசு பிடிச்சிருக்கு என்று மருந்துக்கும் மந்திரத்துக்கும் பணம் கொட்டி அழுவாங்க. நல்ல குடும்ப வாழ்க்கை!' என்று அலுத்துக் கொள்வான்.

அவன் ராதையை அடிக்கடி பார்க்க முடிந்தது. அவள் அழகாகத்தான் இருந்தாள். 'பிரமாதமான அழகு இல்லை. இருந்தாலும் இவ்வளவு அழகு போதாதா பெண்களுக்கு? சில

மூதேவிகள் இருக்குதே கருங்குரங்கு, மாதிரி! ஊம், இருந்தும் இந்தப் பெண்ணுக்கு கல்யாணம் ஆகவில்லை' என்று அனுதாபம் எழும் அவளைப் பார்க்கும்போது.

ராதை அடிக்கடி அவனைப் பார்த்திருக்கிறாள். வீட்டின் ஜன்னலுக்குப் பின்னால் நின்று கவனித்திருக்கிறாள். வாசற்படியில் நின்று நோக்கியிருக்கிறாள். தண்ணீர் எடுக்கப் பம்புக்குப் போகும்பொழுதும் வரும் போதும் அவனைப் பார்க்கமுடியும். முதலில் அவள் மனம் வேறெவ்விதமான எண்ணத்திற்கும் விதை தெளிக்கவில்லை. ஆனால் காலம் ஓட ஓட, கனவும் நினைவும் அவள் உள்ளத்தில் ஆசைத் தீயைக் கொழுந்து விட்டெழும்படி தூண்டின. அதன் பிறகு அவள் பார்வையில் தனியொளி தெறித்தது. அவள் கறுவிழிகளில் மின்னிய ஒளியில் தனி அர்த்தம் இருந்தது. அவள் இதழ்க் கடையில் அவனுக்காக சதா சிரிப்பு காத்திருந்தது. அவன் பார்வையில் படவேண்டுமென்று, அவனைப் பார்த்து கண்ணிலே கண்ணிட வேண்டுமென்று, அவள் சிரத்தை யெடுத்து அங்குமிங்கும் நடைபழக ஆரம்பித்தாள். எழிலாக மிதந்தாள். ஒளியாக நின்றாள். ஒயிலாகச் சிரித்தாள்.

அவளிடம் ஏற்பட்ட மாறுதல்களை அவன் கவனியாமல் இல்லை. அவன் மனம் அறுக்கும். சில சமயம் தன் பார்வையை வேறுபக்கம் திருப்பிக் கொள்வான். அதிகமாகப் போனால், எழுந்து வீட்டைப் பூட்டிவிட்டு வெளியே போய் விடுவான்.

அவள் உணர்ச்சிக் கிளுகிளுப்பு விசேஷமான செயல் மலர்ச்சிகளுக்குத் தூண்டுதலாயிற்று. அவள் வாசல் படியில் நிற்கும் போது, அவள் கை வளைகள் கலகலக்கும். நழுவாத மேலாடையைச் சரி செய்வது போல் மார்பில் கை நீந்தும். பிறகு மேலாடையை இழுத்து விட்டு, மறைந்து கிடந்த அழகை வெளிச்சமிடச் செய்யும். வளையின் கலகலப்பு அவன் விழிகளின் பிறழ்ச்சியை அங்கு இழுக்கும். அவள் சிரித்து விட்டு, வெட்டும் பார்வை சிந்தி, தளுக்காகத் திரும்பி அழகு நடை நடந்து போவாள் வீட்டினுள்ளே. ஜன்னலின் பின்னே கலகல நாதம் பிறக்கும். களிநகை பூத்த முகம் மலரும்.

சில சமயம் தன் இருகைகளையும் உயரத் தூக்கி, சோம்பல் முறிப்பது போல் நீட்டி நெளித்து, அழகின் அற்புதங்களை டாலடிக்கச் செய்வாள் கன்னி. அவள் பாராத கோணங்கள்

இல்லை. பார்வைக்காக அவள் சித்திரித்துக் காட்டாத வசிய 'போஸ்'கள் இல்லை!

அவனுக்குச் சிரிப்பு வரும். அனுதாபமும் பிறக்கும். கவரப்படாமலும் இல்லை. 'பெண்களுக்கு எப்படி எப்படி வசியக்கலை பயிலவேணும் என்கிற உணர்ச்சி தானாகக் கைவந்த வித்தையாக மிளிர்கிறது. அதை அவர்கள் சிரத்தையோடு வளர்க்கிறபோது அற்புதக் கலையாக ஒளிர்கிறது!' என்று நினைப்பான்.

பருவ கன்னி ராதை சிதறிய கலையொளிகளைக் கண்டு களிக்கும் ரசிகனாக மாறாமல் இருக்க இயலவில்லை அவனால். அவள் தனது திறமையை மெருகிட்டு வளர்த்து வந்தாள் நாளுக்கு நாள்.

அவன் திண்ணையில் இருக்கும் போது, அவள் திண்ணையோரமாக மெது நடைநடந்து, கோணப் பார்வை சிந்திப் போவாள், உடையலங்காரம் செய்து கொள்வதாகப் பம்மாத்துப் பண்ணி அவன் பார்வையில் படும்படி ஏனெனன்னவோ செய்து சிரிப்பாள்.

திடீரென்று ஒரு நாள் 'என்ன மாமா, மணி என்ன ஆகுது?' என்று கேட்டு வைத்தாள். பிறகு 'சாப்பிட்டாச்சா?' என்று கேட்டாள். இப்படி ஏதாவது கேட்க சந்தர்ப்பங்களை சிருஷ்டித்துக்கொண்டாள் ராதை.

அவள் போக்கு அவனுக்குப் புரியாமல் இல்லை. ஆனால் அதை அவன் வளர்த்துப் பாராட்டத் தயாராக இல்லை. என்றாலும் அதைத் தவிர்க்க அவள் இடம் கொடுப்பதாகவும் தெரியவில்லை.

காலையில் போனால் இரவில் வீடு திரும்பும் தந்தை மகள் வாழ்விலே நேர்ந்த பரிணாமங்களை அறிய இடமே இல்லை. தாயின் அறிவுக்கு மகளின் மாற்றம் புலனாகவே யில்லை. தாய் வழக்கம் போல் தனது காரியங்கள், புலம்புதல்கள், குறை கூறல், வம்பளப்பு இவைகளில்தான் தீவிரமாக ஈடுபட்டிருந்தாள். அவளுக்கு சந்தேகம் எற்படாதபடி சாமர்த்தியமாக நடந்துகொள்ளவா தெரியாது ராதைக்கு!

ஒரு நாள் பகல் நேரத்தில், அவள் தாய் கூட வீட்டில் இல்லை. அடுத்த தெருவில் நடந்த விசேஷம் எதற்கோ

போயிருந்தாள். அப்போது பத்து மணியிருக்கலாம். சிவராமன் முற்றத்தில் கட்டிலில் படுத்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தான். திடீரென்று 'மாமா, மாமா' என்று ராதை பதறிக் கூப்பிடும் குரல் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அவள் நின்ற தோற்றம்!

அப்பொழுது தான் அவள் குளித்து முடித்திருக்கிறாள். கரிய கூந்தல் அவிழ்ந்து புரண்டு தொங்கி நீர் சொட்டிக் கிடந்தது. பச்சைக் கரையிட்ட வெள்ளை நிறச் சேலையை ஈரமாக, ஒற்றைச் சுற்றில் கட்டியிருந்தாள். பாக்கி மடித்துச் சுருட்டி தோளில் போடப்பட்டிருந்தது. அங்கங்கே நெளிந்தும் சுழித்தும் உடலோடு ஒட்டியிருந்த அந்த ஈரப்புடவை அவளது வெவ்விய தேகத்தை மறைத்தும் மறையாததுமாய் அழகை அதிகரித்துக்காட்டியது, வனப்பு மிக்க சித்திரத்தை மறைக்க முயலும் கண்ணாடித் தாள் போல. 'மாமா, அவசரமா வாங்க....சீக்கிரம் வாங்களேன். பெரிய தேளு....' என்று பரபரப்போடு, அவள் வலது கரத்தை நீட்டி அசைத்துக் கூப்பிடும் போது, அவன் பார்வை மறையா அழகாய் மிளிர்ந்த அவள் தோள் மீது பட்டு, மஞ்சு மூடிய குன்றுகள் போல் தோன்றிய மார்பு மேடுகள் மேல் பதிந்தது.

அவசரமாக எழுந்த சிவராமன் திகைத்து நின்றான். தனியாக பருவமங்கை இருக்கும் வீட்டிற்குள் போகலாமா என்ற தயக்கம் பிறந்தது. 'ஐயோ, தேளு ஓடிப் போயிடுமே. அப்புறம் பயந்துக்கிட்டே....' அவள் பதறிக் கூறினாள். அவன் துணிந்து போனான். வீட்டினுள் நுழைந்ததும் 'எங்கே, எங்கே பார்த்தே?' என்று கேட்டான்.

ஆனால் அவன் எதிர்பாராதது நடந்தது. 'மாமா!' என்று தாவி அவனைக் கட்டிப் பிடித்துக் கன்னத்தில் முத்தமிட்டாள் கன்னி ராதை. அவன் தலையை இழுத்து உதடுகளில் முத்தமிடத் துடித்தாள். அவள் உடல் கொதித்தது. ஈரத் துணியின் குளுமைக்கும் மேலாக அவளது தேகத்தின் கதகதப்பை அவன் உணர்ந்தான். அவனுக்கு ஒன்றுமே ஓடவில்லை. அவன் தேகத்திலும் சூடேறுவது போலிருந்தது.

'என்ன இது ராதா! சே, தள்ளிப்போ' என்று அவளை விலக்க முயன்றான். அவளோ இறுக அணைத்து, அவளது கனல் உதடுகளை அவன் உதட்டிலே பொருத்தினாள்.

அவளை ஆட்டி வைத்த பருவத்தின் பிசகு அவனையும் உலுக்கி யிருக்கும். அதற்குள்ளாக 'ராதா, ராதா' என்று வெளியே தெருவாசல் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது. மறுபடியும் ஒலித்தது அந்த அழைப்பு.

ராதையின் கைகள் நழுவி விழுந்தன. 'இது நல்லாவே யில்லை, ராதா இப்படியா புத்திகெட்டுப் போறது!' என்று எச்சரித்து விட்டு வேகமாக நடந்து தனது வீட்டுள் புகுந்து மறைந்தான் அவன்.

வெளி வாசல் கதவு திறக்கும் சப்தம் கேட்டது. 'என்ன செஞ்சுக்கிட்டிருந்தே கூப்பிடக் கூப்பிட ஏன்னு கேளாமல்?' என்று கேட்ட தாயின் குரலும், 'குளிச்சுத் தலைதுவட்டிக்கிட்டு நின்னேன். சேலையைப் புழிஞ்சு கட்டிக்கிட்டுத் தானே வர முடியும்' என்ற மகளின் குரலும் அவன் காதில் விழுந்தன.

அவன் நெஞ்சு 'திக்திக்' கென்று அடித்துக் கொண்டிருந்தது. 'என்ன துணிச்சல்!....வயது வந்த புள்ளெயை வருஷக் கணக்காக வீட்டுக்குள்ளே அடைச்சு வச்சிருந்தால் இப்படித்தான். காலாகாலத்திலே எவனுக்காவது கட்டிக் கொடுத்து அனுப்பாமல், தாய் தகப்பன் மாரு மட்டும் குஷாலா யிருந்தால், மகள் தனக்கு வழி தேடத் தானே துணிஞ்சிட்டுப் போறா!' என்று எண்ணினான்.

'சே' வீணாக் கெட்டபெயரு எதுக்காக ஏற்கணும்? சங்கரன் பிள்ளைக்குத் தெரிஞ்சால் அவரு மகளை நான்தான் கெடுத்து விட்டேன்னு கோபிப்பாரு! பொதுவாக ஊரிலே நடப்பதே இதுதானே. பெண்கள் துணிந்து ஒரு காரியத்தைச் செய்து போட்டாலும் கூட, பழி ஆண்கள் மேலேதானே விழுது... நாளைக்கே நான் ஊர் சுற்றப் போகவேண்டியதுதான். இந்தப் பெண் கல்யாணமாகிப் புருஷன் வீடுபோய்ச் சேர்ந்தாள்னு தெரிஞ்சதும்தான் திரும்பனும். திரும்பவும் இதுமாதிரி விபரீதத்துக்கு இடமேற்படப்படாது' என்று தீர்மானித்துக் கொண்டான்.

ராதையும் அவள் தாயும் அவர்கள் வீட்டு அடுப்பங்கரைக்குப் போய்விட்டார்கள் என்று தெரிந்ததும், மெதுவாக தன் வீட்டுக் கதவைப் பூட்டிவிட்டு, தெருவாசல் கதவையும் இழுத்துச் சார்த்திவிட்டு வெளியேறினான். ராதையை அவன் திரும்பப் பார்க்க விரும்பவே இல்லை.

சிவராமன் பகல் பூராவும் எப்படியோ பொழுது போக்கிவிட்டு, இரவிலும் சினிமாப் பார்த்துவிட்டு, வெகு நேரம் கழித்தே வீடு திரும்பினான். அவன் கண்கள் அடுத்த வீட்டுப் பக்கம் பாய்ந்தது. அங்கு இருளும் அமைதியும் நிலவின. அவன் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டான். 'நல்ல வேளை! எல்லோரும் தூங்கியாச்சு... அதிகாலையில் எழுந்து முதல் ரயிலைப் பிடிக்க வேண்டியது தான்' என்று நினைத்தான். தெருவாசல் கதவைத் தாளிட்டு விட்டு, வழக்கம்போல் முற்றத்தில் கட்டிலை இழுத்துப் போட்டு படுத்தான். அயர்ந்து தூங்கி விட்டான்.

கதவு தாளிடும் ஓசையும், கட்டிலை இழுத்த சப்தமும் அடுத்த வீட்டில் தூங்கியும் தூங்காத நிலையிலே புரண்டு கிடந்த ராதைக்கு 'அலாரமாக' உதவின. அவள் விழித்துக் கொண்டாள். அவளுக்கு கொதிப்பு தணியவில்லை. பொறிபட்டுக்கனன்ற உணர்வுத் தீ மங்கவில்லை; மடியவில்லை. தனக்கு உணவு பெற்றுத் திருப்தியுற்ற பிறகுதான் ஒருமாதிரி ஒடுங்கும். அவள் உடற்பசியும் உள்ளத்து அரிப்பும் அவளுக்குத் துணிவு தந்திருந்தன. அவள் பலப்பல எண்ணங்கள் வளர்த்தபடி கிடந்தாள்.

மெதுவாக எழுந்து கடியாரத்தைப் பார்த்தாள். மின்மினிப் பூச்சிபோல் மினுத்த 'ரேடியம் டயல்' மினுக்கிக் காட்டியது. அப்போது மணி இரண்டேகால் என்பதை. எங்கும் அமைதி. அவள் மெதுவாக, ரொம்ப ஜாக்கிரதையுடன், கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். வெள்ளியைக் காய்ச்சி ஊற்றியதுபோல பால் நிலவு நின்று காய்ந்தது. நிலவும் இருளும் படிந்து கிடந்தன அவ்வீட்டு வளைவின் வான வெளியிலே. அவள் அடுத்த வீட்டு முற்றத்தின் பக்கம் போனாள்.

இடைவெளியில் படிந்து கிடந்த நிலவின் ஒளிவீச்சால் இருள் கவிந்திருந்த அந்த முற்றம் வெளிறிட்டிருந்தது. சுவரோரத்தில் கட்டிலில் அவன் அயர்ந்து தூங்கிக் கிடந்தான்.

ராதை மெதுவாக அவனருகில் போனாள். அவன் அழகை அள்ளி விழுங்குபவள் போல நோக்கி நின்றாள். ஏதோ இனிய கனவு துயிலில் அவனோடு கொஞ்சிக் கொண்டிருந்தது போலும்! அவன் உதடுகளில் சிரிப்பு நெளிந்திருந்தது. அவன் என்னவோ முனகியபடி புரண்டான்.

தன்னைப் பார்த்து விழித்துக் கொண்டுதான் முனங்குகிறானோ என்று திடுக்கிட்டாள் ராதை. இல்லை, வெறும் கனவு. அவளுக்குச் சிரிப்பு வந்தது. அவனையே பார்த்து நின்ற கன்னி துணிந்து விட்டாள். ஆழ்ந்த இருட்டு. நல்ல நிலவு. நெடு இரவின் தனிமை. கனவிலே மிதக்கும் அவன். உணர்ச்சி மீறிய அவள் சந்தர்ப்பம் சிரித்தது.

ராதை புன்னகையோடு அவனருகில் ஒண்டினாள். அவனை இழுத்தணைத்து, உதடுகளில் சூடாக முத்தமிட்டுக் களித்தாள். அவன் கனவு அவளுக்குத் துணை செய்தது. கனவின் உயர்வு என்ற மயக்கத்தோடு சடக்கென விழித்த அவன் இனிய நனவிலே சிக்கியதை உணர்ந்ததும் 'ராதா' என்றான் மெதுவாக.

'ஊம். நான்தான் பேசாமலிருங்கள்' என்று ரகசியம் பேசினாள் அவள்.

அவன் என்ன கட்டையா! உணர்ச்சி வெற்றி பெற்றது.

அது நடந்தது நான்கு வருஷங்களுக்கு முன்பு! அது மற்றவர்களுக்குத் தெரியவே தெரியாது.

விடியற்காலக் கோழி கூவியபோது, ராதை சிரித்தபடி துள்ளி எழுந்து அவனுக்கு அன்பு முத்தம் அளித்து விட்டு வீட்டினுள் போய் தனது இடத்திலே படுத்து விட்டாள். அவன் ஆற்றங்கரை நோக்கிப் போய்விட்டான். திரும்பி வந்ததும் யாத்திரா மார்க்கத்துக்கு வேண்டியனவற்றை எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டான். அவன் போவதை ஜன்னலுக்குப்பின் நின்று ஏக்கத்தோடு வருத்தத்தோடு கவனித்துக் கொண்டிருந்தாள் ராதை. அவன் அந்தப் பக்கம் திரும்பவேயில்லை.

அவன் இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு திரும்பி வந்த போது 'என்ன சிவராமு, ராதை கல்யாணத்துக்குக்கூட வராமல் இருந்துட்டியே' என்று வரவேற்பும் வருத்த வுரையும் அளித்தார் சங்கரன் பிள்ளை.

'வரமுடியலே. அங்கே இங்கேன்னு பிரயாணம் அப்டீ இழுத்துக்கிட்டே போயிட்டுது' என்று சொன்ன சிவராமன் ராதையின் வாழ்க்கை விவரங்களை விசாரித்துத் தெரிந்து கொண்ட பிறகு தான் திரும்பி வந்தான் என்பதைக் காட்டிக் கொள்ள வில்லை. சங்கரன் பிள்ளை எவ்வளவோ முயன்றும்

வேறிடம் கிடையாமல், தூரத்து ஊரில் வேலை பார்க்கும் ஒருவருக்கு இரண்டாம் தாரமாக ராதையைக் கட்டிக் கொடுத்திருக்கிறார்; மாப்பிள்ளைக்கு நாற்பத்தைந்து வயது இருக்கும்; முதல் மனைவி குழந்தைகள் எதுவும் விட்டுப் போகவில்லை என்கிற விவரங்களை அவனுக்குச் சொன்னார். அவனும் புதிதாக அறிந்து கொள்பவனைப் போல தலையை யாட்டி வைத்தான்.

'மாப்பிள்ளைக்கு நாற்பத்தஞ்சு வயசுங்கிறது என்ன பெரிய வயசா! அதொண்ணுமில்லே. சொல்லப்போனா, வயசானவங்க தான் பெண்டாட்டியை அருமையா, செல்லமா, அவளுக்குக் குறை எதுவுமில்லாமல் கண்ணு போலக் கவனிப்பாங்க. எங்கேயாவது ராதை சௌக்கியமாக இருந்தால் சரிதான்' என்று முடிவுரை கூறினார் தந்தை. 'ஆமாம்' போட்டுவைத்தான் அவன்.

உணர்ச்சி விதைத்த அந்த விபரீத நாடகத்திற்குப் பிறகு சிவராமனுக்கு ராதையைச் சந்திக்க வேண்டுமென்றாலே என்னவோ போலிருந்தது. அவள் தாய் வீடு வருகிறாள் என்று கேள்விப்பட்டதுமே அவன் எங்காவது பிரயாணம் கிளம்பி விடுவது உண்டு. ராதையின் கணவன் ரொம்பத் தொலைவிலுள்ள ஊரில் உத்தியோகத்திலிருந்ததால், அவளும் அடிக்கடி பிறந்தகம் வரமுடியாமல் போயிற்று.

அப்படியும் கூட ஒரு முறை அவர்கள் சந்திக்க வேண்டிய தாயிற்று. அப்போது அவள் கன்னம் சிவக்கவுமில்லை! அவள் நாணிக் கோணித் தயங்கவுமில்லை. சகஜமாகப் பேசினாள். அவனுக்குத் தான் ஒரு மாதிரி இருந்தது. அன்று அவள் கேட்டாள் 'உங்களுக்குக் கல்யாணமாகிவிட்டது என்று கேள்விப் பட்டேனே!' என்று. 'ஆமா. அவள் அம்மா வீட்டுக்குப் போயிருக்கிறாள்' என்று சொன்னான். 'ஏது! கல்யாணமே பண்ணிக் கொள்ளப் போவதில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களே' என்று குறும்பாகச் சிரித்தாள் ராதை. 'எல்லாம் நாம் நினைக்கிறபடியா நடக்கு! திடீர்னு எதிர்பாராமல் என்னவெல்லாமோ நடந்து எல்லாவற்றையும் மாற்றி விடுகிறது!' என்று கூறி வெளியே போய்விட்டான் சிவராமன்.

அந்தச் சந்திப்பு நடந்து கூட மூன்று வருஷங்கள் போய்விட்டன. அவன் மனைவி இறந்துபோனாள் அதற்குப் பிறகு.

அதுகூட ஒன்றரை வருஷங்களுக்கு முன்பு.

இதையெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது 'காலம் என்ன வேகமாக ஓடுகிறது பார்!' என்று வியக்கத் தோன்றும். காலம் சிலசமயம் மீண்டும் மீண்டும் எதிரொலிக்கவும் செய்யும் என்பது அவனுக்குத் தெரியும். அதனால்தான் அவன் ராதையைப் பார்த்துவர அவள் வீட்டுக்குப் போகமாட்டேன் என்று சாதித்தான். ஆனால் அவளது பெற்றோர்களே வரமுடியாமல் போனதனால், அவனை அனுப்பி வைத்தார்கள். அவனுக்குப் பழம் நினைவுகள் உதைப்பு கொடுத்தன.

'அநேகமாக அவள் மறந்திருப்பாள். அவள் வாழ்வின் போக்கு அவளைப் புதியவளாக மாற்றியிருக்கும்' என்று நினைத்தான். அவள் மாறவில்லை என்கிற உண்மை புரிந்ததும் அவனுக்குக் குழப்பம்தான் ஏற்பட்டது!

## 2

ராதை மாறவில்லைதான்!

காலம் அவள் மனப்பண்பிலே மாறுதல் எதுவும் விதைக்க வில்லை.

சூழ்நிலையும், வாழ்வின் மறுமலர்ச்சியும் அவளது பழைய நினைவுகளைத் திரையிட்டு மூடினவே தவிர, ஆழப் புதைத்து மறதிச் சமாதி கட்டி விடவில்லை.

ராதையின் கணவர் வயதானவர்தான். அவளை அன்புடன் நடத்தி வந்தார். என்றாலும் அவள் மீது அர்த்தமற்ற, காரணமற்ற சந்தேகம் வளர்ந்து வந்தது அவர் உள்ளத்தில். அவள்மீது தவறு எதுவுமில்லை. அவருக்குத் தன்னிடமே நம்பிக்கை இல்லாதது தான் காரணம். இளம் பெண்ணை வயதான தன்னுடைய அன்பு திருப்திப் படுத்துமோ, படுத்தாதோ என்கிற ஐயம் அளவுக்கு அதிகமான உபசரிப்புகள் காட்டவும், அர்த்தமற்ற சந்தேகங்கள் கொள்ளவும் இடமளித்தது.

அவளைத் திருப்திப்படுத்த பட்டாடைகளும் நகைகளும் வாங்கித் தருவார். தினந்தோறும் மல்லிகைப் பூ வாங்கிச் சூட்டுவார். அழகாகத் தலை பின்னி பூச்சூடி, வண்ணப் பட்டுடுத்தி,

தனது அலங்காரப் பெருமையை மற்றவர்கள் பார்க்க வேண்டும் என்கிற பெண்மைப் பண்போடு அவள் வாசலில் நிற்கும்போது, போகிறவர் வருகிறவர்கள் பார்வை அவள் மீது படவும் அவள் முகத்தில் எழும் சிரிப்பைக் காணும்போது அவருக்கு எரிச்சல் கிளம்பும். முதலில் அவரே தூண்டி விட்டுப் பிறகு மௌன ஆதரவு தந்து, பொறுத்துக் கொள்ள முடியாத பக்குவ நிலையை அடைந்தார் அவர். 'என்னத்துக்கு ராதா இந்தத் தேவடியாத்தன மெல்லாம்?' என்று சில சமயம் சீறி விழுவார்.

முதலில் அவருக்கு கௌரவம் கொடுத்த ராதை வரவர அவரது கருத்துக்களை அலட்சியம் செய்யலானாள். அவள் தனது இஷ்டம்போல் அழகு செய்து மினுக்கினாள். பெருமையோடு திரிந்தாள். ஆனால் அவள் கணவனை ஏமாற்ற வில்லை. அவருக்கு வஞ்சகம் நினைக்க வில்லை. நித்ய கன்னியாகவே இருந்துவிட நேரிடுமோ என்றிருந்த அச்சத்தை மாற்றி அவளுக்கு மஞ்சளும் பூவும் மதிப்பும் நிறைந்த புதுவாழ்வும் பெருமையும் வசதிகளும் தந்த கணவனுக்குத் தான் கடமைப்பட்டவள் என்ற நன்றி நினைவு அவளுக்கிருந்தது. நகையிலும், பட்டாடைகளிலும் அழகுசெய்து பெருமைப்பட்டுக் கொள்வதிலும் திருப்தி கண்டு வந்தாள் ராதை.

அவள் நினைவு பூமியிலே தன் வாழ்விலேயே புது அனுபவம் கற்கமுடிந்த அமர இரவைப் பற்றிய எண்ணம் மக்கிப் போகவில்லை. அது கிளர்ந்தெழுந்து வேரோடிக் கொடிபரப்பி நன்றாக மலர்ந்து தலையசைத்து மிளிர்ந்தது. அந்த நனவுச் சம்பவத்தின் கனவுகள் என்றும் பசிய நினைவாகி அவளுக்கு மகிழ்வு தந்தன. சிவராமனை எண்ணும்போதே அவளுக்குச் சிரிப்பு வரும். திரும்ப அவரைச் சாவகாசமாகச் சந்தித்துப் பேச முடியவே இல்லையே என்ற வருத்தம் அவளுக்கு இருந்தது. அந்நிலையிலே தான் சந்தர்ப்பம் அவளுக்கு மீண்டும் துணை செய்தது.

சிவராமன் வருவதற்கு முன்னதாகவே, அவளுக்குக் கட்டியம் கூறி வந்து நின்றது அவள் தந்தை எழுதியிருந்த கடிதம். அது வந்ததிலிருந்து இரண்டு தினங்களாக அவள் அவன் வரவை எதிர் நோக்கிக் காத்திருந்தாள். அவர் அதை மறந்தாலும் மறந்திருப்பார் என்று எண்ணிய ராதைக்கு 'இல்லை' என்று அறிவுறுத்தியது அவன் குழப்பம். அவன் குழப்பம் கண்டு அவள் சிரித்தாள்.

மத்தியானச் சாப்பாட்டுக்கு வந்தார் ராதையின் கணவன். அவனை வரவேற்றார். உபசரித்தார். ராதை சிவராமனுக்குக் காட்டிய உபசரணைகளும், அவள் பெற்ற மகிழ்வும், அதிக சிரத்தையோடு அவள் தன்னை அழகு செய்துகொண்டு மினுக்கிய போக்கும் அவர் மனதில் என்னவோ செய்தது. அது மறைந்தது, அவன் சீக்கிரமே ஊருக்குப் போக வேண்டும் என்று அவசரப் பட்டபோது.

'நாளைக்கே திரும்பிடலாம்னு நினைக்கிறேன்' என்று சிவராமன் சொன்னபோது ராதை கணவன் முகத்தைப் பார்த்தாள் அவருக்கு மகிழ்வுதான் என்றாலும் உபசாரத்துக்காகச் சொல்லி வைத்தார்: 'என்ன தம்பியா பிள்ளே அவ்வளவு அவசரம். இவ்வளவு தூரம் வந்ததோ வந்தாச்சு. பொங்கல் கழிச்சுத் தான் போங்களேன். அங்கே என்ன காரியம் கெட்டுப்போகப் போகுதாம் நீங்க இல்லாமே!'

ராதை முகத்தில் மகிழ்வு பொங்கியது. 'ஆமா, ரெண்டு நாள் தங்கி யிருந்துவிட்டுத் தான் போகணும். அப்படி என்ன அவசரமாம் வந்தவுடனேயே திரும்பிப் போகணும்னு' என்று சொன்னாள்.

சிவராமன் ஒன்றும் பேசவில்லை. நாளைக்கு உறுதியாகச் சொல்லி விட்டு, இஷ்டம்போல் கிளம்பிவிட வேண்டியதுதான் என்று தீர்மானம் செய்துவிட்டான் அவன். அதனால் வீணாக எதற்கு வாக்குவாதம் என்று நினைத்தான்.

ராதையின் கணவன் மறுபடியும் ஆபீசுக்குப் போய் விட்டார். சிவராமன் மத்தியானத்துக்கு மேல் வீட்டில் தங்கி யிருப்பானேன், ஊரையாவது சுற்றிப் பார்க்கலாமே என்று நினைத்தான். தனது எண்ணத்தை அவளிடம் அறிவித்தபோது 'அதெல்லாம் இப்ப எதுக்கு வந்த அலுப்போடு? படுத்துக் தூங்குங்க. சாயங்காலம் காபி சாப்பிட்டு விட்டு வெளியே போகலாம்' என்றாள். 'டிபன் என்ன பண்ணலாம்' என்று கேட்டாள்.

'விசேஷமா எனக்குன்னு எதுவும் வேண்டாம். வழக்கம் போல் செய்வதைச் செய்யேன்' என்று 'சுரத்' இல்லாமல் அவன் பேசியது அவளுக்கு ஏமாற்றமே தந்தது.

இருந்தாலும், அவனுக்கு அதிகம் பிடிக்கும் என்று அவள் நினைத்த பலகாரங்களைச் செய்து, காபி போட்டுக் கொண்டு

வந்து வைத்தாள் ராதை.

'இதெல்லாம் ஏன் வீணாக!' என்று அவன் அலுத்துக் கொண்டது அவளுக்கு சிரிப்பு தந்தது. அவன் காப்பி சாப்பிடும் போது அவள் திடீரென்று கேட்டாள்; 'நாம் சினிமாவுக்குப் போகலாமா' என்று.

'அவாள் இல்லாமே எப்படிப் போறது? வேண்டாம்' என்றான்.

'நல்ல படம் ஓடுது இப்போ. அவுகளிடம் எத்தனையோ நாளாத்தான் நானும் சொல்லிக்கிட்டிருக்கேன். அவுகளுக்கு சினிமாப் பார்க்க நேரம் ஏது! எப்ப பார்த்தாலும் வேலை, வேலை! நாம சினிமாவுக்குப் போனால், அவுக வறதுக்கு முன்னாலேயே வந்திடலாம்' என்று ஆர்வமாகச் சொன்னாள் அவள்.

அவன், 'முடியாது. அவாளுக்குத் தெரிஞ்சா கோபப்படுவாக. அதெல்லாம் வேண்டாத வேலை' என்று கூறி அவளுக்கு ஏமாற்ற மளிக்க நேர்ந்தது.

அவன் ஊரைச் சுற்றிவிட்டு இரவு நேரத்தில் வந்து சேர்ந்தான். அவன் வருவதற்கு முன்பாகவே அவர் வந்திருந்தார். அவர் அன்று சீக்கிரமாகவே திரும்பி விட்டார். அவர் எதிர்பார்த்ததுபோல் இல்லை, அவன் வீட்டில் இராமல் சும்மா சுற்றப் போய் விட்டான் என்று தெரிந்ததும் அவருக்கு சந்தோஷமே பிறந்தது. 'நல்ல மனுஷன்' என்று சொன்னது அவர் மனம்.

இரவில் பத்தரை மணிவரை ஊர்க்கதைகள் பேசிப் பொழுது போக்கி விட்டுத் தூங்கப் போனார்கள் அவர்கள். ராதையும் கணவரும் மாடியறைக்குப் போனார்கள். சிவராமன் கீழே தாழ்வாரத்தில் படுத்துக் கொள்கிறேன் என்று பிடிவாதம் செய்து விட்டான். அது வானவெளியை அடுத்திருப்பதால் காற்றோட்ட மிருக்கும், நல்ல தூக்கம் வரும் என்று சொல்லி விட்டான்.

அப்படியே படுத்தும் நன்றாகத் தூங்கத் தொடங்கினான்.

எவ்வளவு நேரமிருக்கும் என்று தெரியாது. திடுக்கிட்டு விழித்தான் சிவராமன். அவன் முதுகில் ஏதோ பூச்சி ஊர்வது போன்ற உணர்ச்சியால் அவன் திடுக்கிட்டான். பக்கத்தில் கரிதாய், நெடியதாய் யாரோ அல்லது எதுவோ ஒன்று நிற்பது போல் தோன்றியது. யாராவது தானா அல்லது பிரமையா என்று தீர்மானிக்க முடியாமல் அவன் திகைத்தான். திடீர் விழிப்பு

ஏற்படுத்திய அதிர்ச்சி அவனுக்கு அர்த்தமற்ற நடுக்கம் கொடுத்தது. பக்கத்தில் மல்லிகைப் பூ மணம் கம்மென்று பரவி நிற்பதையும், பெண்மையின் தனி ரக வாசனை அலைகள் நிலவுவதையும் அவன் உணர முடிந்தது.

எங்கே இருக்கிறோம் என்ற தெளிவு பிறந்ததும், அவன் உள்ளத்துக் குரல் 'ராதா' என்று சொல்லாக உதிர்ந்தது.

'ஊம்' என்று குழைந்து அவன் அருகில் உட்கார்ந்து குனிந்தாள் ராதை.

'என்ன இது ராதா' என்று அவன் அவசரமாக எழ முயன்றபோது அவள் அவனைப் படுக்கையிலேயே அழுத்தி, உதடுகளில் உணர்ச்சியோடு முத்தம் பதித்தாள்.

'என்ன ராதா, அவர் எழுந்து விட்டால், அப்புறம்....' என்று நடுக்கத்தோடு சொன்னான்.

'ஊஹுங். அவர் தூங்க ஆரம்பித்தால் செத்த பிணந்தான். இனி மேல் விடியக்காலம் ஏழரை மணிக்குத்தான் எழுந்திருப்பார். நீங்க என்ன இப்படி பயந்து சாகுறீங்க!' என்று கிளுகிளுத்தாள் மங்கை.

'இது நல்லாயில்லை. கல்யாணமாகிக் குடியும் குடித்தனமுமாக இருக்கும் போது....'

மேலே பேசமுடியவில்லை. அவனை அவள் பேசவிட்டால் தானே! முத்த மழை பெய்து கொண்டிருந்தது அவன் முகத்தில்.

'இதுவரை அந்தக் கிழடுக்கு நான் துரோகம் செய்யாமல் இருக்கிறேனே, அதற்கே அது சந்தோஷப்படணும். ஆனால், அது எடுத்ததுக் கெல்லாம் சந்தேகமும், கோபமும்....சேய்!' என்று முனங்கினாள் ராதை.

'உங்களுக்கு முந்திய இரவு ஞாபக மிருக்குதா?' என்று கேட்டுச் சிரித்தாள் ராதை.

'அப்போ என்னவோ அப்படியாச்சு. இப்போ....'

'இப்பவும் நாம் ஒண்ணும் மாறிப் போகலே' என்று கூறி, அதற்கு உறுதிப்பதிவு போல அழுத்தமாக இதழ்களோடு இதழ்கள் பதித்தாள் அலங்காரி!

விடிந்தது. எதுவுமே நடவாதது போல் நடந்து கொண்டாள் ராதை.

எழுந்து உட்கார்ந்து சாவதானமாக வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த ராதையின் கணவன், வாய்க்காலுக்குப் போய் குளித்து விட்டு வந்த சிவராமனைப் பார்த்ததும் 'ஏது, நீங்க அதிகாலையிலேயே எழுந்து குளிச்சிட்டு வந்தாச்சு போலிருக்கே!' என்று அதிசயப்பட்டார்.

சாப்பிட்டு விட்டு அவர் ஆபீசுக்குப் போகும் முன்பு சிவராமன் அவரிடம் தீர்மானமாக அறிவித்து விட்டான்- 'இன்று மத்தியான ரயிலுக்கு ஊருக்குப் போறேன். அங்கே முக்கிய அலுவல்களிருக்கு' என்று.

அவருக்கு அவன் முடிவு திருப்தியே தந்தது. எனினும் ஒப்புக்குச் சொல்லி வைத்தார்: 'ரெண்டு நாள் தங்கி விட்டுப் போகலாம். நீங்க என்னடான்னா இப்படி அவசரப்படுறீங்க. சரி, போயிட்டு வாங்க!'

அவர் போனபிறகு ராதை சிரித்தபடி முன் வந்து நின்றாள். 'ஊம், ஊருக்கு போறீகளாக்கும்! ஏன்' இன்னுமொரு நாள் இருந்து விட்டுப் போங்களேன், என்றாள்.

அவன் பரபரப்போடு 'போதுமம்மா உபசாரம்! நான் போய் வருகிறேன்' என்று கூறினான். அவன் அப்படிச் சொன்ன தினுசு அவளுக்குச் சிரிப்பே தந்தது.

'நீங்க போனால் என்ன! பொங்கல் கழிச்சு ஒரு வாரத்திலே நான் அங்கு வந்து சேருவேன். அம்மா அப்பா கிட்டே சொல்லுங்க' என்றாள் குறும்பாகச் சிரித்தபடி.

'நீ வரப் போறியா! எப்போ!'

'ஏன், அதுக்கு முன்னாலேயே எங்காவது ஓடிப்போகலாம்னு கேட்கிறேளா?' என்று கேட்டு விட்டுச் சிரித்தாள் ராதை. தொடர்ந்து அவள் கணவன் சொன்னதைப் போலவே நடித்துக் கூறினாள்: 'ஐயோ பாவம், நல்ல மனுஷன்!'

அவளுக்கு அதிகம் சிரிப்பு பொங்கியது.. சிரித்தாள். பண்ணையார் வீட்டுக் காளைகளின் கழுத்திலே கட்டியிருக்கும் மணிச் சலங்கைகளைக் குலுக்கி ஒலி எழுப்புவது போல, கலகல

வென்று சிரித்தாள் ராதை.

சிவராமன் அவளையே பார்த்தான். அவனுக்கும் சிரிப்பு வந்தது. சிரித்தபடி 'சரி போய்வாறேன்' என்று சொல்லி தெருவில் இறங்கினான்.

'போனதும் காயிதம் போட வேண்டாம். ஒரு வாரத்திலே நானே வந்து சேருவேன்' என்று சொல்லி வாசல்படி வரை வந்து சிரித்து வழியனுப்பினாள் ராதை.

ரயிலேறிய பிறகு கூட அவளது சிரிப்பின் ரீங்காரம் அவன் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது.



# குமாரி செல்வா

## ஆசிரியர் பரமசிவம்

அவர்தான் அற்புதமான காதல் கதைகள் எழுதிப் பெயர் பெற்றவர் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே!

-'வால் நட்சத்திரம்' பத்திரிகை நடத்திக்கொண்டிருந்த காலம் அது.

ஆசிரியரின் பாலிஸியே தனி. சுருக்கமாகச் சொன்னால், அமெரிக்கத்தனம்'தான் அவரது பண்பாடு. அடிச்சு விளாசல், அபாரமாக அளத்தல், சுத்த சுய விளம்பரம், அற்புதப் புதுமை, துணிகர ஸ்டன்ட், திடீர்த் தாக்குதல்-இப்படி விவரிக்கலாம் அவரது குணாதிசயங்களை! அவரது பண்புகள் அத்தனையும் அவர் பத்திரிகையில் வெளிச்சமிடாமல் போகுமா!

பரமசிவத்தின் 'வால் நட்சத்திரம்' ரொம்ப காலம் வால்த்தனம் பண்ணவில்லை. அதன் கடைசி இதழுக்கு முந்திய இதழ் அன்றுதான் பத்திரிகைச் சந்தையிலே பகட்டாகச் சதிராடக் கிளம்பியிருந்தது. அட்டையிலே ஆடும் குமாரியின் அற்புதத் தோற்றம் மின்னியது.

தனது அறையிலே தனியாக உட்கார்ந்திருந்த ஆசிரியருக்குப் பொழுது போகவில்லை. போதிய உற்சாகமில்லை. ஆகவேதான் எழுதியிருந்த வர்ணனை ஒன்றைப் படித்து ரசிப்பதில் ஆழ்ந்திருந்தார்.

பத்திரிகைக்காரர்களையும் வாசகர்களையும் திடுக்கிடும்படி, திகைக்கும்படி, மகிழ்ந்து போகும்படியெல்லாம் செய்யும் திறமை பெற்றிருந்த பரமசிவம் அவ்வளவு உணர்ச்சிகளையும் அனுபவிக்க நேர்ந்தது எதிர்பாரா வகையிலே.

ஆசிரியர் அறையின் ஆடும் கதவு சூறைக் காற்றால் மோதுண்டதுபோல் படீரெனத் திறந்தது. பரமசிவம் எரிந்து விழுவதற்குள் திடும் பிரவேசம் செய்தாள் ஒரு யுவதி. அந்த இதழின் அட்டைச் சித்திரம் நேரடி விஜயம் செய்திருப்பதை உணர்ந்ததும் எரிக்கும் பார்வை சிந்தாமல் இனிய சிரிப்பையே

உதிர்த்தார் பரமசிவம்.

'குமாரி செல்வாவுக்குக் குதித்துக் குதித்தோடி வரத்தான் தெரியுமே தவிர, தென்றல் நடை நடக்கத் தெரியாது போலும்!' என்றார் அவர்.

'போதும்!' எனச் சிடுசிடுத்தாள் சிங்காரி. நீலப் பாவாடை அலையென ஆட, ரோஜா நிறத் தாவணி அசைந்தாட, இரட்டைப் பின்னல் நெளிந்தாட, கரு விழிகள் நில்லாது சுழன்றாட ஓடி வந்த குமாரி அமைதியாக நிற்கத் தெரியாதவள் போல் அசைந்தாடி நின்றது ஆசிரியரின் விமர்சனத்திகு அழுத்தம் கொடுத்தது.

'உட்காரலாமே!' என்றார் அவர்.

'இங்கு நான் உட்காருவதற்காக வரவில்லை!' என்று சிணுங்கினாள் எழிலி.

'சந்தோஷம். அப்போ தாராளமாக நில்லுங்கள்!' எனக் கனைத்தார் பரமசிவம்.

'சும்மா நின்று கொண்டிருப்பதற்காகவும் வரவில்லை!' என்று சீறினாள் பாவை.

'ரொம்ப சந்தோஷம். கோல மயில் போலக் குதித்தாடுங்கள். வன்னப் புறா போலே வட்டமிட்டு....'

'நிறுத்துங்கள் ஸார்!' என்று பாய்ந்தது அவளது கட்டளை. ஆசிரியர் திகைத்து விட்டார். அவர் மேலும் திகைக்கும்படி சொன்னாள் அவள்:

'நீங்கள் மகத்தான திங்கு இழைத்து விட்டீர்கள். எனக்கு இதைவிட வேறு அகௌரவம் என்ன வேண்டும்?'

'என்ன? என்ன விஷயம்?' -உண்மையாகவே அவருக்கு விளங்கவில்லைதான்.

'என்னைப் பற்றி தப்புந் தவறுமாக எழுதிவிட்டு....'

'அப்படி ஒன்றும் தவறுதலாக எழுதவில்லையே! உங்களுக்கு ஐஸ் க்ரீம் பிடிக்கும் என்று எழுதியது தப்பா? தினம் ஒரு டஜன் ஐஸ்க்ரீம் சாப்பிடுவாள் என்றது தவறா? கன்றுக் குட்டிபோல் குதித்தோடி வரும் குணம் என்று குறிப்பிட்டது....'

'அதெல்லாமில்லை. வர்ணனையில்....'

'பாவாடையழகியாகக் காட்சி தரும் செல்வா பைஜாமா சுந்தரியாகத் திகழ்வாள் திடீரென்று. ஸாரி கட்டிய சிங்காரியாக மாறுவாள். கவுனணிந்த கட்டழகி பரட்டைத் தலையுடனே காட்சி தருவாள். ஒற்றைச் சடை ரெட்டைப் பின்னல்களாகத் துவளும்.... இதை ஆட்சேபிக்கிறீர்களா?' என்று கேட்டார் அவர்.

'இல்லை.'

'ஊம்?....விஷயத்தை விளக்கமாகத்தான் சொல்லுங்களேன்!' என்று மனுச் செய்தார் ஆசிரியர்.

'உயரம் ஐந்தடி மூன்றங்குலம். நிறம்-ரோஜாப் பூவேதான். நிறை நூற்றுப்பத்து பவுண்டு. பாடி 33 1/4 அங்குலம். இடுப்பு 32 1/4 அங்குலம்; இடை 31 1/4 அங்குலம்-இப்படியா எழுதுவது?' என்று உறுமினாள் அவள்.

'உங்களிடம் கேட்டு விட்டுத்தானே எழுதினேன். இதில் வந்து என்ன தப்பு இருக்கிறது?'

'மண்ணாங்கட்டி! எனது உருவம் ஏணி மாதிரியாகவா இருக்கிறது? உடுக்கிடை, சிற்றிடை என்றெல்லாம் ரசிகர்கள் வியந்து பாராட்ட வேண்டிய இடையில் நயத்தைக் கெடுத்து இவளென்ன உரலோ என எண்ணும்படியாக எழுதிவிட்டீர்களே ஐயா! இதிலென்ன தவறு என்று வேறு கேட்கிறீர்கள். நன்று நன்று நும் ஆசிரியத் திறமை! என்று நீட்டி முழக்கினாள் குமாரி.

'எனக்கெதுவும் புரியவில்லை அம்மானை! புரியும்படி பேசுவதே நல்லதுகாண் அம்மானை!'

'புரிய வைப்பதற்காகத்தானே வந்தேன். என் இடையின் அளவு 31 1/4 அங்குலமல்ல. நீங்களே அளந்து பாருங்கள்' என்று சொல்லி நேராக நின்றாள் அப் பூங்கொடி.

ஆசிரியர் பரமசிவம் செயலற்றுப் போனார். எத்தனையோ சவால்களை ஏற்றுக்கொண்ட சூரப்புலிதான் அவர். 'வரலாறு விஷயத்திலே புதுமையாக எழுதலாம் என்று துணியப் போய் வீணான வில்லங்கம் வந்து விட்டதடா பரமசிவம்! அட பரமசிவோம்!' என்று தன் ஆத்மாவுக்கு உபதேசித்த தோழருக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. எதிரே இயற்கை வனப்பும் செயற்கை அழகும் கலந்த காந்த உருவமாய் நின்ற குமாரியைக் கவனித்தார்.

'அது தவறு என்றால், உள்ள அளவை நீங்களே சொல்லி விடுங்கள். அடுத்த இதழில் திருத்தம் எழுதி விடுகிறேன். இதற்காக நீங்கள் இப்படி....'

'அவசியம் திருத்தம் வெளியிட்டே ஆகணும். அதற்கு நீங்களே சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வது நல்லது'.

'நீங்கள் சொன்னாலே போதும். ஏதோ கைத்தவறுதல், அச்சுப் பிழை, கவனக் குறைவு, ஞாபக மறதி போன்ற காரணத்தினாலே....'

'மீண்டும் தவறு ஏற்படாமலிருப்பதற்காகவே நீங்கள் அளந்து சரிபார்க்க வேண்டும் என்கிறேன். உம். சீக்கிரம் ஸார். எனக்கு நேரமில்லை. வேறு அலுவல்கள் இருக்கின்றன, போக வேண்டும்' என அவசரப்படுத்தினாள் அலங்காரி.

தலையைச் சொரிந்த ஆசிரியர், தட்டிக் கழிக்க ஒரு காரணம் கிடைத்ததை எண்ணி மகிழ்ந்து, 'இங்கே டேப் இல்லை. அளக்க முடியாதே!' என்றார். அது அற்பாயுள் சந்தோஷமாக முடிந்தது.

'டேப் வேண்டாமே. இதோ ஸ்கேல் இருக்கு. நூல் இருக்கு. நூலை இடையைச் சுற்றிப்பிடித்து அளந்து அப்புறம் புட்ருலில் கணக்குப் பண்ண முடியுமே!' என்று வழி வகுத்துக் கொடுத்தாள் யுவதி.

பரமசிவம் பாடு பரம சங்கடமாகிவிட்டது. பலத்த தயக்கத்திற்குப் பிறகு துணிந்து விட்டார் அவர். அவள் சொன்னபடியே நூலினால் அவளது இடையின் அளவைக் கணித்தார். விரல்கள் நடுங்க, கைகள் பதற அவர் வெள்ளிய நூலை அந்தப் பாவாடை அழகியின் இடையளவு காணச் சுற்றும்போது, அவள் ஆடைகளும் உடலும் எழுப்பிய சுகந்த மணமும், பெண்மையின் அருகாமையும், அந்தப் புது அனுபவமும் அவர் உள்ளத்திலே கிளறிய உணர்ச்சிகள் தனிரக அவியலேயாகும்.

ஒரு மாதிரியாக அவர் கணக்கெடுப்பை முடித்ததும் 'உம். எவ்வளவு?' என்று கேட்டாள் அவள்.

'21 1/4 அங்குலம்' என்று மென்று விழுங்கினார் அவர். 'பத்திரிகையிலே பிசகாக....'

'பிசகென்றால் லேசானதா! உடுக்கிடைப் பெண்ணை தடி இடைக் குந்தாணியாக மாற்றி விட்டீர்களே!'

'மன்னிக்கணும். அறியாமலே நேர்ந்த தவறு. உரிய முறையில் திருத்தம் எழுதி விடுகிறேன்' என்றார் பரமசிவம்.

'திருத்தத்திற்குத் திருத்தம் வேறு எழுதும்படியாகப் புதுத் தவறு செய்து வைக்காதீர்கள்' என்று கூறிக் கலீரெனச் சிரித்தாள் குமாரி. 'ஞாபகமிருக்கட்டும் ஸார்! நான் வாறேன்!' என்று சொல்லுதிர்த்து விட்டு குதித்தோடி மறைந்தாள்.

'அட கடவுளே! அட நவயுகமே! அட நானே!' என்று வியந்தவாறு நாற்காலியில் சாய்ந்தார் ஆசிரியர். இது கதையா, கனவா, கழுத்தறுப்பா என்று நினைத்தார். 'உண்மை. நிஜமாய் நடந்ததுதான்...உலகம் ரொம்ப வேகமாகத்தான் முன்னேறுகிறது!' என முனங்கினார்.

'குமாரி செல்வா அருமையான பெண். அழகு அழகு அநியாய அழகு! அதைவிட அநியாயமான துணிச்சல். ரொம்ப துணிந்த குட்டி!' என்று புலம்பியபடி அட்டைச் சித்திரத்திலே கண் பதித்தார் ஆசிரியர்.

'புதுமையின் குமிழ்; தீவிரத்தின் முகை; துணிச்சலின் சுடர்' என்று வியந்து கொண்டிருந்தது மனம். 'நான் அவளைச் சந்திக்க நேர்ந்தது கூடப் புதுமையான திடீர் நிகழ்ச்சிதானே!' என்ற எண்ணம் எழுந்தது. உள்ளத்தின் உற்சாகம் சிரிப்பாக ஜோடி கூடியது. தானாகவே சிரித்தார் பரமசிவம்.

அன்றொரு நாள் தானாகவே சிரித்துக்கொண்டு தெரு வழியாகப் போன போதுதான் ஆசிரியருக்கு அந்த விபத்து ஏற்பட்டது. பரமசிவம் சூழ்நிலை மறந்து தன் முகத்தில் சிரிப்புத் தீட்டித் திரிவது புதிய விஷயமில்லையே! மேதைகளிடம் காணப்பட வேண்டிய கல்யாண குணம் தன்னிடமும் வளர்வதற்காக அவர் அதிகம் மகிழ்ந்து போவதுமுண்டு.

அன்று அவர் யாரையோபற்றி எழுதிய எந்த நயத்தையோ எண்ணிச் சிரித்தபடி ஒரு வீதியிலே போய்க்கொண்டிருந்தபோது, திடீரென்று விழிப்புற்று 'இதுதான். பூலோகமா!' என்று அதிசயிக்க வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டது.

அது ஒரு கண அதிர்ச்சி. சில்லீர் என்று உணர்ச்சி அவர் கன்னத்திலே பட்டது. யாரோ-அல்லது எதுவோ-வேகமாக வந்து மோதியது போலவும் தோன்றியது. எதிர்பாராத இந்தத் தாக்குதலினால் திடுக்கிட்ட அவர் விபத்தின் காரண உருவைக் கண்டதும் அதிகம் திடுக்கிட்டார். 'இதென்ன தடிமாடு மாதிரியா....' என்று வெடித்த சீற்றக் குரல், சுர் சுர்ரென்று திரியிலே பற்றிய நெருப்பு, பட்டாஸை வெடிக்க வைக்காமல் புஸ்ஸென அணைந்து விடுவதுபோல், ஒடுங்கி விட்டது.

மேலே வந்து மோதியது தடிமாடோ எருமைக் கன்றுக் குட்டியோ அல்ல. குஷி மிகுந்த குட்டிதான்-பாவாடையும் தாவணியுமணிந்த கோலக் குமாரிதான்-என்பதை உணர்ந்ததும் அவர் கோபம் அவள் கையில் கரைந்து கொண்டிருந்த ஐஸ்க்ரீம் போல் உருவற்றுத் தேய்ந்தது.

கலகலவெனச் சிரித்த குமாரி விலகி நின்று, ஐஸ்க்ரீம் பாழாகிப் பயனற்றுப் போவதைத் தடுப்பதற்காக, தனது சிவந்த உதடுகளினால் ஆர்வமாகச் சுவைத்தாள். ஐஸ்க்ரீமை ரசித்த அவள் கண்களில் தனியொளி திகழ்ந்தது. 'இஹிஹி' என்று கனைத்தாள்.

பரமசிவத்திற்குக் குளிர்ந்துபோன கோபம் மீண்டும் சூடு பெறலாமா, கொதித்துப் பாயலாமா என்று குறி கேட்பது போலிருந்தது. தனது கன்னத்திலே பட்டது அவள் எச்சில் படுத்திய ஐஸ்க்ரீம்தான் என்பது நன்றாகப் புரிந்தது. 'எருமை மாதிரி மேலே வந்து விழுந்த கழுதைக்கு மன்னிப்பு கேட்கணும்னு தோணலை பாரு மேன்! திண்ணிப் பண்ணி! மொக்குது பாரேன் ஐஸ்க்ரீமை!' என்று உறுமியது அவர் மனம்.

அழகிய மங்கை ஒரே சமயத்தில் எப்படி மூன்று வித மிருகாவதாரம் எடுத்துக் காட்சி தர முடியும் என்று அவரது அந்தராத்மா கேட்கவில்லை. அவ்வளவு ஆத்திரம் அவருக்கு! இன்னும் சில மிருகங்களின் பெயரையும் கூட்டியிருப்பார். அதற்குள் 'ஏ செல்வா! ஏட்டி!' என்ற குரல் அவர் கவனத்தைக் கவர்ந்தது.

'இந்தக் கழுதைக் குட்டியின் பெயர்தான் போலிருக்கு!' என்று நினைத்தார் அவர்.

கையிலிருந்த ஐஸ்க்ரீம் காலியானதும் 'ஸார் ஸார் உங்க சட்டையிலே இஹிஹி!' என்று கனைத்தாள் அவள்.

தன் சட்டை மீது சிவப்புக் கறை படிந்திருப்பதை அப்பொழுது தான் கவனித்த ஆசிரியர் ஒரு நிமிஷத்திற்குள் அவள் ஒரு க்ரீமைத் தீர்த்து விட்டதையும் உணர்ந்தார். அவர் கை கன்னத்தில் சில்லிட்ட இடத்தைத் தடவியது.

'முகத்திலே கூடப் பட்டுவிட்டதா ஸார்! வருத்தம்!' என்றாள் அவள்.

'எருமைக் கடாவே! கழுதைக் குட்டியே!' என்று சீற எண்ணிய பரமசிவம் 'எருமைக் கழுதை மோறையைப் பாரு!' என்று கத்தினார்.

சிரித்தவளின் முகம் சிவந்தது.

'வருத்தம்!' என்றார் ஆசிரியர் நையாண்டிக் குரலில்.

'மன்னிக்கணும் ஸார்' என்றாள் அவள்.

'அதுதான் நான் சொல்றேன். செய்றதைச் செய்து போட்டு வருத்தம்னு அப்புறம் சொல்வதனாலே, செய்தது செய்யாததாகி விடுமா? மடக் கழுதை என்று ஏசுகிறேன், உடனேயே மன்னிக்கணும் என்றும் சேர்த்துக் சொல்லிவிட்டால் சரியாகப் போச்சா? இதிலேயெல்லாம் அர்த்தமே கிடையாது தெரியுதா? கூடிய வரையில் மனுஷத்தனம் குன்றாமல் வாழணும். தவறு நேராமல் நடந்து கொள்ளணும். சூழ்நிலை மறக்கும் படியாக என்ன குதிப்பு வாழுது? தெருவிலே போறவன் மேலே மோதி எச்சிக் கறை படியும்படி விழுந்துவிட்டு, பிறகு மன்னிக்கணும்கிறதுலே என்ன அர்த்தமிருக்கு?' - ஆசிரியர் அதிகப் பிரசங்கம் பண்ணத் தொடங்கிவிட்டார்.

குமாரி அழாத குறையாக மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றாள். 'தெரியாமல் செய்து விட்டேன்!' என்று முனங்க எண்ணினாள். ஆனால் வார்த்தைகள் வரவில்லை.

'இப்ப என்னைத் தெரிந்தவங்க எவனாவது வந்திருந்தால் என் மதிப்பு நாளைக்கு கப்பலேறி விடுமா சும்மாவா! வால் நட்சத்திரம் பத்திரிகாசிரியர் பரமசிவம் மூஞ்சியில் ஐஸ்க்ரீம் வீச்சு! வீரப் பெண்ணின் சூரச் செயல் என்று எழுதி அச்சிட்டு சுவரொட்டி

விளம்பரமல்லவா செய்து விடுவான்!' என்றார் அவர்.

இதுவரை வீட்டினுள் ஜன்னலின் பின்னின்று கவனித்துக் கொண்டிருந்த ஒரு அம்மாள் முன் வந்தாள். 'நமஸ்காரம் ஸார். குழந்தைக்கு தெரியாது. சிறுசுதானே. விளையாட்டுப் புத்தி. நீங்க உள்ளே வந்து முகத்தை அலம்பிக் கொள்ளுங்கள்' என்று பவ்வியமாக வேண்டினாள்.

'அஹும். பப்ளிக் தண்ணிக் குழாய் இல்லாமலா போகும் இந்தப் பக்கத்திலே?' என்று முறைப்பு காட்டினார் அவர்.

'மன்னிக்கணும். நீங்கதான் வால் நட்சத்திரம் ஆசிரியர்னு தெரிந்த பிறகும் உங்களுக்கு மரியாதை செய்யாமல் அனுப்பினால் எங்களைப் பற்றி மற்றவங்க என்ன நினைக்க மாட்டாங்க?....'

ஆசிரியருக்கு உள்ளத்திலே சிறு உதைப்பு எடுத்தது, 'மரியாதை' என்ற பதத்துக்கு வேறொரு பொருளும் உண்டு என்று உணர்ந்திருந்ததனால். ஆகவே 'பரவால்லே. நான் போறேன்' என்று நகரலானார். அவர் மறுபடியும் திடுக்கிட நேர்ந்தது.

குமாரி குதித்து முன் வந்து வழி மறித்து நின்றாள். 'தயவு செய்யுங்கள் ஸார். தெரியாமல் நடந்த குற்றம். என்னை மன்னிக்க வேண்டும். வீட்டுக்கு வந்து காபி சாப்பிட்டுவிட்டு போங்கள்' என்று கெஞ்சினாள்.

'ஒரு வேளை தொழில் செய்யும் குடும்பமாக இருக்குமோ? தூண்டில் போடுகிற முறையிலே இது புது தினுசோ?' என்று குழம்பியது அவர் மனம். எனினும் அஞ்சலி செய்து நிற்கும் அழகை, இளமையை, இனிய பெண்மையைத் தள்ளி ஒதுக்கி விட்டு முன் செல்லும் துணிவு அந்த வீர ஆசிரியருக்கு வரவில்லை. ஆகவே வீட்டினுள் விஜயம் செய்தார்.

அம்மா அவசரம் அவசரமாக உள்ளே மறைந்தாள். மகள் தயங்கித் தயங்கி நடந்து வந்து ஒரு நாற்காலி அருகில் நின்றாள்.

'உட்காருங்க ஸார்' என்றாள் பணிவாக. குமாரியின் குதிப்பும் கனைப்பும் எங்கே பம்மி விட்டன என்ற வியப்பு எழுந்தது அவருக்கு. உட்கார்ந்தார்.

அவர் பார்வை எங்கும் சுழன்றது. நாகரிகம் ஆட்சி புரிந்த அழகு நிலையம்தான். செயலான குடும்பம்தான். அம்மாவையும்

மகளையும் தவிர வேறு யாரையும் காணோமே. முதலில் பிறந்த சந்தேகம் மீண்டும் தலை தூக்கியது அவர் மனதில்.

'உங்கள் ஆபீசுக்கு நானே வரவேணும் என்று எண்ணியிருந்தேன்' என்றாள் குமாரி.

'ஆமாம். இன்று மத்தியானம் போகலாம் என எண்ணினோம். அதற்குள் நீங்களே வந்து விட்டீர்கள்' என்று சொல்லியபடி தோன்றினாள் பெரியவள். கையிலிருந்த கிளாஸை நீட்டி 'இந்தாங்க, காப்பி சாப்பிடுங்க' என்று உபசரித்தாள்.

காப்பியை வாங்கி குடித்து முடித்து விட்டு 'ஏன், என்ன விசேஷம்?' என்று கேட்டார் அவர்.

'உங்களைப் பேட்டி காணத்தான்!' என்றாள் குமாரி.

'பேட்டியா! என்னையா! நீங்களா! அஹஹா!' என்று அவுட்டுச் சிரிப்பு சிதறினார் அவர்.

'ஆமா. இனிமேல் நீங்கள் யாரையும் பேட்டி காணப் போவதில்லை, நட்சத்திரங்கள் வேண்டுமானால் நம்மை வந்து பார்க்கட்டுமே என்று எழுதியிருக்கிறீர்கள் அல்லவா! அதனால்தான்!'

'நீங்கள் நட்சத்திரமா?'

'எதிர்கால நட்சத்திரம்' என்று உறுதியாகச் சொன்னாள் அவள். 'குமாரி செல்வா என் பெயர். நாட்டியம் தெரியும். நடிக்கவும் முடியும். பட முதலாளி தான் எதிர்ப்படவில்லை. நான் இன்றைய நட்சத்திரங்களைப் பற்றி எண்ணுவதை எல்லோரும் அறிய வேண்டும். அதற்கு புதுமையைத் துணிகரமாகக் கையாளும் உங்கள் பத்திரிகை துணை புரியும் என்று நினைத்தேன்' என்றாள் அவள்.

புதுமை மோகமும் துணிச்சலும் எங்கிருந்து எப்படி வேண்டுமாயினும் கிளம்பலாம் என்பதை அறிந்திருந்த ஆசிரியர் பிரமிக்கவில்லை. பாராட்டினார். 'ரொம்ப சந்தோஷம். இப்பவே நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லி விடுங்கள்! எதிர்பாராத சந்திப்பு புது ரகமான பேட்டியாக மாறி விடட்டுமே!' என்று கனைத்தார் பரமசிவம்.

'செல்வாவுக்கு ஐஸ் க்ரீம்னா உயிர். ரொம்ப அதிகமாத்

தின்னாதேம்மா. பல்லுக்கு கெடுதி. உடம்புக்கும் ஆகாதுன்னு சொல்லியாச்சு. கேட்டால்தானே. நறநறன்னு கடிச்சுத் தின்னுவா. ஒண்ணுக்குப் பிறகு ஒண்ணு. அதுக்கு மேலே ஒண்ணு யின்னு டஜன் கணக்கிலே தின்பா. இப்ப அவள் தின்னது எட்டாவதோ, ஒன்பதாவதோ. அதுதான் கூடாது யின்னு அவள் கையிலேயிருந்து பிடுங்க வந்தேன். அவள் விழுந்தடிச்சு ஓடி வந்து உங்க மேலே மோதிவிட்டாள்!' என்று விளக்கம் கூறினாள் தாய்.

'நானாக யிருக்கப் போய் நல்லதாச்சு. வேறே வீணன் எவனாது வந்திருந்து இப்படி நடந்திருந்தால் என்னாகிறது?' என்று திருவாய் மலர்ந்தருளினார் ஆசிரியர்.

'என்னாகும் தெரியாதா! குமாரியின் ரோஜாப் பூக்கன்னம் செவ்வரளியாக மாறிப் போகும். அடிபட்டுச் சிவக்காது. முத்தம்பட்டுத்தான்!' என்று கொக்கரித்தது அவர் மனம். இதை அவர் வெளியிடவில்லை.

'செல்வாவுக்கு விளையாட்டுப் புத்தி போகவேயில்லை. பதினெட்டு வயசு ஆகுது. இன்னும் சிறு பிள்ளைத்தனம் போகலே பாருங்களேன்' என்றாள் அம்மா.

அந்தத் திடீர்ச் சந்திப்பு பற்றி இப்போது எண்ணிய ஆசிரியர் மனம் ஆரவாரமாக ஆமோதித்தது. 'ஆமாம். செல்வாவுக்கு இன்னம் விளையாட்டுப்புத்தி போகவில்லை. வயசாகி என்ன பிரயோசனம்!' என்று.

'உம். இருந்தாலும் புள்ளெ நல்ல புள்ளெ. குதிப்பும் கூத்தும் குஷியும் குழந்தைத்தனமும் ஜாஸ்தி. அதனாலே என்ன!' என்று பரிந்து பேசியது ஒரு எண்ணம்.

'வருங்காலத்திலே இவள் நட்சத்திரமாக ஜொலிப்பாள். ஆனால் வால் நட்சத்திரமாகத்தான் விளங்குவாள்!' என நினைத்த பரமசிவம் செல்வாவின் பேட்டியை மறுபடியும் ரசித்து அனுபவிக்கத் தொடங்கினார். அவர் பத்திரிகையில் அவர் எழுதியது தான்-

'ஸார், இது நான் வந்து உங்களைக் கண்ட பேட்டியுமல்ல. நீங்கள் தேடி வந்து என்னைச் சந்தித்த பேட்டியுமல்ல. அதனாலே முட்டிக்கொண்ட பேட்டி என்றோ, முட்டிக்கொண்டு பேட்டி கண்ட குட்டி எனவோ தலைப்பு கொடுங்கள் ஸார்!' என்றாள் குமாரி

செல்வா.

'வந்தனம். எனது எழுத்து விஷயத்தில் தலையிட்டு ஆலோசனைகள் கூற யாருக்கும் உரிமை கிடையாது' என்றேன்.

'உங்கள் மனைவிக்குக் கூடவா?' என்று குறும்பாகக் கேட்டாள் குயிலி.

'எனக்கு மனைவி யிருந்தாலல்லவா அவள் உரிமையைப் பறிப்பது பற்றி ஆலோசிக்க வேண்டும்!'

'அப்போ நான் உங்கள் காரியதரிசி வேலைக்கு மனுச் செய்யட்டுமா, ஸார்?' என்று கேட்டுச் சிரித்தாள் அக் கொஞ்சும் குரலி.

'ஏன்! அப்படியே மனைவி அந்தஸ்துக்குப் புரமோஷன் பெற்றுவிடலாம் என்ற சூழ்ச்சியோ?' என்று கேட்கும் துடிப்பு பிறந்தது என் உள்ளத்தில். ஆனால் துணிவுதான் பிறக்கவில்லை. அவளையே பார்த்தபடி அமர்ந்திருந்தேன்.

சிரிக்கும் ஒளிர்மிகு கண்களை, சிரிப்பு நீந்திய செவ்விதழ்களை, சிரித்த பங்கயமன்ன அம் முகத்தையே நான் கவனித்திருந்ததைக் கண்ட குமாரி அருவிச் சிரிப்பு சிந்தி விட்டு ஓடினாள். மறைந்தாள்.

சில நிமிஷங்கள் ஓடின. கலீன் கலீனெனச் சலங்கைகள் கட்டியம் கூற, களுக் கிளுக்கென்று இனிய சிரிப்பு கவிதையொலி சிந்த அழகுக் கனவு போல் அசைந்தாடி, நெளிந்து வளைந்து வந்தாள் குமாரி. இப்போது அந்த ஆடும் மயில் பாவாடை தாவணியுடன் காட்சி தரவில்லை. பைஜாமா அணிந்து, மேலே தொள தொளத்த நீண்ட அங்கி தரித்து, தோளிலே நீண்ட துணி ஒன்றை அலட்சியமாகப் போட்டிருந்தாள். கழுத்தசைத்துக் கர்வ நடை பயிலும் மணிப்புறா போலே வந்த குமாரி 'குகுகூ குகூ!' என்று கொஞ்சுகிற சிரிப்பும் கள்ளப் பார்வையும் சிந்தி நாற்காலிக் கைமீது ஒய்யாரமாக அமர்ந்தாள்.

நானிருந்த நாற்காலி மேல் அல்ல. தனியாகக் கிடந்த நாற்காலியின் கையிலேதான்! 'பலே கைகாரியாகத்தான் தோன்றுகிறாள் குமாரி!' என்று நினைத்தேன். இதைத் தொடர்ந்தது பல 'டர்னிங் ஸீன்'கள். ஒளி அணைந்து பேரொளி பூப்பதில்லை. மற்றப்படி அந்த அறை அற்புத நாடக மேடையாகத்தான்

காட்சியளித்தது. அவள் உள்ளே போவாள். திரும்பி வரும் பொழுது உடை மாற்றம், அலங்கார மாற்றங்களுடன் திகழ்ந்து அழகு மலராக விளங்குவாள்.

'இதெல்லாம் எனது திறமையை உங்களுக்குக் காட்டுவதற்காகத்தான். எனக்கு ஆடத் தெரியும், பாடத் தெரியும், நடிக்கத் தெரியும் என்று சொன்னால் போதுமா! நிரூபிக்க வேண்டாமா? அதற்காகத்தான்' என்று சொல்லிச் சிரித்தாள் எழிலி.

அவள் தாய் சும்மா வேடிக்கை பார்த்து நின்றாள்.

'செல்வா செல்லமாக வளர்ந்த செல்வம். சினிமா நட்சத்திரமாக வேண்டுமென்ற ஆசை அவளுக்கு ரொம்ப அதிகம். அவ அப்பா இருந்தால் அருமை மகள் நடிக்கவேண்டும் என்பதற்காகவே படம் பிடிக்கத் தொடங்கியிருப்பார். இரண்டு வருஷங்களுக்கு முன்னாலேதான் இறந்துபோனார். என்ன செய்றது!' என்றாள் அவள்.

பேச்சை சுலபமாக வேறு திக்கிலே திருப்பி விட்டாள் மகள். 'நான் பல இடங்களில் நாட்டியமாடிப் புகழ் பெற்றிருக்கிறேன், ஸார்!' என்றாள்.

'நீங்கள் ஆடக்கூட வேண்டாம். உங்களைப் பார்த்ததுமே புகழத் தயாராகிவிடுவார்கள் எல்லோரும்!' என்று கூறினேன் சிரிப்பையும் கலந்துதான்.

'என்னை எவ்வளவோ போட்டோக்கள் எடுத்திருக்கிறேன். விதவிதமான போஸ்களில். எல்லாம் எதுக்கு? சினிமாவிலே நான் ஜோராக இருப்பேனா என்று பார்த்துக்கொள்ளத்தான். எல்லாப் படங்களையும் காட்டட்டுமா ஸார்?' என்று துள்ளி எழுந்தாள் அவள்.

'உங்களைப் பார்த்தாலே தெரிகிறதே, உங்கள் படங்கள் ஜோராக யிருக்கும். உங்கள் நடிப்பு அற்புதமாக யிருக்கும். நீங்கள் நட்சத்திரமானதும் ரொம்பப் பிரமாதமாக யிருப்பீர்கள்!'

'அதுதானே ஸார். புகழ்பெற்ற நட்சத்திரங்களை மட்டுமே பேட்டி கண்டு போடுவதிலே அர்த்தமே கிடையாது. புகழ் பெறப் போகிற நட்சத்திரத்தைத் தேடிப் பிடித்து, அபிப்பிராயம் பெற்றுப் பிரசுரிக்க வேண்டும். என்ன, நான் சொல்றது?' என்று கேட்டாள் குமாரி. அப்போது அவள் சித்தரித்த பாவங்கள் ரொம்பப் பிரமாதம்.

'ஸார், என் பெயர் செல்வா. குமாரி செல்வா. எனக்கு வயது பதினெட்டு. நான் இன்டர் படிக்க ஆரம்பித்து, அப்புறம் வேண்டாமென்று விட்டுவிட்டேன். ஸ்கூல் டிராமாக்களில் அடிக்கடி ஆக்ட் பண்ணியிருக்கிறேன். டான்ஸ் தெரியும். பாட்டு கொஞ்சம் கொஞ்சம் வரும். பிளேபாக் ஸிஸ்டம் மிகுந்துவிட்ட இக்காலத்திலே ஸ்டார்களுக்கு பாடத் தெரிந்திருக்க வேண்டிய அவசியமே கிடையாது, இல்லையா ஸார்?'

'நீங்கள் சொல்வது ரொம்ப நியாயமானதே' என்றேன்.

'சினிமாக் கலை வளரவேணுமானால் என்னைப் போன்ற நட்சத்திரங்களைத் தேடிப் பிடித்துப் போட வேண்டும். ராணிகுமாரியும், சந்திரமதியும், ரோஜாம்பாவும், அவளும் இவளும் நடிக்கிறதைவிட நான் பிரமாதமாக நடிக்க முடியும். உங்கள் வால் நக்ஷத்திரம் பத்திரிகையில் இந்த நட்சத்திரங்களை நீங்கள் பேட்டி கண்டு எழுதிய கதையை நான் மிகவும் ரசித்தேன். எல்லாரும் ரொம்பப் பாராட்டுறாங்க ஸார். அதனாலேதான் நானே வந்து உங்களைப் பேட்டி காண நினைத்தேன். எதிர்பாராதவிதமாகப் பேட்டியே பேட்டிக்கு ஏற்பாடு செய்துகொண்டுவிட்டது. எப்படி ஸார்! இந்தப் பிரயோகம் நயமாக யில்லே? பேட்டியே பேட்டிக்கு வகை செய்தது..... ஹஹஹா, ஹிஹிஹி!'

ஒரு டஜன் பேர்வழிகள் ஒரே சமயத்தில் ஜலதரங்கம் வாசித்து, சட்டென நிறுத்திவிட்டது போலிருந்தது அவள் பேச்சை நிறுத்தியதும்!

'இவ்வளவுதானா? இன்னும் ஏதாவது உண்டா?' என்று கேட்டு வைத்தேன்.

'செத்துக்கொண்டிருக்கிற படஉலகம் உருப்பட வேண்டுமானால் என்னை மாதிரி வருங்கால நட்சத்திரங்கள் ஒரு டஜன் பேர் உடனடிப் படையெடுப்பு நடத்த வேண்டும். எனது பிரண்ட்ஸ் சில பேரு இருக்கிறாங்க-அனுராதா, சியாமளா, ஜோதி, ஜவந்தி, முத்தம்மா, கௌஸல்யா. இன்னும் நாலஞ்சு பேரு சேருவாங்க. ஸார், நீங்ககூட நடிக்கலாம் ஸார். அருமையான ஸோஷல் பிக்சர் ஒன்று தயாரிக்க ஏற்பாடு செய்யுங்கள். அழியாப் புகழ்பெறும் அற்புதத் தயாரிப்பாக இருக்கும் நம்ம நட்சத்திர சித்திரம், இல்லையா ஸார்?'

'பின்னே! நாமெல்லாம் நடிக்கத் துணிந்து விட்டால் அப்புறம் படம் படமாகவா இருக்கும்!' என்றேன்.

'பப்படமாத் தானிருக்கும் என்கிறீர்களோ!' என்று கூறிக் கனைத்தாள் அவள்.

'சேச்சே, அப்படிச் சொல்வேனா!' என்று குறிப்பிட்டேன்.

இதைத் தொடர்ந்து குமாரியைச் சந்திக்க நேர்ந்த விதம் அவளது குணங்கள், தோற்றம் பற்றி யெல்லாம் எழுதியிருந்தார்.

'குமாரி செல்வா புதுமையிற் புதுமை, தீவிரத்தின் பிம்பம். துணிச்சலின் உயிர்ப்பு. அவளை முதல்முறை காண்கிறவர்கள் என்னடா இவள் இப்படி நடந்து கொள்கிறாளே என்று எண்ணாமலிருக்க முடியாது' என்று எழுதிப் பேட்டியை முடித்திருந்தார் பரமசிவம்.

பேட்டியைப் பத்தாவது முறையாகப் படித்து முடித்த ஆசிரியர் பரமசிவம் 'முதல் முறை மட்டுமென்ன! மூன்றாவது முறையிலும், முப்பதாவது முறையாகப் பார்க்கும்பொழுதுகூட இப்படித்தான் எண்ண வேண்டியிருக்கும். இந்தப் பெண் என்ன இந்தவிதமாகவெல்லாம் நடந்துகொள்கிறாள் என்றுதான்!' எனத் தானாகவே புலம்பிக் கொண்டார்.

மேலோட்டமான நவயுகக் கல்வியின் கோளாறு புகுத்திய குணக்கேடுதான். நிறைகுடப் பண்பாடு பெறாமல் அரைக்குடத் தன்மையைத்தான் பள்ளிப்படிப்பு பல பேருக்குக் கற்றுக் கொடுக்கிறது. போலித் துணிச்சல், பெண்மைத் துறவு, ஆண்மை வேஷம், அடக்கமின்மை போன்ற பல குணக்குறைவுகள், இவற்றுடன் இளமைத் துடிப்பும் கூடுகிறபோது கூத்தடிப்பையே காணமுடிகிறது. அல்லது இவ்விதமும் கணிக்கலாம். 'அமெரிக்கத்தனம்' என்றுதான். வெகுகாலம் கட்டுண்டு கிடந்த பெண்கள் விடுதலை பெற்று, உரிமை வேட்கையுடன் செயல் புரியத் தொடங்கும்பொழுது உற்சாக மிகுதியிலே பொறுப்பற்ற பிரகிருதிகளாய், கடமை சூழ்நிலை கலாசாரம் முதலியவற்றை மறந்த ஜந்துக்களாக மாறிவிடுகிறார்கள். அவர்கள் நாகரிக உயர்வு எனக் கருதுவது உண்மையில் அடங்காப் பிடாரித்தனமாகவே விளங்குகிறது-இப்படி ஓடியது அவர் சிந்தனை.

அமெரிக்கப் படங்கள், அமெரிக்கப் பத்திரிகைகள்,

அமெரிக்காவின் மலிவுப் புத்தகங்கள் முதலியவற்றையே மிகுதியும் ரசித்து மகிழும் குமாரி செல்வாவின் பண்பிலே கிழக்கும் மேற்கும் கலந்த அவியற் கலாசாரத்தைக் காண முடிவதில் வியப்பில்லை என்று முடிவு கட்டினார் அவர்.

'இருக்கட்டுமே! அதனால் ஒன்றும் முழுகிவிடவில்லை. குமாரி செல்வா அழகி. விளையாட்டுப் பருவம். ஜாலியாக வாழும் ஆசை அவள் உள்ளத்தில் நிறைந்திருக்கிறது, களங்கமில்லை. கவலையில்லை. கூத்தடிக்கும் சிறுபிள்ளைத்தனம். வாழ்க்கையை விளையாட்டாகவே மதித்து நாளோட்டுவதினால் எவ்வித நஷ்டமும் வந்து விடப் போவதில்லையே!' என்று பேசியது மனம்.

மனக்குறளியின் மற்றொரு பண்பு குரல் கொடுத்தது. 'இப்படி எங்கும் எல்லோரிடமும் தாராளமாகப் பழகினால் என்னாவது? அவள் கெட்டுப்போக நேரிடும். சந்தர்ப்பமும் சமுதாய நிலையும் துணையற்ற பெண்ணை-அதிலும் தாராளமாகப் பழகுகிற குமாரியை-புனிதையாய் வாழவிடாது. அவள் பண்பாடே அவளுக்குத் தீங்கு பயக்கும் கருவியாகி விடும்.'

'உம். கெடவேணும் என்றிருந்தால் எந்தப் பண்பாட்டினரும் கெட்டு நாசமாகத்தான் போவார்கள். படியாத பெண்களும், பிரைமரியை மட்டுமே தாண்டிய அச்சம்-மடம்-பயிர்ப்பு-நாணத்தனக் குமரிகளும் கறை படிந்த மலர்களாகி விடவில்லையா? சினிமாவைப் பார்த்துவிட்டு, சினிமாச் சிங்காரிகளின் பகட்டான வாழ்வை யறிந்து, தாங்களும் அவ்வித மத்தாப்பூ சுந்தரிகளாக மாறிப் பலரையும் தம் அழகு வெளிச்சத்தினால் கிரங்கடிக்க வேணும் என்ற ஆசை கொண்டு வீட்டை விட்டு ஓடிவந்து வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்ளுகிற பாவையரின் எண்ணிக்கைதான் குறைவா என்ன! வளர்ந்துவரும் நாகரிகம் நன்மைகளுடன் பல நாசங்களையும் தூவி வருகிறது' என்று பேசியது அவர் மனம்.

'அவளது குறைகள் நிறைவுகள் எவையே யாயினும் சரி; குமாரி செல்வா ரொம்ப நல்ல பெண்' என்று ஸர்டிபிகேட் கொடுத்தார் அவர்.

'ஆமா. அதிலே சந்தேகமே கிடையாது. அவள் மனுச் செய்துகொண்டால், அவளையே எனது காரியதரிசியாக ஏற்றுக் கொள்வேன்' என்று எண்ணிச் சிரித்தது அவர் உள்ளம்.

## 2

ஆசிரியர் பரமசிவம் குமாரி செல்வாவைப்பற்றி எண்ணிய அபிப்பிராயங்களில் தவறே கிடையாது. அவள் போக்கு அப்படித்தானிருந்தது.

கொஞ்சம் படிப்பு வாசனை பெற்றுவிட்டதுமே இந்தக் காலத்துப் பெண்கள் சினிமா ஸ்டார்கள் போல் திகழவேண்டும் என்ற ஆசையை வளர்த்துக் கொள்கிறார்கள். அதனால் வாத்தியாரம்மாக்கள் கூட எக்ஸ்ட்ரா நடிகைகள் மாதிரிக் காட்சியளிப்பதையே நாம் காண முடிகிறது. வீட்டரசிகளுக்குக் கூட எக்ஸ்ட்ரா நடிகையரே லட்சியமாகி வழிகாட்டுகிற இந்த யுகத்தில் நர்ஸம்மா சங்கரபுஷ்பத்தின் மகள் செல்வா சினிமாக்காரி மாதிரி வாழ்க்கை நடத்துவதில் வியப்பில்லை.

பள்ளிப் படிப்பும், சினிமாப் படங்களும் தமிழ் நாட்டு சமுதாயத்திலே-முக்கியமாகப் பெண் குலத்திலே-அபத்தமாகச் சுவடுகள் பதிப்பதற்கு முன்பு, மேற்கும் கிழக்கும் சந்திக்க முயலும் அவியல் கலாசாரத்தை அதிகம் கையாண்டவர்கள் 'சட்டைக்காரர்கள்' என்று புகழ்பெற்ற ஆங்கிலோ இந்தியர்களும் 'வேதக்காரர்கள்' என்று சிறப்புப்பெற்ற கிறிஸ்துவர்களுமாவர். இவர்களது நாகரிகம் பெண்களிடையே 'மிஸ்ஸியம்மா'க்களாலும் 'நர்ஸம்மா'க்களினாலும் வளர்க்கப்பட்டு சுதந்திர ஆர்வமுள்ள வேறு பலருக்கு லட்சியமாகி விட்டது.

இப்படி வளர்ந்து வந்த பெருங்கிளையிலே பூத்த தனிமலர் சங்கர புஷ்பம். அவள் வேதக்காரியாகிவிட்டாள்; விபூதி அணிவதில்லை; குத்துவிளக்கிற்கு பூஜை செய்வதில்லை; புனிதத் திருநாட்கள், விரதங்களைக் கொண்டாடுவதில்லை என்ற குற்றச்சாட்டுகள் பெருகி வந்தன. பட்டியலில் அடங்காத அளவுக்கு இவை வளர்ந்திருக்கும். ஆனால் 'அவள் ஓடிப்போய்விட்டாள்' என்ற விஷயம் ஊரார் பேச்சுக்குப் பெருங் கோடு கிழித்து விட்டது.

ஊரை விட்டு ஓடி வந்தது, அவள் நர்ஸம்மாளாக மாறியது, ஒரு செல்வரின் துணைவியாகிக் குமாரி செல்வாவின் தாயானது எல்லாம் நமக்கு வேண்டாத கதை. செல்வாவைச் செல்லமாக வளர்த்து நவயுக நாகரிகச் சுடர்க்கொடியாக மாற்றிவிட அவளது

பண்பாடு துணைபுரிந்தது என்பதுதான் முக்கியம். தாயின் உரிமையில் தலையிடவோ, மகளின் வளர்ச்சியில் தடை விதிக்கவோ தந்தை பரந்தாமர் விரும்பியதில்லை. ஆசையிருந்தாலும் அவர் வார்த்தைகள் உரிய மதிப்பைப் பெறா என்பது அவருக்கே தெரியும். அதனால் அவர் தன் கௌரவத்தைத் தானே காப்பாற்றிக் கொண்டார்.

குமாரி செல்வா படித்தாள். காலேஜில் காலடி வைத்துப் பார்த்துவிட்டு அது பிடிக்கவில்லை என் விட்டுவிட்டாள். படிப்பிலே என்றைக்குமே அவளுக்கு 'இன்ட்டரஸ்ட்' கிடையாது. தோழிகளுடன் குதித்துக் கூத்தாடுவது, கூப்பாடு போடுவது, 'எட்டு வீட்டுக்குக் கேட்கும்படியாக' ஒஹொஹோ ஆஹஹா என்று கத்திச் சிரிப்பது போன்ற காரியங்களைக் குறைவறச் செய்து வந்தாள்.

'பொண்ணாகப் பொறந்தவ இப்படியெல்லாம் நடக்கப்படாது அம்மா. கொஞ்சம் அடக்கம் ஒடுக்கமாக இருக்கணும்' என்று போதித்து அவளுக்கு வழி காட்டக்கூடிய பெரியம்மாள்கள் யாரும் இல்லாததும் குமாரி 'தான் நினைத்த மூப்பாக' வளர்வதற்குத் துணை புரிந்தது.

ஆடத் தெரிவதும் பாடத் தெரிந்திருப்பதுமே நாகரிகம், பெரியதனம் என்று நம்பப்படுகிற இந்தக் காலத்திலே செல்வா இவற்றைப் பயிலாமல் இருக்க முடியுமா? இவற்றுடன் நடிக்கவும் கற்றுக் கொண்டாள் அவள். இவ்வளவு சிறப்புகளுடன் அழகு, அகங்காரம், ஆணவம், அலட்சிய மனோபாவம் ஆகிய நவயுகப் பெண்மைப்பண்புகளைக் குறைவறப் பெற்றிருந்த மாடப்புறா கல்யாணம் என்ற பெயரில் எந்த வேடன் கையிலும் சிக்கித் தன் வாழ்வையே பாழாக்கிக் கொள்ள விரும்பாததில் அதிசயமில்லை.

அபாரத் தன்னம்பிக்கையுடன் முன்வந்து அவளை யாராவது கல்யாணம் செய்திருந்தால், அவன் உருப்பட்டுவிடமாட்டான்! அவனையும் அவன் வாழ்வையும் உருப்படவிடாமல் அடிக்கும் திறமை அவளிடமுண்டு.

அவளிடம் குடிகொண்டிருந்த திறமைகளையெல்லாம் சோபிக்கச்செய்து புகழுடன் மிளிரவேண்டும் என்ற ஆசைதான் அம்மாளுக்கும் மகளுக்கும் அதிகம்.

சின்ன வயசிலிருந்தே 'செல்வா சிரித்த முகமும்

சீதேவியுமாக எல்லோரிடமும் கலகலப்பாகப் பழகுகிறாள்' என்ற பாராட்டுதலைப் பெற்று வளர்ந்தவள் அவள்.

குறும்புகள் செய்வதில் அவள் யாருக்கும் சளைத்தவளில்லை. பையன்கள் நோட்டில் 'நீ ஒரு கழுதை- இப்படிக்கு செல்வா' என்று கையெழுத்திட்டு ஸர்டிபிகேட் அளிக்க அவள் தயங்கியதே கிடையாது. அவள் பின்னலை எவனாவது பின்னின்று இழுத்தால், அவன் கண்களில் தண்ணீர் வரும்படியாக மண்டையிலே 'நறுக்'கென்று கொட்டுவதற்கு வலுவிருந்தது அவள் கையில்! 'யே செங்குரங்கே' என்று யாராவது சொன்னால் 'வவ்வவ்வே' என்று உதடுகளை மடித்து வாயினால் வலிப்புக் காட்டும் திறமையுமிருந்தது.

வயதாக ஆக இக்குணங்கள் குறையாமல் வளர்ந்து வந்தன. ஆகவே 'தீராத விளையாட்டுப் பிள்ளை'யாகத் தானிருந்தாள் குமாரி செல்வா. அவள் பண்பினால் யாருக்கும் தீங்கு விளையவில்லை.

'ஆனால் அவளுக்கே அவை தீங்கு விளைவிக்கும். இதுவரை விளையவில்லை யென்றால் இனியும் விளையாது என்று நிச்சயித்துவிடலாமா!' என்று நினைத்தார் பரமசிவம். ஆசிரியரது ஊகங்கள் அநேகமாகத் தவறுவது கிடையாது. மெஜாரிட்டி இனத்திலேயே கலந்தது இந்த யூகமும்!

## 3

ஆசிரியர் பரமசிவத்திற்கு ஆசை இருந்தது, கோலக் குமாரி செல்வாவைக் காரியதரிசி ஆக்கிக்கொள்ளலாமென்று.

அவரது ஆசைக்குத்தான் அளவிருந்ததா என்ன! 'வால் நட்சத்திரம்' பத்திரிகையை பிரமாத அற்புதமாக நடத்த வேண்டும்; காரியாலயம் தனி உலகமாக மிளிர வேண்டும்; அழகு மிகுந்த குட்டிகளையே 'ஆபீஸ் பையி'களாகவும், குமாஸ்தா, டைப்பிஸ்ட், உதவி ஆசிரியர்களாகவும் நியமிக்கவேண்டும் என்றெல்லாம் அவாவினார்.

ஆனால் அவரது பத்திரிகை ஐந்தாவது இதழுடனேயே அஸ்தமித்துவிட்டது. இந்தத் தமிழ்நாட்டை நம்பிப் பத்திரிகை போடுவதைவிட, 'கோவிந்தா கோவிந்து' என்று கூச்சல் போட்டுக்

கொண்டு தீர்த்த யாத்திரை போகலாம் என எண்ணிய பரமசிவம் விண்தொட முயலும் நீள்முடி இமயத்தை லட்சியமாகக் கொண்டு கம்பி நீட்டிய கதை உங்களில் பலருக்குத் தெரிந்திருக்கலாம்.

தன்னுடைய லட்சியம் இப்படித் திடீரென்று மிக உயர்ந்துவிட்ட காரணத்தினால் 'வால்' பரமசிவம் குமாரிகளையும் குட்டிகளையும் பற்றிக் கவலைப்படுவதையே விட்டுவிட்டார். திடீரெனத் தோன்றிமறையும் உண்மையான வால் வெள்ளியின் பண்பே 'வால் நட்சத்திரம்' பத்திரிகைக்கும் வாய்த்தது என்பதை உணர்ந்த குமாரி செல்வாவும் அப்புறம் ஆசிரியரைப் பற்றி கவலைப்படவில்லை.

புகழ்ப்பசி மிகுந்த அவளுக்கு 'சரி. ஏதோ கொஞ்சம் புகழுக்கு வழி கிடைத்தது. கிடைத்தவரை லாபம் தானே!' என்று தோன்றியது. நடந்ததைப் பற்றி எண்ணுவதில்லை அவள். நடப்பதைக் குறித்து மனதை அலட்டிக்கொள்ளும் வழக்கமும் அவளிடமும் கிடையாது. இனி நடக்கப்போவதை நினைத்து ஏங்குவது மில்லை. எதெது எப்படி எப்படி நடக்குமோ அப்படி நடந்துவிட்டுப் போகட்டுமே என்ற அலட்சியம் அவளுக்கு. உணவு, உடை, உற்சாகம், உல்லாசப் பொழுது போக்குகள், இஷ்டம்போல் தின்றுகொண்டிருக்க ஐஸ்க்ரீம்-இவை தட்டுத் தடங்கலின்றிக் கிடைத்துக் கொண்டிருக்கிற வரை அவள் ராணிபோல் வாழ முடியாதா என்ன!

● 'அவளை ராணிபோல் வாழவைக்க முடியும்; அதற்கு என்னாலானதைச் செய்வேன்' என்று சொல்லி முன்வந்தான் ராஜா. அவன் ஒரு செல்லப்பிள்ளை.

செல்வம் அவனிடம் சதிராடிக்கொண்டிருந்தது. கார் இருந்தது. பகட்டும் குணமிருந்தது. பணத்தைத் தண்ணீர்போல் பாவிக்கும் மனமிருந்தது. அவனை நாடி நண்பர்கள் கூடாமல் போவார்களா?

ராஜா காலேஜில் 'கல்யாணப் படிப்பு' படித்தானே தவிர, கல்வி பெறவேண்டும் என்றோ, பெருமைக்குப் பட்டம் பெறவேணும் என்றோ ஆசை கொண்டவனல்ல. பொழுது போகாத வேளையில் பள்ளிக்கூடம் போவதும், பள்ளிக்கூடத்திலே தங்கியிருக்க 'மூடு' இல்லாதபோது ஜாலியாக ஊர் சுற்றுவதுமாக

வாழ்ந்த அவன் பார்வையில் அழகி செல்வா படாமல் தப்ப முடியுமா? அதிலும் அவள் ரொம்ப 'பிரீயாகப்' பழகும் பண்பினள் என உணர்ந்தபின் அவன்தான் சும்மா இருக்க இயலுமா!

ஒருநாள் மாலையில் பள்ளிக்கூடத்தின் விசேஷ விழாவில் கலந்து சிறப்பித்த குமாரி செல்வா அந்தக் கலையழகு குலையாமல் மெதுநடை நடந்து கொண்டிருந்தாள் வீடு நோக்கி. நிலந்தடவும் நீண்ட பாவாடை அலையலையாய் சுருண்டு பளபளத்து அசைய, மேலே கிடந்த பகட்டான தாவணி கவனத்தை இழுக்க, பூ முடித்த கூந்தல் தனியெழிலுடன் மிளிர, பவுடர்-கண்மை-லிப்ஸ்டிக் முதலிய 'மேக்அப்' பூச்சுகள் பளிச்சிட ஆடி அசைந்து சென்ற செல்வா ரோட்டில் செல்லும் அனைவரது பார்வையையும் இழுக்கும் வனப்புச் சுடராக விளங்கினாள்.

பின்னால் காரில் வந்த ராஜாவின் மனதை அலைக்களித்தது அசைந்து சென்ற குமாரியின் சிங்காரத் தோற்றம். வேகமாக முன் சென்றுவிட்ட கார்லிருந்து திரும்பிப் பார்த்த ராஜாவின் பார்வையைக் குமாரியின் முழுநிலவு முகமும், காந்தக் கண்களும் வசிகரித்தன. ஆகவே காரை நிறுத்தினான்.

பொங்கிவரும் அலைபோல் கம்பீர்யமாக நடந்த அழகி அருகே வந்ததும் 'வீட்டுக்குத்தானே? காரில் ஏறிக் கொள்ளுங்களேன்!' என்று உபசரித்தான் ராஜா.

வெட்டும் பார்வை. கொல்லும் ஒரு புன்சிரிப்பு, குளிர்ந்த குரலில் 'எதுக்கு வீண் சிரமம்!' என்ற பதில். இவற்றை ஏககாலத்தில் அளித்த குமாரி சிறிது முன் அசைந்தாள். எல்லாம் அவனை அடிமைகொள்ளும் சக்திகளாய் இலங்கின.

'சிரமம் ஒன்றுமில்லை, மிஸ் செல்வா. சும்மா காரில் ஏறிக் கொள்ளுங்கள்' என்று குழைந்தான் அவன். அவளும் அதிகமாக பிகு செய்யவில்லை.

அவள் காரினுள் அடைக்கலமானதனால் காரே அற்புத அழகு பெற்றுவிட்டதாகத் தோன்றியது அவனுக்கு. 'நாம் இதுபோல் சொந்தக் காரில் என்று தர்ன் போகமுடியுமோ? ஒரு அழகான கார் அவசியம் தேவைதான்' என்று நினைத்தாள் அவள்.

'இன்று உங்களுடைய நடனம் ரொம்பப்பிரமாதம். உங்கள் கலை நிகழ்ச்சியை விசேஷமாக இன்றையப் புரோகிராமில்

சேர்த்தது நல்லதாயிற்று!' என்றான் ராஜா.

'வந்தனம்' என முனங்கினாள் குமாரி.

'நீங்கள் ஏன் படிப்பை நிறுத்திவிட்டீர்கள்? நீங்கள் வராமல் போன நாளிலிருந்து கல்லூரியில் அற்புதக் காந்த அழகு மிகவும் குறைந்து போய்விட்டது என்றே தோன்றுகிறது. மகத்தான நஷ்டம்தான்' என்று குரலிலே இனிமையைத் தேக்கி அறிவித்தான் அவன்.

'அதனாலென்ன. காந்த வனப்பும் கலை ஒளியும் குறுகிய எல்லையினுள் ஒடுங்கிக் கிடக்கலாமா? அது தான் மகத்தான நஷ்டம். கல்லூரிக்கு ஏற்பட்ட நஷ்டம் கலை உலகிற்கும் நாட்டின் அழகு ரசிகர்களுக்கும் நல்ல லாபமாக மாறும் காலம் வந்து கொண்டிருக்கிறது' என்று கூறிக் கலகலச் சிரிப்பு சிந்தினாள் செல்வா.

'அப்படியா! ரொம்ப சந்தோஷம், ரொம்ப சந்தோஷம்!' என்று பாராட்டி மகிழ்ந்தான் மைனர். 'அந்நாள் எந்நாளோ என்று ஏங்கிக் கிடப்பார்கள் என்னைப் போன்ற அழகுப்பித்தர்கள், கலைரசிகர்கள் எல்லோரும்!'

'என்ன சொல்கிறீர்கள், மிஸ்டர் ராஜ்? உங்களுடைய அபிப்பிராயத்தைத்தான் கேட்கிறேன். அழகும் திறமையும் எங்கும் ஒளிவீச சினிமா துணைபுரியும் என்பது சரிதான். ஆனால் அதைவிட நேரடியாக மேடைமீது தோன்றிக் கலை விருந்து அளிப்பது தானே நல்லது?' என்று கேட்டாள் குயிலி.

'சந்தேகமில்லாமல்! வனப்பின் வளைவான வானவில்லை ஓவியத்திலே பார்ப்பதும் இனிமையாகத் தானிருக்கிறது. ஆனால் வண்ணங்கள் பூத்த அழகுவில்லை வானத்திலே கண்ணாறக் காண்பதில்தானே அற்புத மகிழ்ச்சி உண்டாகிறது!' என்று அளந்தான் அவன்.

'அப்படின்னா நான் சினிமாவில் நடிப்பது நல்லதல்ல என்று சொல்கிறீர்களாக்கும்?' என்று குரலை இழையவிட்டு, இதழ்க்கடையில் குறுநகை செலுத்தி, எழிலாய் முகம் திருப்பி, சுழலும் பார்வையை அவன் மீது நிறுத்தினாள் அவள்.

அப்பொழுது கார் ஒரு வீதியின் திருப்பத்திலே நெளிந்து நீந்தியதனால் ஓரத்திலிருந்த தெருவிளக்கின் மின்னொளி

குறிப்பாக அவள் முகத்தில் பாய்ச்சிய ஒளி வீச்சு போல் பரவி அவள் நிலையை நன்கு வெளிச்சமிட்டது. பையன் சொக்கிப் போனான் அவள் பேரழகிலே! கிரங்கிக் கிறுகிறுத்தான் குமாரியின் கண் வீச்சிலே! அவன் உள்ள நெகிழ்வை உணர்ந்து வெற்றிச் சிரிப்பு சிரித்தாள் அவள். அவ்வளவுதான்! அவனைத் தீர்த்துக்கட்டி விட்டது அந்தச் சிரிப்பு. இனி அவன் அவள் அடிமைதான்.

அவன் பரபரப்புடன் சொன்னான்: 'இல்லை, செல்வா. நீங்கள் சினிமா நட்சத்திரம் ஆகவேண்டும். அதே போல் நடனக் கலையுலகில் தனியொளிச் சந்திரனாகத் திகழவேண்டும்.'

'அது தானே கேட்டேன்!' என்று சொல்லிச் சிரித்தாள் அவள்.

வீடு வந்து சேர்ந்ததும் காரிலிருந்து குதித்திறங்கிய குமாரி 'ரொம்ப தேங்ஸ். இன்னொரு நாள் ஈவ்னிங்லே வாங்க, மிஸ்டர் ராஜ், காபி டிபன் எல்லாம் சாப்பிட்டு விட்டுப் பேசலாம்' என்று சொன்னாள்.

'ஓ!' என்று மகிழ்வுக்குரல் கொடுத்த ராஜா உற்சாகமாகச் சொன்னான் 'உங்களுக்கு ஆட்சேபணையில்லை யென்றால், ஏதாவது சினிமா பார்க்கப் போகலாம்' என்று.

'ஓ யெஸ். செய்தால் போச்சு!' எனக்கூறிக் களுக்குச் சிரிப்பு சிந்திவிட்டு டான்ஸ் ஆடிக்கொண்டே வீட்டினுள் சென்றாள் அவள்.

அவள் போகும் அழகையே கவனித்து மயங்கியிருந்த ராஜா பெருமூச்செறிந்துவிட்டு காரை ஓட்டிச் சென்றான்.

குமாரி சொல்லிய 'இன்னொரு நாள் ஈவ்னிங்'கை காலவரையரையில்லாமல் ஒத்திபோட விரும்பாத ராஜா மறுநாள் மாலை மூன்றரை மணிக்கே வந்து சேர்ந்துவிட்டான். செல்வாவும் அவள் தாயும் மகிழ்வுடன் வரவேற்றனர்.

தாய் சங்கரபுஷ்பம் அடுப்பங்கறையில் தங்கியிருந்தபோது, செல்வா ராஜாவுக்குத் தனது ஆடை அணி அலங்காரப் பொருள்களை யெல்லாம் காட்டினாள்.

'ஒரு டான்ஸ் குரூப் ஆரம்பிக்கணும். அதற்காகத்தான் கொஞ்சம் கொஞ்சமாக எல்லாவற்றையும் சேகரித்து வருகிறோம்!' என்றாள் அவள்.

'நல்ல ஏற்பாடு' என்றான் அவன்.

'சினிமாவிலே நல்ல சான்ஸ் கிடைத்தால்தான் நடிப்பது. அதிலும் அவர்களாகத் தேடி வந்தால்தான் ஒப்புக்கொள்வது என்று எண்ணம். பாருங்க மிஸ்டர் ராஜ், நாமாகப் போனால் படாதிபதிகள் நம்மை மலிவாக மதித்து விடுகிறார்கள். மேடைமீது தோன்றி திறமையினாலும், விளம்பரங்கள் பத்திரிகைப் பப்ளிஸிட்டி முதலியவைகளினாலும் கவனத்தைக் கவர்ந்த பிறகு அவர்களாகத் தேடிவந்தால் நமது மதிப்பு உயர்ந்துவிடுகிறது.'

'மதிப்பை நிர்ணயிக்கத் தெரியாத மடையர்கள்! அவர்கள் கெட்டார்கள்!' என்று அழுத்தமாக அறிவித்தான் அவன்.

'அவர்கள் தயவு நமக்கு வேண்டியிருக்கிறதே! நமது திறமை எங்கும் பரவவும், நமது புகழை அதிகமாக்கவும்....'

'கவலைப்படாதே செல்வா! நாமே ஒரு படக் கம்பெனி ஆரம்பித்து விடலாம். முதலில் ஒரு நாட்டிய சிங்காரியின் கதையைப் படம் பிடிப்போம். அதில் உங்கள் திறமையையும் அழகையும் எவ்வளவு தூரம் சோபிக்கச் செய்யலாமோ அவ்வளவுகுப் பிரமாதப்படுத்தி விடலாம்' என்றான்.

வியப்பால் விரிந்தன அவள் கண்கள். மகிழ்வு பூத்தது அவள் முகத்தில். உள்ளத்திலே உற்சாகம் குமிழிட்டுக் கொப்புளித்தது. ஆனந்தமாகவே மாறிவிட்டாள் குமாரி. சிட்டுக்குருவி போல் தத்திக் குதித்தாள். மணிப்புறாபோல் துள்ளி வட்டமிட்டுக் குதூகலத்தினால் கூவினாள். 'அஹஹா ஹொஹ்ஹோ!' என்று கலகலத்தாள். 'ராஜா என் ராஜா!' என்று பாடி ஆடி அமர்க்களப்படுத்தி அவன் அருகில்வந்து கன்னத்தில் அன்பாக வருடினாள் வளைகள் கலகலத்த மணிக் கரத்தினாலே.

ராஜா இந்த உலகத்திலிருப்பதாகவே நம்பவில்லை. விண்ணிலே பறப்பது போல, ஆனந்தச் சிறகுகள் பெற்று அற்புதலோகம் எங்கோ சுழன்று நிற்பதாகத் தோன்றியது அவனுக்கு. எதிரே அழகின் உயிர்ப்பாய் ஆடிய குமாரி கவிதையின் சிரிப்புபோல் காட்சிதந்தாள். இளமையின் பூர்ணமான அவள் கலையின் அலை நுரையாய், மலர்க்கூட்டத்தின் ஒளிக்கொடியாய், அற்புதமாய் இசையாய் நயமாய் வாழ்வாய், வாழ்வின் சிறப்பாக-எப்படி எப்படி யெல்லாமாகவோ-தோன்றினாள். 'இந்த இன்பம் நிலைத்திருப்பதற்காக, இவளுக்காக என்ன வேண்டுமானாலும்

செய்யலாம். எவ்வளவு பணம் வேணுமாயினும் வாரி இறைக்கலாம்' என்று கிசுகிசுத்தது அவன் மனம்.

கன்னம் தொட்ட மணிக்கரத்தைத் தன் கைநீட்டித்தொட முயன்ற வேலையிலே பிடியினில் அகப்படாக் கனவின் எழில்போல் விலகி ஓடினாள் குமாரி. தூர நின்று கிண்கிணிச் சிரிப்பு ஆர்த்துக் குதித்தாள்.

'ஏது ஆனந்தம் ஆளையே தூக்கிக்கொண்டு போகுதே! ஏனம்மா இந்தச் சிரிப்பாணியும் குதிப்பும்?' என்று கேட்டபடி வந்தாள் தாய், டிபன் காபி முதலியன சுமந்து.

மகள் விஷயத்தைச் சொல்லவும் அவள் உள்ளத்திலும் ஆனந்தம் நிறைந்தது. 'செய்யக்கூடியவன்தான். செல்வம் நிறைய இருக்கு. செய்யலாம். அவன் பேச்சு தவறாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது செல்வாவின் பொறுப்பு' என்று நினைத்தாள் சங்கர புஷ்பம்.

● செல்வா தன் பொறுப்பை நன்கு உணர்ந்திருந்தாள். அது மட்டுமல்ல. முன்னேறுவதற்குக் கையாள வேண்டிய கலை நயங்களையும் நன்றாகத் தெரிந்து வைத்திருந்தாள். அவள் திறமைகளில் அந்தப் பண்பும் இயல்பாகக் கலந்திருந்தது.

ஆகவே குமாரி செல்வா 'பணக்காரன் மகன் பணக்காரன்' என்ற அந்தஸ்திலே வாழ்ந்து அதை வெளிச்சம்போட்டுத் திரிய விரும்பிய செல்லப்பிள்ளை ராஜாவின் காரில் அடிக்கடி காணப்பட்டாள். சினிமாத் தியேட்டர்களில், ஹோட்டல்களில், கடலோரத்திலே, தன் வீட்டு மாடியிலே எல்லாம் ராஜாவின் இணை பிரியாத ஜோடிபோல் திகழ்ந்தாள் அவள்.

ராஜா உண்மையிலேயே கிடைத்தற்கரிய ராணியைப் பெற்றுவிட்ட ராஜா என்றே நம்பினான். செல்வா கணந்தோறும் வியப்புகள் காட்டும் கலை-எழில். காணக் காண நயம் குறையா அமுத நிறைவு. பழகப் பழகப் புதுமை குன்றாத இளமை இன்பம். அன்புடன் பேசி உறவாடி மகிழ மகிழ ஆசையை அடங்கவிடாமல் தூண்டும் அழகுக் காந்தம். அவள் கண் சுழற்சியில், இதழின் சுழிவில், இன்பச் சிரிப்பில், மேனி நயத்தில், இளமை விருந்தில், கலை விளையாட்டில் அவன் தன்னையே பறிகொடுத்து விட்டான்.

'நீ ஆட வேண்டியதில்லை. ராஜாவின் ராணியாகவே என்றும்

இருந்துவிடு, செல்வா. நீ விரும்பிய சொந்தக் கார் உனக்குக் கிடைத்துவிட்டது. சுகவாழ்வுக்குத் தேவையான வசதிகள் எல்லாம் உனக்கு உள்ளன. நீ ஏன் ஆடிப் பிழைக்க விரும்புகிறாய்?' என்று கேட்டான் ஒருநாள்.

அவள் சிரித்தாள். அலட்சியம் தொனித்தது அதில். அகங்காரம் மிதந்தது அதிலே. எள்ளிடும் தன்மை நிறைந்திருந்தது. என்னவோ சூடாகச்சொல்ல வாயெடுத்தாள். பின் தன்னையே அடக்கிக்கொண்டாள் தன் நலனை எண்ணி. துவண்ட கொடியென நெளிந்து அவன் மீது சாய்ந்து அவன் அருகிலே அமர்ந்து கழுத்தில் கைவளைத்து இனியகுரலில் ரகசியம் பேசினாள்.

'ராஜா, நமது திட்டம் என்ன? நாம் இவ்வளவு செலவு செய்தது எல்லாம் வீணாகத்தானா? படப்பிடிப்பு வேண்டுமானால் காத்துக்கிடக்கட்டும். நாட்டியகோஷ்டியைத் தீவிரமாக நடத்தி எங்கும் சுற்றிக் கலைநயம் காட்ட வேண்டியது முக்கியம்' என்றாள். தன் பேச்சுக்கு அதிக வலு கொடுப்பதற்காக அன்பனின் கன்னங்களில் இரண்டும் இதழ்களில் ஒன்றும் சுடச்சுடப் பொறித்தாள். தனது இதழ்களின் இன்ப முத்திரையைத்தான்!

அப்புறம் அவனுக்குத் திறமை ஏது, துணிவு ஏது அவள் திட்டத்திற்கு எதிராகப் பேசுவதற்கு!

குமாரி செல்வா சுக வாழ்வை மட்டுமே விரும்பவில்லை. பணம், பவிஷு, படாடோபம், செல்வச் சௌகரியங்கள் மட்டும் போதா வாழ்க்கை சிறப்புறுவதற்கு. வாழ்க்கைக்கு இவையும் தேவைதான்; எனினும் இவற்றையெல்லாம் விட அதிகமாகத் தேவை புகழ். அது அவசியத்தேவை-இதுவே அவள் இதய ஒலி.

புகழ் வேண்டும். அதிகமாகப் புகழ்பெறவேணும். மேலும் புகழ்....மேலும் மேலும் புகழ்.... மேலே மேலே மேலே-புகழ் வளர்ந்துகொண்டே போகவேண்டும் எல்லையில்லாமலே. அவளது ஆசை அது. அவளுக்கு அடங்காத-அடக்க முடியாத-பசி அது.

பசி-எந்த ரகத்ததாக யிருந்தாலும் சரி-மிகுந்து விடுகிறபோது, அதைத் தணிக்கவேண்டும் என்ற ஆசை வ்ளர்கிறபோது, பசியே தணியாத ஆசையாகிப் பின் வெறிநிலை அடைகிறபோது, அந்த வியாதிக்கு ஆளாகிறவர்கள் தங்கள் திருப்திக்காக எந்த வழியையும் கையாளத் துணிந்து விடுகிறார்கள். சந்தர்ப்பம் தங்கள் முன்னால்

கொண்டு வந்து சேர்க்கிறவர்களைத் தங்கள் நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்ளத் தவறுவதில்லை. அவர்கள் உதவி தேவையில்லாமல் போகிறபோது-அல்லது, அவர்களைவிட அதிகம் துணைபுரியக்கூடியவர்கள் வந்து சேர்கிற பொழுது-முந்தியவர்களை உதறி எறியவும் தயங்குவதில்லை. 'செய் நன்றி' என்பதெல்லாம் வாழ்க்கை உயர்வுக்குக் கட்டி வராத பேச்சேயாகும் இவர்களுக்கு!

● புகழ்ப்பசி மிகுந்த குமாரி செல்வா தனது வாழ்க்கை உயர்வுக்குக் குந்தகமாக யிருப்பவர்களின் ஆலோசனைகளைக் 'கட்டி வராதபேச்சு' என்று ஒதுக்கிவிட்டாள். ராஜா அவளுக்கு நல்லது என்று எவ்வளவோ சொன்னான். அவன் அநாவசியமாகத் தன் விஷயங்களில் தலையிடுகிறான் என்று சிணுங்கினாள் அவள்.

அவன் சிரித்தும், சினந்தும் உபதேசிக்கத் துணிந்த போது சீறி விழுந்தாள் குமாரி. அவளைத் தனது ஸ்ரீமதியாக மாறிவிடும்படி கோரினான் அவன். 'எனக்குக் கல்யாணம் தேவையில்லை. கட்டுப்பாடுகளை விதிக்கும் சம்பிரதாய முறை எதுவுமே எனக்கு வேண்டாம். நான் கலைவளர்க்க வாழ்கிறவள். எனது இஷ்டம்போல் வாழும் உரிமை எனக்கு உண்டு' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டாள்.

வரவர அவன்மீது அவளுக்கு வெறுப்பு பிறந்து, கசப்பாக மாறி, விரோதமாக முற்றியது. ராஜா வீண் தொல்லை, அமைதியைக் கெடுக்கும் தொண தொணப்பன், கலை நயம் தெரியாது தன்னைக் கழுத்தறுக்க வந்த வீணன் என்று எண்ணினாள். சிடுசிடுத்தாள். எரிந்து விழுந்தாள். ஏசினாள். அவன் உறவு தேவையில்லை என்று சுட்டவும் தயங்கவில்லை.

இதற்குள் குமாரி செல்வா 'நாட்டிய அழகி' என்று பெயர் பெற்று விட்டாள். ராஜாவின் செல்வமும், துணையும், உழைப்பும் அதற்கு எவ்வளவோ உதவின. சென்றதை எண்ணிக் கொண்டிருக்கும் பண்பு பெற்றிராத செல்வா அதையெல்லாம் பெரிதுபடுத்த முடியுமா என்ன!

அவ்வேளையில் அவள் புகழை அதிகரிக்கும் திறமையும் தகுதியும் நாட்டிய நிபுணர் கலையானந்தரிடம்தான் உள்ளன என்று நிச்சயமாகத் தெரிந்தது. அவளுக்கு நடனம் கற்றுக் கொடுக்க வந்தவர் அவர். புதுப்புது நடனங்களைக் கற்பித்துப் பழக்கி அவள்

திறமைக்கு வளர்ச்சியும் புதுப்பொலிவும் அளிக்க முயன்றவர். அவருக்கு வயது முப்பத்தைந்து தானிருக்கும். அழகர். குளுமையாகப் பேசுவார். நல்ல பெயரிருந்தது அவருக்கு.

ராஜாவின் உறவில் அலுத்துப்போன குமாரி செல்வா கலையானந்தரைத் தழுவும் பூங்கொடியானாள். அவள் போக்கைக் கண்டித்த ராஜாவை விரட்டியடித்தாள்.

'எனக்கு எல்லாம் வேண்டியதுதான். சரியான பாடம் படித்தேன்' என்று தன் அனுபவத்தையும் பணச்செலவையும் புத்திக் கொள்முதல் கணக்கிலே பதிவு செய்து கொண்ட ராஜா அவள் உலகிலிருந்து அஸ்தமனமாகி விட்டான். அதற்காக அவள் வருந்தவில்லை.

அவனும் ஏங்கிச் செத்துவிடவில்லை. தனது குலத்துப் பெரியோர்கள் தேர்ந்து நிச்சயித்தபடி சுபயோக சுபமுகூர்த்தத்திலே சௌபாக்கியவதி ஒருத்தியைத் திருமணம் செய்துகொண்டு நல்வாழ்வு வாழத் தொடங்கினான்.

'நாட்டிய அழகி' என்று புகழ்பெற்ற குமாரி செல்வாவுக்கு சினிமாப் புகழ்பெறும் ஆசை வளர்ந்தது. அவள் அழகிலும் புகழிலும் மயங்கிய டைரக்டர் ஒருவரை அவள்முன் கொண்டுவந்து தள்ளியது சந்தர்ப்பம். அவர் அவள் ஆசையைத் தூண்டிவிட்டு தனது ஆசையைத் தணித்துக் கொண்டார்!

சில மாதங்கள் அவருடன் சுற்றியலைந்தும், சினிமாப் பார்த்ததும், ஜாலி வாழ்வு வாழ்ந்ததும்தான் கண்ட பலன். அவர் டைரக்ட் செய்வதாகயிருந்த படம் பேச்சளவிலேயே முடிந்து விட்டது. பணம் போடத் தயாராகயிருந்தவர்கள் அந்த எண்ணத்தையே கை விட்டுவிட்டார்கள். ஆகவே ஆறேழு மாதங்களுக்குப் பிறகு செல்வாவைக் கைவிட்டு விட்டார் அவர்.

குமாரி செல்வாவுக்கு 'உலகம் எப்படியிருக்கிறது' என்ற உண்மை சிறிது சிறிதாகப் புரிந்தது. அதற்குள் அவள் எத்தனையோ விதமான அனுபவங்கள் பெற்று விட்டாள். ரகம்ரகமான ஏமாற்றுக்காரர்கள், பகட்டுப் பெரியார்களுட னெல்லாம் பழக நேர்ந்தது.

'இவர்களை யெல்லாம் பார்க்கும்பொழுது, ராஜா எவ்வளவோ நல்லவர் என்று தோன்றுகிறது' என்று எண்ணுவாள்

அவள். 'அவர் விரும்பியபடி அவரையே கல்யாணம் செய்து கொண்டிருக்கலாம். அவருடன் வாழ்க்கை நடத்த இசைந்திருந்தால், அந்தஸ்தாவது இருக்கும். பலபேரை நம்பிக் கெட்டிருக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டிராது!' என்று கூட நினைத்தது உண்டு. ஆனால் அபூர்வமாக எப்பவாவதுதான்!

புகழ்ப் பசியும் சுதந்திர தாகமும் தணியமுடியாத அளவிலே இருந்ததனால், குமாரி செல்வா இஷ்டம் போல் வாழ்ந்து வந்தாள். அவளுக்கு நாட்டியத்தில் அகில இந்தியப்புகழ் வாங்கித் தரமுடியும் என்று உறுதி கூறி அலைந்த நடனக்கலையரசு ஒருவரை அடிக்கடி அவளுடன் காணமுடிந்தது.

வலை என்று தெரிந்த பிறகும்கூட அதன் அழகில் மயங்கி வட்டமிடும் ஈ அதில் அகப்பட்டு விடுவதும் இயல்புதானே.

## 4

மனித சமுதாயத்தின்மீது வெறுப்புற்று மலையுச்சியைத் தேடிப் போனாலும்கூட, அத்தனிமையில் அலுத்துப்போய் மறுபடியும் மனிதகுலத்தையே நாடி வந்த ஜாரதுஷ்ட்ரன் போல்தான் ஆசிரியர் பரமசிவமும் நடந்து கொண்டார்.

'வால் நட்சத்திரம்' செத்துப்போனதும் 'தமிழ்நாடு சுத்த மோசம்' என்று சொல்லிவிட்டு இமயத்தை நோக்கிப்போனவர் பிறகொரு நாள் திடீர் விஜயம் செய்தார். இடைக்காலத்தில் ஏழு வருஷங்கள் பறந்தோடிப் போயிருந்தன.

அக்காலத்தில் பரமசிவம் என்ன செய்தார், எப்படி வாழ்ந்தார் என்பது பரமசிவமே சொன்னால்தான் தெரியும். அவர் கீதாசார்யன் கண்ணனைப்போல 'இந்த ரகசியங்களிலே நான் மௌனம்' என்று சுருக்கமாக அறிவித்து விட்டார். ஆகையினாலே பலர் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள்.

பரமசிவம் காசியில் ஒரு சாப்பாட்டுக் கிளப்பில் செர்வர் வேலை பார்த்ததாகச் சொன்னார்கள். அவருக்குத்தெரிந்த வள்ளல் நண்பர் ஒருவருடன் உல்லாசமாக ஊர்சுற்றிவிட்டு காஷ்மீரத்தில் சுகவாசம் அனுபவித்தார் என்று பேசினார்கள். யாரோ ஒரு தெருப்பாடகியின் பின்னால் சிங்கிதட்டித் திரிந்து, அந்தப்

பிழைப்பில் வந்த வரும்படியைக்கொண்டு இருவரும் வாழ்ந்ததாகச் சிலர் கயிறு திரித்தார்கள். மாஜி 'வால்நட்சத்திரம்' பத்திரிகையின் ஆசிரியரைப்பற்றி அடிபட்ட வதந்திகளுக்குச் சில உதாரணங்கள் இவை.

ஆசிரியர் பரமசிவம் மாறிவிடவில்லை. ஆகவே அவர் வழக்கம்போல் மற்றவர்களின் பேச்சிற்கு மதிப்பு கொடுக்காமல் தன் இஷ்டம்போல் வாழ்ந்தார்.

ஒருநாள் மத்தியானம் அவர் வழக்கம்போல் தானாக எதையோ நினைத்துக் சிரித்துக்கொண்டு ரோடு வழியாக நடந்து கொண்டிருந்தார். திடீரென்று யாரோ அவர்மீது மோதிக் கொண்டதை உணர்ந்ததும் திடுக்கிட்டு நின்றார். மேலே வந்து விழுந்தது யார் என அறிந்ததும் மேலும் திடுக்கிட்டார் அவர்.

'அஹஹஹ்! குமாரி செல்வாதானா! சரித்திரம் திரும்பத் திரும்ப ஒலிக்கும் என்பது சரியாகத்தானிருக்கிறது. என்ன சௌக்கியந்தானா?' என்று விசாரித்தார்.

பாதி கடித்த மாம்பழத்தைக் கையில் பிடித்தபடி ஓடிவந்து அவர்மீது மோதிவிட்டு விலகி நின்ற குமாரி சிரித்தாள் 'ஓ நீங்கள் தானா! நல்லதாப்போச்சு.... நல்லவேளை உங்கமேலே மாம்பழம் பட்டுவிடவில்லை!' என்றுசொல்லி, பொங்கி வந்த சிரிப்பை அடக்க முடியாமல் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள் அவள். ஏழு வருஷங்களுக்கு முன்பு ஒருநாள் நிகழ்ந்த 'ஐஸ்க்ரீம்' நிகழ்ச்சி அவள் நினைவிலும் கூத்தாடியது.

ஒருவாறு சிரிப்பை சிரமப்பட்டு ஒடுக்கிவிட்டு 'நீங்கள் மாறவேயில்லை ஸார். அன்று பார்த்தமாதிரியே யிருக்கிறீர்கள்!' என்றாள் குமாரி.

என்றும் ஒரே நிலையாய் 'வதகப்புடலங்காய்' போலவே காட்சியளித்து வரும் தனது திரு உருவைப் பார்த்துக்கொண்ட பரமசிவத்தின் கண்கள் எதிர்நின்ற பாவைமீது ஓடின. அவர் சிரித்தார்.

'ஏன் சிரிக்கிறீர்கள்?' என்று கேட்டாள் செல்வா.

'இன்று அளவு டேப் இல்லாமல் போனால்கூட, நூலுக்கும் புட்ருலுக்கும் வேலை இருக்காது. நிச்சயமாக இல்லை' என்று கூறினார் அவர்.

அவள் புரிந்துகொள்ள முடியாமல் விழித்தாள்.

'இன்று 31¼ அங்குலம் என்று பேட்டியில் எழுதியிருந்ததை அன்று ஆட்சேபித்து அளந்து பார்க்கச் சொன்னீர்களே. இன்று அதை நீங்கள் மறுக்க முடியாது. ஆகவே எனது எழுத்திலே தீர்க்க தரிசனமான உண்மை ஏழு வருஷங்களுக்கு முன்பு தானாகவே வந்து விழுந்திருக்கிறது!'

அவருடைய ஹாஸ்யத்தை ரசிக்க முடியாமல்நிற்க இயலவில்லை அவரால். அதனால் சிரித்தார். பலமாகச் சிரித்தார். அப்பாவி மனுஷன் அந்தச் சிரிப்பாலேயே ஜீவனிழந்து செத்துப் போவாரோ என்று மற்றவர்கள் அனுதாபப் படும்படியாகச் சிரித்தார். குமாரியின் பேட்டிகள் அவரது நினைவில் அவ்வளவு பசுமையாய்ப் பதிந்திருந்தன.

அவள் வெட்கமுற்று முகம் சிவந்து நின்றாள். பாதி தின்ற மாம்பழம் அவள் கையிலே இருக்கிற உணர்ச்சி உண்டாகவும் அவசரம் அவசரமாக அதைத் தின்னும் திருப்பணியில் ஈடுபட்டாள். அது அவரது சிரிப்பை அதிகப்படுத்தியது.

'இது ஐஸ்க்ரீம் இல்லை, செல்வா. கரைந்து விடாது. மெதுவாய் நிதானமாக சுவைத்துச் சாப்பிடலாமே!' என்று சிரிப்போடு சிரிப்பாகச் சொற்களையும் அருளினார் ஆசிரியர்.

பிறகு 'அம்மா சௌக்கியமா?' என்று விசாரித்தார்.

'அம்மா இறந்து இரண்டு வருஷங்களாச்சு, ஸார்!'

'அப்போ நீங்கள்?'

'எனக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. ஆனால்....நான் வந்து.... வந்து ஸார், என் கூட....'

அவள் எப்படி விளக்குவது என்று திண்டாடித் திணறிய வேளையிலே, 'செல்வா' என்று அழைத்தபடி ஒரு பரட்டைத் தலையர் வெளியே வந்தார். அவர் தலைமுடித் தோற்றமே அவர் ஒரு நாட்டிய நிபுணர் என்று சுட்டிக் காட்டியது.

பரமசிவத்துக்குத் தன் நண்பர் ஒருவர் குமாரி செல்வாவின் வாழ்க்கை மாற்றங்கள் பற்றிக் கூறியது அப்பொழுதுதான் நினைவின் மேல் பரப்பிற்கு வந்தது.

'ஓ!' என்றார் ஆசிரியர். அந்த ஒரு உச்சரிப்பில் எவ்வளவோ

அர்த்தம் பொதிந்திருந்தது.

'தெருவிலே நின்று என்ன நாடகம் இது, செல்வா?' என்று கடுகடுத்தார் உள்ளிருந்து தலைநீட்டிய உத்தமர்.

'வீட்டுக்குள்ளே வாங்க ஸார்' என்று அழைத்தாள் செல்வா. கையிலிருந்த மாம்பழம் முழுவதையும் சாப்பிட்டு, கொட்டையைத் தூர எறிந்துவிட்டு உள்ளே செல்லத் தயாரானாள் அவள்.

'இதைத் தட்டிப்பிடுங்க வந்தார் இவர். நான் ஓட ஆரம்பித்தேன். அவர் துரத்தவும் நான் தெருவுக்கே வந்து விட்டேன்' என்றாள்.

'ரொம்ப சந்தோஷம். நீங்கள் பழைய குமாரி செல்வா ஆகவேதான் இருக்கிறீர்கள் இன்றும். ஆனால் உருவத்தில் மட்டும் கொஞ்சம் மாறுதல்' என்றார் பரமசிவம்.

'வாழ்விலும் எவ்வளவோ மாறுதல் ஏற்பட்டுவிட்டது ஸார்!'

'இருக்கட்டுமே. நீங்கள் என்றுமே குமாரியாக வாழத் திட்டம் போட்டுவிட்டீர்கள் போலிருக்கு! நான் போய் வருகிறேன்' என்று நகர்ந்தார் அவர்.

'உங்களைப் பார்த்து ரொம்ப ரொம்ப நாளாச்சு. இல்லையா ஸார்?' என்று கேட்டாள் குமாரி.

'ஆமாம். ஏழு வருஷங்கள்!' என்று சொல்லிவிட்டு நடந்தார் பரமசிவம்.

'யார் அது?' என்று கேட்ட ஆண் குரலும், 'அவர்தான் வால் நட்சத்திரம்னு ஒரு பேப்பர் நடத்தினாரே, அந்த ஆசிரியர்' என்ற குமாரியின் பதிலும் அவர் காதில் விழுந்தன.

'ஓகோ! அவனா! உருப்படத் தெரியாத பரமசிவமா!' என்று கூறிக் கனைத்தார் புதுப்பேர்வழி. அந்தக் கனைப்பும் ஆசிரியர் காதில் பட்டது.

இந்த மதிப்புரை ஆசிரியருக்கு மிகுந்த மகிழ்வையே தந்தது. 'நம்ம நாடும் மனிதர்களும் கொஞ்சம்கூட மாறாத பண்பினராக வாழ்கிறார்களே! பளா பளா!' என்ற திருப்தியை உண்டாக்கியது தான் காரணம்.



# ஒரு வீட்டின் கதை

நகரம் என்றும் கொள்ள முடியாத கிராமம் என்றும் தள்ளமுடியாத, -இரண்டின் 'லெட்சணங்களை'யும் தன்னிடம் கொண்டிருந்த-அந்த ஊரின் மேலக்கோடியில் தனித்து நின்ற பெரிய வீட்டை மறுபடியும் வெள்ளை அடித்துக் கொண்டிருந்தார்கள்.

'ஒத்தை வீடு' என்று சிறப்புப் பெயர் பெற்றிருந்த அந்த வீட்டுக்கு மீண்டும் யாரோ குடி வந்திருக்கிறார்கள் என்று தோன்றியது. சுவர்களுக்கு வெள்ளை பூசுவது, சன்னல்களுக்கு இளம் நீலவர்ணம் கொடுப்பது, உத்திரங்கள், மற்றும் கட்டைகள், கதவுகள் அனைத்துக்கும் வார்னீஷ் தடவுவது முதலிய வேலைகள் மும்முரமாக நடந்தன.

அந்த வீடு இத்தகைய 'மேக்அப்'களை ஏற்றுக்கொள்வது இதுதான் முதல் தடவை என்றில்லை.

பிரசார பலமும், செயல்திறமும் பெற்றுவிட்ட-செயலூக்கம் கொண்ட சிஷ்யர்கள், பக்தர்கள், வியப்பர்கள், பஜனைபாடிகள், முதுகு சொறிஞ்சிகள் வகையினரையும் வசதியாகப் பெற்று விடுகிற-அரசியல் மற்றும் சமூகப் பெரியார்கள் எய்திவிடுகிற ஒரு அரும் பெரும் வாய்ப்பைப் பெறக்கூடிய தகுதி அந்த வீட்டுக்கும் உண்டு. ஆனால் அது வெறும் வீடு ஆகத் தனித்து நிற்கிறதே! ஆகவே, அதுக்கு நூறு வயசு ஆகி விட்ட போதிலும், நூற்றாண்டு விழா கொண்டாடக் கூடிய பாக்கியத்தை அந்த 'ஒத்தை வீடு' அடையவில்லை.

வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் கால வெள்ளத்தில். நூற்றியொரு சிற்றலைகளின் மோதலை ஜீரணித்தபடி நிற்கும் அந்தப் பெரிய வீடு இப்பவும் உறுதியாகவே காட்சி தருகிறது. அதைப் பார்க்கிறவர்கள் 'அந்தக் காலத்துக் கட்டுமானத்தை'யும், பழங்காலக் கட்டிடங்களின் உறுதிப்பாட்டையும் புகழாமல் போவதில்லை.

'இப்பவும் கட்டிடங்கள் கட்டுறானுகளே! கட்டின மறுமாசமே சுவர்களிலே விரிசல் கண்டு விடுது. பெரிய மழை பெய்தால் வீடு

நெடுக ஒழுக்கு ஏற்படுது. இது பழைய வீடுதான். சுவரிலே எங்கேயாவது ஒரு வெடிப்பு விழுந்திருக்குதா? ஓட்டை ஒழுக்கு என்று பேசப்படுமா?' என்று, வாயில்லாத அந்த வீட்டுக்காக வக்காலத்து வாங்கிப் பேசுகிறவர்களுக்கும் குறைவில்லை.

நாகரிகமும் கலைகளும் வெகுவேகமாக முன்னேறிவிட்ட -இன்னும் முன்னேறிக் கொண்டிருக்கிற-இந்நாட்களில், நவீன டிசைன்களிலும், புதுரக அமைப்புகளிலும், 'மாடர்ன் ஆர்க்கி டெக்சுவல் ஃபாஷன்'களின்படியும் எப்படி எப்படி எல்லாமோ கட்டிடங்கள் முளைத்துக் கண்களைக் கவர்கின்றன; அல்லது உறுத்துகின்றன. இந்நிலையிலேகூட பழங்கால அமைப்பு முறையின்படி கம்பீரமாக நிற்கும் அந்த 'ஒத்தை வீடு' கண்நிறைந்த காட்சியாய் மனசுக்கு இதம் தரும் தோற்றமாய் மிளிர்கிறது, 'சுற்றுலா' போவதை இனிமையான பொழுது போக்காகக் கொண்டுள்ள சில சுக ஜீவிகள் அந்த வீட்டின் இந்த அம்சத்தைக் குறித்து சிலாகிப்பது உண்டு.

'ரொம்ப காலத்துக்கு முந்தி' இப்படி ஒரு வீட்டைக் கட்டி, மிடுக்காக வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டு, செயல் புரிந்தவர் உண்மையிலேயே ஒரு பெரிய ஆள் ஆகத்தான் இருக்க வேண்டும் என்று 'ஒத்தை வீட்டைப்' பார்க்கிற சாதாரணர்கள் எண்ணுவது வழக்கம்.

அக்கம் பக்கத்தில் இல்லாத வகையில் ஒரு பெரிய வீட்டைக்கட்டி, 'செயம் செயம் என்று போட்டடித்த' பிறவிப் பெருமாள் பிள்ளை, அவர் காலத்தில், அந்த வட்டாரத்தில் ஒரு பெரிய ஆள் ஆகத்தான் விளங்கினார்.

'நாடாறு மாதம் காடாறு மாதம்' என்று வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டதாகப் புகழப்படுகிற விக்கிரமாதித்த ராஜன் பாணியைப் பின்பற்ற விரும்பினார் போலும் ஒரு பெரியவர். வட மலையப்ப பிள்ளை எனும் அப்பெரியார் நாடாளும் பொறுப்பை ஏற்றிருந்தாராம் நாயக்க மன்னர் காலத்திலே. அவர் வீட்டுத் திண்ணையிலே திண்டு போட்டுச் சாய்ந்து ஆக்கினைகள் செய்து வைத்தாராம். அந்தத் திண்டு கிழக்குத் திக்கைப் பார்த்தபடி கிடக்கும் ஒரு ஆறுமாத காலம். அடுத்த ஆறுமாதங்கள் மேற்கு நோக்கித் திரும்பியிருக்கும். அதன் பிறகு ஆறு மாத காலம் தெற்குநோக்கி மாற்றப்படும். அப்புறம், வடக்குத் திசையைப்

பார்த்திருக்கும். வடமலையப்ப பிள்ளை, கிழக்கே உள்ள ஊர்களின் விவகாரங்களை அதற்கென்று ஏற்பட்ட ஆறு மாதத்தில் 'பைசல் பண்ணுவார்'. இப்படி, மேற்கு, தெற்கு, வடக்குத் திசைகளிலிருந்து வருகிற வழக்குகள் குறைகளை எல்லாம், அந்த அந்தத் திசைகளுக்கு உரிய ஆறு மாத காலத்தில் கவனித்து முடிப்பார். இவ்வாறு 'திசைகட்டி ஆண்ட திருவாளர்' வடமலையப்பரின் வழி வந்தவர்தான் பிறவிப் பெருமாள்.

தனித்தன்மை கொண்ட பெயர்களைத் தங்கள் குலக் கொழுந்துகளுக்கும், தாங்கள் வசிக்கும் இடங்களுக்கும் இட்டு மகிழ்வதை ஒரு பெருமையாகக் கொண்டிருந்தவர்கள் பிறவிப் பெருமாளின் மூதாதையர். அவர்கள், 'ஒத்தை வீடு' இருக்கிற ஊருக்கு மகிழ் வண்ணபுரம் என்ற அழகான பெயரைச் சூட்டினார்கள். அவர்கள் வழிபட்டு வந்த மகிழ்வண்ண நாதர் என்ற தெய்வத்தின் திருநாமத்தையே தங்கள் ஊருக்கும் இட்டார்கள்.

'வழுவல, கால வகையினானே' என்ற தர்மத்தின்படி அந்த ஊரின் பெயரையும் இஷ்டம்போல் சிதைத்து உச்சரிக்கலானார்கள் பின்வந்தவர்கள்.

மகிழண்ணபுரம் என்றும், மகுணபுரம் என்றும், மண்ணபுரம் என்றும் இன்னும் பலவாறாகவும் பெயர்பெற நேரிட்டது அந்த இடம்.

என்றாலும், மகிழ்வண்ணபுரம் என்று வாய்நிறை- செவிகுளிர -மனம் கனிய உச்சரித்து மகிழும் இயல்பினரும் இல்லாமலில்லை. அவர்களில் ஒருவராகத்தான் பிறவிப்பெருமாள் பிள்ளையும் விளங்கினார்.

பெரியதுகளையே எண்ணி, பெரிய முறையிலேயே காரியங்கள் செய்து 'பெரிய பிள்ளை' என்று பெயர் பெற்று வாழ்ந்த பிறவிப் பெருமாள் அந்தப் பெரிய வீட்டைக் கட்டியதே சுவையான அனுபவம்தான்.

ஒவ்வொரு நபருக்கும் சுவாரசியமான ஒரு கதை உண்டு. ஒவ்வொரு குடும்பமும் சுவைமிக்க கதைகளைக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு ஊரும், ஒவ்வொரு சமூகமும் தனித்தனியே ரசம் நிறைந்த கதைகளின் களமாக இருக்கின்றன.

அதேபோல, ஒவ்வொரு 'வீடும் தனக்கெனத் தனிக் கதை கொண்டிருக்கிறது.

## இரண்டு

ஆற்றில் குளிக்காத நாள் எல்லாம் 'பிறவா நாளே' என்ற எண்ணம் கொண்டிருந்த பிறவிப் பெருமாள் பிள்ளைக்கு, ஆற்றுக்குப்போன ஒரு நாள் அதிவிசேஷ அற்புத நாளாக அமைந்தது.

அவரைப் பொறுத்த வரையில், ஆற்றில் நீராடுவது வெறும் நித்திய கர்மம் அல்ல; மனோகரமான இனிய சுகானுபவம் ஆகும். பலரைப் போல, போனோம்-தண்ணீரிலே முங்கினோம்-தலையைத் துவட்டினோம்-திரும்பினோம் என்று அவர் செயல்படுவதில்லை. பல் துலக்குவது, வேட்டி துவைப்பது முதல், குளித்து முடித்துக் கரை ஏறுவதுவரை ஒவ்வொரு காரியத்தையும் வெகு சாவதானமாய் மிகுந்த ஈடுபாட்டுடன் செய்வது அவர் வழக்கம்.

அந்த இடத்தில் ஆறு அழகாக நெளிந்து வளைந்து, ஒரு பருவ மகள் போல், அசைந்து நகர்ந்து முன்னேறிக் கொண்டிருந்தது. கரைகளில் எழில் கொலுவிருந்தது; அமைதி குடியிருந்தது. தூரத்தில், மேற்குத் தொடர்ச்சி மலையின் நெடிய, உயரிய தோற்றம், வேளைக்கு ஒரு வனப்பு காட்டி மகிழ்வளித்தது.

அச் சூழ்நிலையின் அழகிலும் அமைதியிலும் லயித்தவாறே பிறவிப்பெருமாள் பிள்ளை ஆற்றில் சுகமாகக் குளிப்பார். எவ்வளவு நேரம் என்று ஒரு கணக்குக் கிடையாது. உள்ளமும் உடலும் திருப்தி அடைந்ததும் கரையேறுவார். அப்போது சூரியன் கீழ்திசையில் செவ்வட்டமாய் தோன்றி, ஒளித்தகடாய் மாறி, இதமான வெயிலைக் கொட்டத் தொடங்கியிருக்கும். அந்த ஒளியில் எல்லாம் புதுவனப்புடன், புத்துயிர்ப்புடன் பிரகாசிக்கும்.

அன்றும் அப்படித்தான். ஆனால் வழக்கத்துக்கு மாறாக ஒன்று பிறவிப்பெருமாள் பிள்ளையின் கவனத்தைக் கவர்ந்தது. ஒரு மாமரத்தின் கிளையில் பளிச் பளிச்சென்று ஒளி வெட்டித் தெறித்துக் கொண்டிருந்ததை அவர் பார்த்தார். கூர்ந்து நோக்கினார். ஒரு குரங்கு. அதன் கையில் ஒரு 'செம்பு'. அந்தப்

பாத்திரம்தான் பளீர் என்று வெயில்பட்டு மின்னியது. பொன்னொளித் தெறிப்பு.

பிள்ளை ஒரு கல்லை எடுத்து குரங்கின்மீது வீசினார். மறுபடியும் இன்னொரு கல்லை விட்டெறிந்தார்.

கையிலிருந்த சொம்பில் சுவையானது எதுவும் இல்லை என்று புரிந்து கொண்டதாலும்-பதிலுக்கு எதையாவது விட்டெறிய வேண்டும் என்ற உணர்வாலும்-குரங்கு அந்தப் பாத்திரத்தையே வீசியடித்தது.

பாத்திரம் கீழே விழுந்ததும், பிள்ளை வேகமாக அதை எடுத்தார். பேரானந்தம் கொண்டார்.

பொன்முலாம் பூசப்பெற்ற பித்தளைச் 'செம்பு' அது. அதன் மேல் தெய்வ உருவம் வரையப்பட்டிருந்தது. லட்சுமியும் நாராணயனும். சுற்றிலும் பூக்களும் கொடிகளும் காணப்பட்டன.

பூசைச் செம்பு என்றது பிள்ளையின் மனம். யாரோ வைத்து பூசை பண்ணுவது. எவரோ சாமியார் பூசை செய்ததாக இருக்கலாம். ஆற்றோர மடத்தில், அல்லது சத்திரத்துத் திண்ணையில், அல்லது தோப்பில் படுத்து அவர் தன்னைமறந்து தூங்கிக் கொண்டிருக்கையில், குரங்கு இதை எடுத்து வந்திருக்க வேண்டும். இப்போது எனக்குக் கிடைத்திருக்கிறது என்று அவர் நினைத்தார்.

'லட்சுமி நாராயணர், இதை வைத்துப் பூசை பண்ண வேண்டும். நல்ல காலம் பிறக்கும்' என்ற நம்பினார். ஆற்றில் அந்தச் செம்பை முக்கி எடுத்து, தனக்குத் தெரிந்த பக்திப் பாடல்களை முணுமுணுத்தவாறே வீடு திரும்பினார்.

அன்று முதல் அந்தச் செம்பு பிறவிப்பெருமாள் பிள்ளை வீட்டில் 'சாமி' ஆகிவிட்டது. நித்திய பூஜைகளை ஏற்றது. விசேஷ தினங்களில் தடபுடலான கவனிப்பையும் பெற்றது.

அப்போதுதான் பிள்ளை பெரிய வீட்டைக் கட்டிக் குடியேறியிருந்தார். வீட்டைக்கட்டிப் புதுமனை புகுந்த வேளையும், லட்சுமி நாராயணர் செம்பு கிடைத்த அதிர்ஷ்டமும் அவருக்குப் புதிய தெம்பும் ஊரில் தனி மதிப்பும் கிடைக்க வழி செய்தன.

பிறவிப்பெருமாள் பிள்ளை 'செயலான குடும்பத்'தைச்

சேர்ந்தவர். அவர் தந்தை அவருக்கும் அவருடைய அண்ணன் தம்பிகளுக்கும் போதுமான அளவு சொத்து சேர்த்து வைத்திருந்தார். குடியிருப்பதற்குச் சொந்த வீடு என்று அவர் எதுவும் விட்டுப் போகவில்லை.

இது பிறவிப்பெருமாள் பிள்ளைக்குப் பெரிய குறையாக உறுத்திக் கொண்டிருந்தது. சொந்தமாக ஒரு வீடு கட்ட வேணும் என்ற ஆசை அவரைப் பிடித்து ஆட்டியது. எங்கே போனாலும், எந்த வீட்டைப் பார்த்தாலும், இதைக் கட்டுவதற்கு எவ்வளவு செலவு ஆகியிருக்கும்; இதைவிடப் பெரியதாகக் கட்ட எவ்வளவு பணம் தேவைப்படும் என்று கணிப்பதில் அவர் ஈடுபட்டுவிடுவார்.

விரைவிலேயே அவர் சொந்த வீடு கட்டி, 'கிரகப்பிரவேசத்'தையும் பெரிய அளவில் செய்து முடித்தார்.

மகிழ்வண்ணபுரத்தில் 'பிள்ளைமார் வீடுகள்' அந்நாட்களில் எண்பது இருந்ததாகச் சொல்வார்கள். 'எல்லோரும் ஒண்ணுக்குள்ளே ஒண்ணு; கொள்வினை கொடுப்பினை எல்லாம் கூடியவரை சொந்தத்துக்குள்ளேயே, உள்ளூருக்குள்ளேயே முடித்துக் கொண்டதால், அனைவரும் (சொந்தக்காரர்கள்) ஆகவே இருந்தார்கள். அவர்களுக்குள்ளேயே உறவும் பகையும் பாராட்டி வாழ்க்கையை சாரமுள்ளதாகவும், சாரமற்றதாகவும்-அவரவர் இயல்புகளின்படி-ஆக்கிக் கொண்டிருந்தார்கள்.

பள்ளிப் படிப்புக்கு முக்கியத்துவம் அளிக்காத அந்த நாட்களிலேகூட பிறவிப்பெருமாள் பிள்ளை அண்ணாவியின் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் 'அரியோம் நம'வில் ஆரம்பித்து, மேலே அஞ்சாறு வருடங்கள் கல்விகற்ற பெருமையை அடைந்திருந்தார். அறிவுக் கூர்மையிலும் செயல் துணிவிலும் ஊரார் மதிக்கும் அந்தஸ்தை அவர் பெற்றிருந்தார். ஊர் விவகாரங்களைத் தீர்த்து வைக்கும் பெரிய மனிதராகவும் அவர் விளங்கினார். இந்த விஷயத்தில் அவர் 'தருமராசா' என்றும் பெயர் பெற்றிருந்தார். 'நல்லவர்களுக்கு நீதி தவறாத தர்மராசா; பொல்லாதவர்களுக்கு எமராசா' என்ற அக்கம்பக்கத்து ஊர்களிலும் அவர் பெருமை பரவியிருந்தது.

மகிழ்வண்ணபுரத்தில் நீதியின் பிறப்பிடமாகத் திகழ்ந்தது அந்த வீடு-பிறவிப்பெருமாள் பிள்ளை காலத்திலே.

நியாயத்தைக் கண்டுபிடிப்பதற்காக பிறவிப்பெருமாள் பிள்ளை எந்த வழியையும் தயங்காது மேற்கொள்வார்.

ஒரு சமயம் கீழத் தெருவில் ஒரு வீட்டில் ஒரு குழந்தையின் கழுத்தில் கிடந்த சங்கிலி திருடு போய்விட்டது. திருடியது யார் என்று தெரியாதுதான். இருந்த போதிலும். அந்தத் தெருவில் ஒரு வண்டிக்காரனாகப் பணியாற்றிய ஒருவன்மீது சந்தேகம் ஏற்பட்டது. விஷயம் பிறவிப்பெருமாள் பிள்ளையின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. அவர் வண்டிக்காரன் மாணிக்கத்தை வரவழைத்தார். நயமாகவும் பயமாகவும் கேட்டார். அவன் தனக்கு எதுவும் தெரியாது என்று சாதித்தான்.

திடீரென்று சீறி வெடித்தார் பிள்ளை. "சவத்துப் பயலை வேப்ப மரத்தோடு கட்டி வை" என்று உறுமினார்.

அவன் கட்டி நிறுத்தப்பட்டதும், "கொண்டா ரெண்டு புளிய மிளாறு!" என்று கர்ஜித்தார். பொடிசாய், மெலிந்து நீண்ட, புளிய மிளாறுகள் வந்து சேர்ந்தன.

அவற்றில் ஒன்றை இடது கையில் வைத்துக் கொண்டு, ஒரு மிளாறை வலது கையில் பற்றி மாணிக்கத்தை விளாசு விளாசென்று விளாசித் தள்ளினார்.

நாலைந்து அறைகள் வரை கல்லுளி மங்கன் மாதிரி நின்ற மாணிக்கம், மேலும் தாக்குப் பிடிக்க முடியாமல், "ஐயோ, சாமி, என்னை கொல்லாதீங்க.... விட்டிடுங்க.... உள்ளதை சொல்லிப் போடுதேன்" என்று அலறினான்.

பிள்ளை, ஆவேசம் வந்தவர் போல், மிளாறை சுழற்றி அடித்துக் கொண்டேயிருந்தார். சுற்றி நின்றவர்களுக்கு 'ஐயோ பாவம்' என்றிருந்தது; ஈவு இரக்கமில்லாமல் இப்படிப் போட்டுக் கொல்கிறாரே என்று தோன்றியது.

"மாட்டுத் தொழுவிலே கூரையிலே தெற்கு ஓரத்திலே இருக்கு சங்கிலி" என்று மாணிக்கம் தெரிவித்தான்.

"ஜாக்கிரதை. . சங்கிலி அங்கே இல்லையோ, உன் தோலை உரிச்சுப் போடுவேன் உரிச்சு!" என்று எச்சரித்தபடி, பிள்ளை மிளாறு களைக் கீழே போட்டார்.

சங்கிலியைத் தேட ஆட்கள் ஓடினார்கள். ரொம்பச்

சுருக்காகவே திரும்பியும் வந்தார்கள், சங்கிலியுடன். அதன் பிறகுதான் பிள்ளை மாணிக்கத்தை அவிழ்த்துவிடும்படி பணித்தார். "சரி சடி. எழுந்திரி. புத்தியாய் பிழை" என்று சொன்னார் பிள்ளை. அத்துடன் நிற்கவில்லை.

வீட்டிலிருந்து தேங்காயெண்ணெய் கொண்டு வரச்செய்து அவன் உடம்பு முழுவதும் தடவிவிடும்படி பணித்தார். திண்ணையில் இலை போடச் சொல்லி, உணவு பரிமாறும்படி கூறி, அருகிலிருந்து கவனித்தார்.

"டேய், திருடப்படாது. பொய் சொல்லக் கூடாது. திருட்டும் புரட்டும் குடியைக் கெடுக்கும். வீணாக் கெட்டுப் போகாதே" என்று நல்லுரை கூறி மாணிக்கத்தை அனுப்பிவைத்தார்.

ஒரு சமயம், ஊருக்குள், நடுத்தெருவில் ஒரு தோட்டத்திலிருந்த பெரிய வைக்கோல் படப்பு ஒன்று தீப்பிடித்து எரிந்தது. கோடை காலம். வாய்க்கால், குளம் எங்கும் தண்ணீர் இல்லாத சந்தர்ப்பம். கொட்டி அணைப்பதற்கு தண்ணீர் கிடைக்கவேயில்லை. அதனால் இரவு முழுவதும் தீ நின்று எரிந்தது.

வைக்கோல் போருக்குத் தீ வைத்தது யார் என்று கண்டு பிடிக்க வேண்டிய பொறுப்பு பிறவிப்பெருமாள் பிள்ளைக்கு வந்து சேர்ந்தது. பிள்ளைமார் தெருவில் புகுந்து இப்படி ஒரு அக்கிரமத்தை செய்தவனை சும்மா விடலாமா என்று ஊர்க்காரர்கள் முணமுணத்தார்கள்.

தேவமார் சிலரைக் கூப்பிட்டு விசாரித்தார் பிள்ளை. அவர்கள் தங்களுக்கு எதுவுமே தெரியாது என்று சாதித்தார்கள்.

"உங்களுக்கெல்லாம் தெரியாமல் இது நடந்திருக்காது. நீங்கள் சொல்ல விரும்பலே. சரி. இனிமேல் நீங்க என்னைக் குறை கூறப்படாது. என்பேரிலே வருத்தப்படவும் கூடாது" என்று சொல்லிவிட்டு எழுந்தார் பிள்ளை.

ஒரு ஆளைக் கூப்பிட்டு, "உள்ளே இருக்கிற மண்எண்ணை டின்னை எடுத்திட்டு வா. தீப்பெட்டியும் எடுத்துக்கோ" என்று உத்திரவிட்டார்.

பட்டு லேஞ்சியை எடுத்து, கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொண்டு, வெள்ளிப் பூண் கட்டிய நீண்ட தடியைக் கையில்

பிடித்துக் கொண்டு மிடுக்காகக் கிளம்பினார். எதுவும் பேசாமல் தேவமார் குடியிருப்பை நோக்கி விறுவிறு என்று நடந்தார் அவர்.

அவரோடு இரண்டு மூன்று பிள்ளைமார்களும் போனார்கள். என்ன செய்யப் போகிறாரோ, எது நடக்குமோ என்ற பதைப்பு அவர்களுக்கு. தேவமார்களும், இடுப்பில் கட்டிய துண்டும் மார்பில் மடித்துக் கட்டிய கைகளுமாய், அவர்கள் பின்னாலேயே, நடந்தார்கள்.

தேவமார் குடிசைகள் நிறைந்த பகுதியை அடைந்ததும், "டின்னை கீழே இறக்கு" என்று பிள்ளை கூறினார்.

இதற்குள் ஒரு கூட்டம் அங்கே கூடிவிட்டது.

"வைக்கப்படப்பிலே தீ வச்சவனை நீங்க காட்டிக் கொடுக்க மாட்டீங்க. இல்லே? உம். இப்போ இங்க உள்ள குடிசைகள் பூரா பத்தி எரியப்போவுது. அப்புறம் நடக்கிறபடி நடக்கட்டும்...ஏய், கூரைகள் மேலே எல்லாம் மண்எண்ணையை தெளி" என்று பிறவிப் பெருமாள் உத்திரவிட்டார். "குடிசைக்குள்ளே பொம்பிளைகள், புள்ளை குட்டிகள் இருந்தா, எல்லோரும் வெளியே வரட்டும். அப்புறம் அழுது அடிச்சா பிரயோசனப்படாது" என்றார்.

ஊர் பூராவும் அங்கே குழுமத் தொடங்கியது.

"சொக்கப்பனை பார்க்கப் போறீங்க. ராத்திரி ஊருக்குள்ளே வைக்கப்படப்பு பத்தி எரிஞ்சுது. இப்போ, பட்டப்பகலிலே இங்கே குடிசைகள் எரியப் போகுது" என்று கூறி, அவர் தீக்குச்சியைக் கிழித்தார். எரியும் குச்சியைத் தூக்கிப் பிடித்தார். அருகிலிருந்த கூரை மீது வீசி எரிவதற்காகச் சுழற்றினார்.

"சாமி சாமி. எங்களைக் காப்பாத்துங்க" என்று பொம்பிளைகள் ஓலமிட்டார்கள் கும்பலிடையே சலசலப்பு ஏற்பட்டது. ஜனக்கடல் விலகிக் கொடுப்பதுபோல் பிரிந்து இடம் விட்டது.

இரண்டு மூன்று பேர் சேர்ந்து ஒருவனை துண்டினால் பிணைத்து இழுத்துக் கொண்டு வந்தார்கள். பிள்ளை முன் நிறுத்தினார்கள்.

பிறவிப் பெருமாள் ரசித்துச் சிரித்தார்.

"இதை அப்பவே செய்திருக்கலாமில்லே? என்னை வீணா இதுவரை இழுத்தடிச்சு இப்படி எல்லாம் பண்ணும்படி செய்துட்டீகளே?" என்று அலுத்துக் கொண்டு, திரும்பி நடந்தார்.

"ஐயா இவனை என்ன செய்ய?" என்று பெரிய தேவர் ஒருவர் கேட்டார்.

"சவத்துப்பயலை என்ன செய்வீங்களோ எனக்குத் தெரியாது. எரிஞ்சு போன வைக்கப்படப்பின் கிரயம் எனக்கு வந்தாகணும். அதுக்கு நீங்க என்ன வழி பண்ணுவீகளோ, அதுவும் எனக்குத் தெரியாது. ரெண்டு நாளிலே பணம் வந்து சேரணும். பணம் வரலேன்னோ....இன்னிக்கு என்னகிழமை? திங்களா? சரி. செவ்வாயும் புதனும் போயி, வியாழக்கிழமை அன்னிக்கு உங்க பகுதியிலே உள்ள எல்லாப் படப்புகளிலும் தீ கூத்தாடும். ஆமா. சொல்லிப் போட்டேன்" என்று பிறவிப்பெருமாள் உறுதியாக அறிவித்தார்.

'வாயடியும் கையடியும்' பெற்ற தனி நபர்கள்-நெஞ்சு தைரியமும் பணபலமும் உடைய அடாவடிக்காரர்கள்-தங்கள் சித்தம்போல் ஊரை அடக்கி ஒடுக்கும் ஆற்றல் பெற்றிருந்த காலம் அது. அத்தகைய தனிநபர் ஒருவர் முன்னே ஊரார்கள் மனித மந்தையாகச் செயலிழந்து நிற்கக் கூடிய காலமாகவும் அது இருந்தது.

எல்லோரும் மவுனமாகத் தலையைத் தொங்கப் போட்டபடி வெளியேறினார்கள். பிள்ளை அவர்கள் கெடு வைத்த தேதியில் பணம் வந்து சேர்ந்தது. அன்றைய நிலவரப்படி, எரிந்த வைக்கோல் போரின் கிரயம் என்ன வருமோ அந்தத் தொகை, தம்பிடி குறையாமல் இருந்தது.

ஊர்க் கோயில் கொடைக்கு வீட்டுக்கு இவ்வளவு ரூபாய் என்று வரி விதித்து வசூலிப்பது போல், பணம் வசூல் செய்து கொண்டு வந்து அவர்கள் பிள்ளையின் முன் வைத்தார்கள். தோள் துண்டை இறக்கி, இடுப்பில் கட்டிக் கொண்டு, பணிவோடு கும்பிட்டு நின்றார்கள்.

"வெள்ளையன்பயலை என்ன செஞ்சீங்க?" என்று பிள்ளை கேட்டார்.

"வெறும் கூறு கெட்ட கோப்புரம்! சவத்தை என்ன பண்ண

முடியும்? அம்மனுக்கு நாலு தேங்கா வாங்கி உடைக்கும்படி செய்தோம்" என்று ஒரு கிழவன் சொன்னான்.

"ஊர், கட்டுப்பாடு குலையப்படாது. அது முக்கியம்" என்று பிறவிப் பெருமாள் பொதுவாகச் சொல்லி வைத்தார்.

அது காலை உணவு நேரம். அதனால், வந்து நின்றவர்களுக் கெல்லாம் வயிறு நிறைய 'பழையச் சோறு' பரிமாறும்படி உத்திரவிட்டார்.

இட்டிலி, தோசை என்பதெல்லாம் விசேஷ நாட்களின் சிறப்புப் பொருள்களாகத்தான் கருதப்பட்டன அந்நாட்களில். விரத நாட்களின் விசேஷத் தயாரிப்புகளாகவும் விளங்கின அவை. இப்போது உள்ளது போல் சாதாரண நாட்களின் சர்வ சகஜ உணவுப் பண்டங்களாக அவை இருந்ததில்லை.

நீராகாரமும், முந்திய தினம் தண்ணீர் விட்டு மண்பானையில் குளிரக் குளிரக் கிடக்கும் 'பழைய சோறும்', சுண்டக்கறியும்தான் எல்லா வீடுகளிலும் முக்கியமான காலைநேர உணவாக இருந்தது. பிறவிப்பெருமாள் பிள்ளை வீட்டில் இவை எந்நேரமும் தட்டில்லாமல் கிடைக்கும்.

"இப்ப எதுக்கு ஐயா சாப்பாடு?" என்று இழுத்தான் கூட்டத்தின் தலைமைக்காரன்.

"இந்த வீட்டுக்கு வாற யாரும் வெறும் வயித்தோடு போகக் கூடாது. அதிலும் நீங்க குளிர்ந்த வயிறோடும் நிறைந்த மனசோடும் போகணும். உங்களில் ஒரு ஆள்கூட வயித்தெரிச்சலோடு இங்கிருந்து நடை இறங்கப்படாது" என்றார் பிள்ளை.

அவர்கள் சோறு சாப்பிட்டுக் கொண்டிருந்த போதே, ஒருவனை அனுப்பி எரிந்துபோன வைக்கோல் படப்பின் சொந்தக் காரரை அழைத்து வரச் செய்தார். அவர் வந்து சேர்ந்ததும், "தம்பியா பிள்ளே, உம்ம வைக்கலின் கிரயம் இதோ இருக்கு. எடுத்து எண்ணிச் சரிபார்த்துக்கிடும்" என்று பெரிய பிள்ளை தெரிவித்தார்.

மற்றவர் பணத்தை எடுத்துக்கொண்டார். "நீங்க சொன்னால் சரிதான். அவங்களும் பொய்யா சொல்லப் போறாங்க" என்று முணுமுணுத்தார்.

"ஊரிலே பதுகாப்பு நிறைஞ்சிருக்கணும். பாதுகாப்புக்குக் குந்தகம் ஏற்பட்டால், நம்ம உடைமைகளுக்கு என்னாகுமோ ஏதாகுமோ என்று மனுசன் சதா பயந்துக்கிட்டே இருக்க நேர்ந்தால், அந்த ஊரிலே யார்தான் சந்தோசமாகவும் நிம்மதியாகவும் வாழமுடியும்?" என்றார் பிறவிப்பெருமாள்.

உண்டு முடித்தவர்கள், சாப்பிட்ட இலைகளை எடுத்துத் தோட்டத்தில் கொண்டு போட்டுவிட்டுக் கை கழுவினார்கள். கொடுக்கப் பெற்ற வெற்றிலைபாக்கை இருகை நீட்டிப் பணிவுடன் வாங்கிக் கொண்டு, "நாங்க வாறோம், ஐயா" என்று கும்பிட்டு விட்டு வெளியேறினார்கள்.

"எல்லோரும் நல்லவங்கதான். ஆனால் சிலசமயம் அவங்க போதாத காலம் புடதியிலே ஏறி உட்கார்ந்துக்கிட்டு, அவங்களை ஆட்டிப்படைக்குது. அப்போதான் எவன் என்ன செய்வான் என்று சொல்லமுடியாமப் போகுது" என்று பிள்ளை கூறினார்.

"நீங்க சொல்றது சரிதான் அண்ணாச்சி" என்றார் தம்பியா பிள்ளை.

அவருக்கு ஒரு பெரிய டம்ளர் நிறைய மோர் வந்து சேர்ந்தது. அதை குடித்துவிட்டு, கொஞ்சநேரம் ஊர்க்கதை பேசிப் பொழுது போக்கிவிட்டு, பணத்தோடு போய் சேர்ந்தார் அவர்.

பிறவிப்பெருமாள் பிள்ளையின் கீர்த்திப் பிரதாபங்களில் மற்றுமொரு சேர்மானமாக இந்த நிகழ்ச்சியும் கூடிக்கொண்டது.

இதுபோல் எத்தனையோ.

'அடி உதவுற மாதிரி அண்ணன் தம்பி உதவ மாட்டான்' என்பது பிள்ளை அவர்களின் திட நம்பிக்கைகளில் ஒன்று ஆகும்.

வழக்கு, விசாரணை என்று அந்த வீடு தேடி வந்து விட்டால், குற்றம் சுமத்தப்பட்டவனை நிறுத்தி நிதானமாகக் கேட்டுப்பார்த்து உடனே ஈவு இரக்கம் இல்லாமல் கையில் கிடைத்ததைக் கொண்டு அடித்து நொறுக்கி விடுவார் பிள்ளை. பயம் உண்டாக்கணும்; சம்பந்தப்பட்டவனுக பயந்து நடுங்கணும்; அப்ப உண்மை தானாக வந்துவிடும் என்று அவர் சொல்வது உண்டு. அவர் சம்பந்தப்பட்ட மட்டில்அவருடைய இந்தக் கொள்கை அவருக்கு வெற்றி பெற்றுத் தந்தது.

அம்மன் கோயிலில், ஒரு முறை, தண்ணீர் நிரப்பி வைக்கப் படுகிற 'கிடாரம்' காணாமல் போய்விட்டது. பித்தளையினாலான பெரிய பாத்திரம். ஒருவன் அல்லது இரண்டு பேர் அதை தூக்கிச் சென்றிருக்க முடியாது. துணிந்து எடுத்துப் போய் எங்கு மறைத்து வைப்பார்கள்? தகடு தகடாக வெட்டிச் சிதைத்து, பக்கத்து நகரத்தில் பாத்திரக்கடை எதிலாவது விற்றிருப்பார்கள். இப்படிச் சிலர் சொன்னார்கள். துப்புத் துலக்குகிறோம் என்ற சிலர் எங்கெங்கோ அலைந்து திரிந்தார்கள். அலுத்துப்போய் திரும்பி வந்தார்கள். முடிவாக, பிறவிப் பெருமாள்பிள்ளையிடம் முறையிட்டார்கள்.

பிள்ளை, மற்றும் இரண்டு பேரோடு, கோயிலுக்குப் போனார். அம்மனுக்கு கர்ப்பூரம் காட்டி விட்டு, அதை பிள்ளை முன்னே கொண்டு வந்து நீட்டினான் பூசாரி.

யாரும் எதிர்பாராத காரியத்தை செய்தார் பிள்ளை. கர்ப்பூர சுவாலை மீது கைகளை காட்டி, அவற்றை தன் கண்களில் ஒற்றிக் கொள்ளவில்லை அவர். வெகு பலமாக பூசாரியின் கன்னத்தில் ஓங்கி அறைந்தார். பளார் என்ற ஓசை வெடிச் சத்தமாய் கேட்டது. திகிலடித்துப் போன பூசாரி தூடன் தட்டை கீழே போட்டு விட்டான். அது அவன் பாதத்தில்தான் விழுந்தது. எரியும் கர்ப்பூரம் அவன் காலைச் சுட்டது.

பூசாரி கன்னத்தைத் தடவுவானா? காலை கவனிப்பானா? யோசித்துச் செயல் புரிவதற்கு அவகாசம் கொடுக்கவில்லை பிள்ளை. மறுபடியும் ஓங்கி அறைந்தார் அவனை.

“கிடாரத்தை எந்தக் கிணத்திலே ஒளிச்சி வச்சிருக்கலேய்? எங்கே பதுக்கி வச்சிருக்கே, சொல்லு” என்று திரும்பவும் அடித்தார்.

கதிகலங்கிப் போன அவன், “சொல்லுறேன், முதலாளி, என்னை அடிச்சுக் கொல்லாதீங்க” என்று கதறியபடி அவர் காலில் விழுந்தான்.

“நீ எதுவும் சொல்ல வேண்டாம். அந்த இடத்தைக் காட்டு” என்று உத்திரவிட்டார் பிள்ளை. “உம். எழுந்து நட” என்று உறுமினார்.

பூசாரி நடந்தான். மற்றவர்கள் தொடர்ந்தார்கள். போகப்

போக, வேடிக்கை பார்க்கும் கும்பல் கனத்தது.

ஊருக்கு வடக்கே இருந்தது கோயில். அதுக்கும் வடக்கே பொட்டல் வெளி. அதற்கும் அப்பால் 'காடு' என்று பெயர் பெற்றிருந்த - முள் செடிகள் கொடிகள் புதர்கள் மண்டிய-பிரதேசம். அங்கே ஒரு இடத்தில் பாழுங்கிணறு ஒன்ற இருந்தது. அதனுள் கிடந்தது கிடாரம்.

"ஏ பிசாசுப் பய! இதை இவ்வளவு தூரம் எப்படி தூக்கிக் கொண்டு வந்து போட்டான்?" என்று வியக்காதவர்கள் கிடையாது அந்தக் கூட்டத்தில்.

பிறவிப்பெருமாள்பிள்ளை பூசாரியின் முதுகில் ஓங்கி ஒரு குத்து விட்டார். "உன் கூட எத்தனை பேர் சேர்ந்திருக்காங்க? அவங்க யாரு?" என்று அதட்டிக் கேட்டார்.

அவன் வாய் திறவாமல், குத்துக்கல் மாதிரி நின்றான்.

"அடேய், நீ சொன்னால் பிழைச்சே. இல்லையோ, உன்னையே இங்கே பலி கொடுத்திருவேன். இப்படியே உன்னையும் இந்தக் கிணத்துக்குள்ளே அனுப்பிருவேன்" என்று சொன்னார். அவர் சொன்ன தோரணையே, அவர் அப்படிச் செய்யத் தயங்கமாட்டார் என்ற விளம்பரப்படுத்தியது.

பூசாரி வாய் திறவாது நிற்கவும், பிள்ளை அவன் கழுத்திலே கை வைத்து அவனை முன்னே தள்ளுவது போல் ஒரு உலுக்கு உலுக்கினார்.

அவன் பயந்து அலறினான். 'ஐயா, உண்மையை சொல்லிருதேன்' என்று கத்தினான்.

"நீ எதையும் சொல்ல வேண்டாம். ஆள்களை காட்டு" என்று அவனை மீண்டும் குலுக்கினார் பிள்ளை.

அவன் இரண்டுபேர் இருக்குமிடத்தை-அவர்கள் பெயர், வீடு, தெரு, ஊர் எல்லாவற்றையும் சொன்னான். அந்த இரண்டு பேரும் பக்கத்து ஊர்க்காரர்கள். பூசாரிக்கு உறவினர் என்று தெரிந்தது. மூன்று பேரும் சேர்ந்து, ஒரு கட்டை வண்டியில் வைத்துக் கட்டி, கிடாரத்தை எடுத்து வந்து, காட்டுக் கிணற்றில் பதுக்கி வைத்திருக்கிறார்கள். ஊரில் அமளி அடங்கிய பிறகு, அதை வெட்டித் தகடுகளாக்கி விற்பனை செய்யலாம்; கிடைத்த பணத்தை

பங்கு போட்டுக் கொள்ளலாம் என்பது அவர்கள் திட்டம். இதுவும் பூசாரிதான் தெரிவித்தான்.

அந்த இரண்டு பேரும் அகப்பட்டுக் கொண்டார்கள். மூன்று பேரையும், கழுதைகள் மேல் ஏற்றிவைத்து முகத்தில், கரும்புள்ளி செம்புள்ளி குத்தி, தெருத் தெருவாக ஊர்வலம் வரும்படி பண்ணினார்கள் ஊர்க்காரர்கள்.

அன்று இரவு பூசாரி ஊரைவிட்டு ஓடிப்போனவன், அப்புறம் மகிழ்வண்ணபுரம் பக்கம் தலைகாட்டவேயில்லை. அதற்காக அந்த ஊரில் யாரும் வருத்தப்படவும் இல்லை.

பிறவிப்பெருமாள் பிள்ளை இவ்வாறு கடினசித்தராக நடந்து கொள்ளும் இயல்பு உடையவர் என்றாலும் சில சமயங்களில் சிறுபிள்ளை மாதிரி விளையாட்டும் வேடிக்கையுமாகச் செயல்புரியக் கூடிய சுபாவமும் பெற்றிருந்தார்.

அந்தப்பெரிய வீடு கட்டப்பட்டுக் கொண்டிருந்த போது பிள்ளை செய்த ஒரு தமாஷ் தலைமுறை தலைமுறையாகச் சொல்லி மகிழக் கூடிய ஒரு ரசமான விஷயமாக அமைந்தது.

அவருடைய அண்ணன் நாறும்பூநாத பிள்ளையின் மனைவி குழல்வாய்மொழிக்கு புதையல் பித்து இருந்தது. தங்கள் குடும்பத்துக்குப் புதையல் கிடைக்கும் என்று அவள் நம்பினாள். எப்போது கிடைக்கும், புதையல் எந்த இடத்தில் இருக்கிறது என்று அறிந்து கொள்ள அவள் தவித்த தவிப்பு பிறவிப்பெருமாள் பிள்ளைக்கு கேலி செய்யப்பட வேண்டிய ஒரு விஷயமாகப்பட்டது. சோதிடர், குறிகாரர், மைபோட்டுப் பார்த்து விவரங்களைக் கூறும் மந்திரவாதி என்ற பலரகமானவர்களிடமும் அவள் விசாரித்துக் கொண்டேயிருப்பாள். இதற்காக அரிசி, நெல், பணம் முதலிய வற்றை அந்த அம்மாள் தாராளமாக அள்ளி வழங்குவாள்.

மதினியைக் கேலி செய்யும் உரிமையோடு பிறவிப்பெருமாள் அடிக்கடி அவளைப் பரிகசிப்பது வழக்கம். வீடு கட்டியபோது இது அதிகரித்தது. ஒரு இடத்தில் அடிவானம் தோண்டப் பெற்ற போது பிள்ளை திடீரென்று "திருக்குறுங்குடி நொண்டி யானையை கூட்டிக்கிட்டு வா!" என்று மகனிடம் சொன்னார். அவர் அப்படி பெரியம்மாவைத்தான் குறுப்பிடுகிறார் என்பது மகனுக்குத் தெரியும். திருக்குறுங்குடிக் கோயிலில் ஒரு யானை இருந்தது.

அது நொண்டி. குழல்வாய்மொழி அம்மாளுக்குச் சொந்த ஊர் திருக்குறுங்குடி. அவள் ரொம்பவும் பருமனாக இருந்தாள். அதிக உயரமும் இல்லை. அவள் ஒரு காலை இழுத்து இழுத்து நடப்பாள். வாதச் சேட்டையினால் கால் பாதிக்கப்பட்டிருந்தது. அவள் காலை இழுத்து அசைத்து ஆடி மெதுவாக வருகிறபோது. ஒரு குட்டி யானை நடப்பது மாதிரி இருக்கிறது என்று பிள்ளை சொல்வது உண்டு. இதனால், நாளடைவில், அவர் பேச்சில் அவளே 'திருக் குறுங்குடி நொண்டியானை' ஆகியிருந்தாள்.

"வானம் தோண்டுற பள்ளத்திலே வெண்கலப் பானை தெரியுது. அதைத் தோண்டி எடுக்கப் போறாங்க என்று பெரியம்மாவிடம் சொல்லு. அவள் விழுந்தடிச்சு ஓடி வருவா" என்று பிள்ளை மகனைஅனுப்பினார்.

அவள் பக்கத்து வீட்டில் வசித்தாள். தன் 'கொழுந்தப் பிள்ளை' புதையல் எடுத்தால், முழுசாகத் தானே அமுக்கிக் கொள்வார்; அது முறையாகாது; தங்களுக்கும் புதையலில் பங்கு உண்டு என்று அந்த அம்மாள் கருதினாள். உரிமையோடு அடிக்கடி கூறியும் வந்தாள். தனக்குத் தெரியாமல் அவர் புதையலை எடுத்து மறைத்து வைத்து விடுவார் என்ற நினைப்பில், அவள் கண்காணிக்கும் நோக்கத்துடன் அந்த இடத்தை சுற்றிச் சுற்றி வருவதை நித்திய கடமைகளில் ஒன்றாகக் கொண்டிருந்தாள்.

பையன் போய்க் கூறியதுதான் தாமதம். அந்த அம்மாள் செய்து கொண்டிருந்த வேலையை அப்படியே போட்டு விட்டு, வேகம் வேகமாக வந்தாள்.

"நொண்டி யானை வாறதைப் பாறேன்!" என்று பிள்ளை, அருகிலிருந்தவர்களிடம் சொல்லிச் சிரித்தார்.

"என்ன கொழுந்தப் பிள்ளே பானை தெரிஞ்சுதாமே?" என்று ஆசையோடும் ஆர்வத்தோடும் கேட்டாள் அவள்.

"அதுதான் மதினி, உங்களை கூட்டியாரச் சொன்னேன். அங்கே தெக்கு மூலையிலே மண்வெட்டி பட்டு டங்-டங்குனு சத்தம் வந்தது. வெண்கலப்பானை விளிம்பு தெரியுதுன்னு ஆளு சொன்னான். உடனே வெயிலுப் பையனை உங்க வீட்டுக்கு அனுப்பி வச்சேன். ரெண்டு பேரு சேர்ந்து சுற்றிலும் வெட்டினாங்க. பானை விளிம்பும் மேல்பாகமும் நல்லாத் தெரியுதேன்னு, அந்தப்

புடிச்சு வெளியே தூக்கக் குனிஞ்சாங்க. திடீர்னு பாருங்க, பலமா யாரோ புடிச்சு வெடுக்குனு இழுக்குற மாதிரித் தோணிச்சாம். அந்த ஆளுக விழத் தெரிஞ்சாங்க. ஒருத்தன் மண்டையிலே ஒருத்தன் மோதிக்கிட்டாங்க. பானை பூமிக்குள்ளேயே மறைஞ்சு போயிட்டுது' என்று சுவாரஸ்யமாக அளந்தார் பிள்ளை.

"ஆங் அதிசயமால்லா இருக்கு" என வாய்பிளந்தாள் அம்மாள். "யாரு அப்படி இழுத்திருப்பா?" என்று அதிசயத்தாள்.

"பூதம்தான். வேறே யாரு இழுப்பாங்க? ஒவ்வொரு புதையலையும் ஒரு பூதம் பாதுகாத்துக்கிட்டிருக்கும். புதையல் யாருக்கு கிடைக்கணுமின்னு இருக்குதோ, அவங்க வந்து தோண்டுற போது, அது தானா விட்டுக் கொடுத்திடும். பிறத்தியாரு ஆசைப்படுறபோது, பூதம் புதையலை கொடுக்காது. இப்போவும் அப்படித்தான் நடந்திருக்கு."

"பானை தெரிஞ்சுதா? நீங்க கண்ணாலே பார்த்தீங்களா? எவ்வளவு பெரிசு இருக்கும்?" என்று அடக்க முடியாத அவவோடு விசாரித்தாள் அவள்.

"ரொம்பப் பெரிய பானை. மதினி, உங்க வீட்டு அறவீட்டிலே இருக்கே-நீங்க முறுக்கு சுட்டு அடுக்கி வச்சிருக்கீகளே-அது மாதிரிப் பெரிய வெண்கலப்பானை....முறுக்கெல்லாம் தீர்ந்து போச்சா மதினி? தினம் ராத்திரி ராத்திரி நீங்களும் அண்ணாச்சியும் பானையைப் போட்டு உருட்டி, முறுக்குகளை எடுத்து, அரைச்சு நொறுக்குறது எங்க வீட்டு வரைக்கும் கேட்குதே. சிலசமயம் திடீர்னு நான் முழிச்சுக்கிடுவேனா? அப்போ வெண்கலப் பானையிலே முறுக்குகள் புரளுகிற ஓசை என் காதிலே விழுமா? புதையல் பானையிலே காசுகளும் நகைகளும்தான் உருளு தாக்கும்னு நெனச்சுக்கிட்டு, நான் அங்கேயும் இங்கேயும் தேடி அலைவேன்" என்று பிள்ளை சொன்னார்.

குழல்வாய்மொழி அம்மாளுக்கு வெட்கம் வந்து கவிழ்ந்தது. அவள் நாணிச் சிரித்து, 'கொழுந்தப்பிள்ளைக்கு என்னை கேலி பண்ணாம இருக்க முடியாது.... நான் போகணும். கைச்சோலியை அப்படி அப்படியே போட்டுட்டு வந்தேன்' என்று கூறியபடி நகர்ந்தாள்.

"பார்த்துப் போங்க மதினி. கல்லும் கட்டியுமாக் கிடக்கு"

என்று பரிவுடன் உரைப்பவர் போல் பேசினார் பிள்ளை. "பானை கண்ணிலே பட்டா சொல்லி அனுப்புதேன்" என்றும் தெரிவித்தார்.

தனது தமாஷை தானே ரசித்துக் கொண்டு சிரித்தார் அவர்.

அந்த வீடு கட்டி முடிப்பதற்குள், நாலைந்து தடவைகள் அந்த அம்மாளை இப்படி இழுத்தடித்துப் பரிகாசம் பண்ணி மகிழ்ந்தவர் பிள்ளை.

மகிழ்வண்ணபுரத்தில் மட்டுமல்லாது, அக்கம்பக்கத்து ஊர்களிலே, தனிரகமாகவும் பெரிதாகவும் எடுப்பாகவும் அமைந்திருந்த 'ஒத்தை வீடு' பிறவிப்பெருமாள் பிள்ளை காலத்தில் சந்தோஷம் நிறைந்ததாகவும், சக்தி வாய்ந்ததாகவும், மதிப்புக்கும் போற்றுதலுக்கும் உரியதாகவும் திகழ்ந்தது.

'எல்லாம் லட்சுமி நாராயணர் கிடைத்த அதிர்ஷ்டம்' என்று பிள்ளை நம்பினார். மற்றவர்களும் அதை அங்கீகரித்தார்கள்.

ஒவ்வொரு மாதமும் பௌர்ணமியன்று அந்தச் செம்பில் காணப்பட்ட திருஉருவத்துக்கு விசேஷ பூஜை செய்தார்கள். அன்று பலபேரை அழைத்து வடையும் பாயசமும் அளித்து மகிழ்ந்தார்கள். வீட்டுப் பெண்கள் இத்தகைய விசேஷங்களில் மிகுந்த ஈடுபாடு காட்டினார்கள். வீடு எப்போதும் ஒளிமயமாய், கலகலப்பாக விளங்கியது.

அந்த வீட்டில் ஒரு கல்யாணம் வந்தது. முதல் கல்யாணம்.

பிறவிப்பெருமாள் பிள்ளையின் மகள் சூடிக்கொடுத்த நாச்சியாருக்குத் திருமணம். பிள்ளை அவர்களின் அன்புத் திருமகளுக்குக் க்ல்யாணம் என்றால் ஆடம்பரத்துக்கும் ஆரவாரத்துக்கும், கூச்சலுக்கும் கும்மாளிக்கும் கேட்கவா வேண்டும்! ஊரே அந்த வீட்டில்தான் குழுமியிருந்தது பல நாட்கள்.

கல்யாணம் முடிந்து, சூடி கணவன் வீடு போய்ச்சேர்ந்தாள். பிறகு, 'மறுவீடு விசேஷம்' மற்றுமொரு கல்யாணம்போல் நடைபெற்றது.

அதற்குப் பிறகு சூடி மாதத்துக்கு ஒரு தடவை 'அம்மாவைப் பார்க்க' வந்தாள்; மாசத்தில் பாதிநாட்கள் அம்மா வீட்டிலேயே தங்கினாள்.

இதனால் மாப்பிள்ளை வீட்டில் குறைகூறல்களும்

குற்றச்சாட்டுகளும் எழுந்தன. பிறவிப்பெருமாள் பிள்ளையும் மகளை கண்டித்து, நல்உபதேசம் அருளினார். அடுத்த தடவை சூடி பிறந்த வீட்டுக்கு வரவில்லை. அதற்குப் பதில் ஒரு செய்தி வந்தது. அனைவருக்கும் அதிர்ச்சி தந்தது. சூடி ஓடிப்போய்விட்டாள்! அவளுடைய மாமா மகன் சுந்தர மூர்த்தியோடு. எங்கே போனாள் என்று யாருக்கும் தெரியாது. பிள்ளை பல இடங்களுக்கும் ஆட்களை அனுப்பினார். தேடிப் பார்த்தும் பலன் இல்லை. சூடி போனவள் போனவள்தான்!

பிறகு மெது மெதுவாக உண்மைகள் வெளிப்பட்டன. சூடிக்கும் சுந்தரமூர்த்திக்கும் ரொம்ப காலமாகவே நேசம் வளர்ந்து கொண்டிருந்தது. மாமன் மகன் என்ற முறையில் அந்த வீட்டில் அவனுக்கு வரவேற்பும் கவனிப்பும் இருந்தது. பிறவிப் பெருமாள் பிள்ளை அவனை வீட்டில் ஒருவனாகக் கருதினாரே தவிர, அவன் மீது விசேஷ கவனம் செலுத்தவில்லை. அத்தை மகள் என்ற முறையில் அவளும், மாமன் மகன் எனும் உரிமையோடு அவனும் எப்போதும் சிரிப்பும் பரிகாசமும், கேலியும் கூத்தடிப்புமாகப் பொழுது போக்கி நாளோட்டினார்கள். 'சின்னஞ் சிறுசுகள்' என்று அவர்களுடைய கும்மாளங்களை மற்றவர்கள் கண்டு களித்து ரசித்தார்களே தவிர களங்கம் கற்பித்தாரில்லை.

கல்யாணப் பேச்சு வந்தவுடன் சூடி அம்மாவிடம் "எனக்கு இப்போது கல்யாணம் வேண்டாம்" என்றாள். "எனக்கு அத்தான் மீது ஆசை" என்றாள். "அத்தானை கல்யாணம் செய்து கொண்டால் நல்லாயிருக்கும்" என்றாள். அவள் தன் மனசை இப்படித் திறந்து காட்டிய போதெல்லாம், அம்மா கண்டித்தாள். 'பைத்தியம் மாதிரி உளறாதே. உன் நன்மைக்காகத்தான் அப்பா இப்படிச் செய்றாங்க' என்று கூறி மகளின் வாயை மூடி வந்தாள். அதன் பிறகு மகள் தன் மனசுக்குத் திரையிட்டு, அதற்குள் தனது ஆசைப் பயிரை வளர்த்து வந்திருக்கிறாள். சந்தர்ப்பம் வந்ததும், செயலில் துணிந்து காட்டி விட்டாள்.

"சவம் எக்கேடும் கெட்டு, எப்படியும் நாசமாகட்டும். அந்தப் பயலை நம்பி வீட்டை விட்டு வெளியேறியவள் நாளைக்கு தெருவிலே நின்னு சீரழியத்தான் போறாள்" என்று சாபம் கொடுப்பது போல் சூடாகப் பேசிய பிறவிப்பெருமாள் அப்புறம் சூடிக்கொடுத்த நாச்சியாரின் பேச்சையே எடுக்கவில்லை.

ஆனால் உள்ளத்தில் அது ஆழமான வடுவாகப் பதிந்து கிடந்தது. தனக்கு நேர்ந்த அவமானத்தை எண்ணி எண்ணி உருகிப் போனார் பிள்ளை. அவரது மிடுக்கும் அதிகாரமும் பம்மி விட்டன.

"பிறவியாபிள்ளை என்ன போக்குப் போனார்! எல்லாருக்கும் விசாரணை என்றும், தீர்ப்பு என்றும், தண்டனை என்றும் அட்டகாசமாக ஆக்கினைகள் செய்து வைத்தாரே, இப்ப செய்றதுதானே! மகள் இப்படிப் பண்ணிப்போட்டாளே! எப்பாடு பட்டாவது அவளை கண்டு பிடித்து இழுத்து வந்து இந்த தர்மராசா நியாயம் வழங்கவேண்டியதுதானே முறை? அதை விட்டுப்போட்டு அறுதலி மாதிரி வீட்டுக்குள்ளே முடங்கி விட்டாரே!" என்று பலரும் பேசினார்கள்.

இந்த ரகமான பேச்சுக்கள் பிள்ளையின் காதுகளை எட்டாமல் இருக்குமா? எட்டின.

அதனால் அவர் மேலும் குமைந்தார். படுத்த படுக்கையானார். சீக்கிரமே 'ஐயா இடத்துக்குப்' போய் சேர்ந்தார்.

## மூன்று

பிறவிப்பெருமாள் பிள்ளை உயிரோடு இருந்த வரையில், அந்த ஒத்தை வீட்டில் பெண்களின் குரல் ஓங்கி ஒலித்ததில்லை.

அவருடைய மனைவி தையல்நாயகி ஊரில் இருக்கிறாளா, அல்லது வெளியூர் போயிருக்கிறாளா என்று மற்றவர்கள் அடிக்கடி சந்தேகப்படக்கூடிய அளவுக்கு அந்த அம்மாள் வீட்டினுள் ஒடுங்கி யிருந்தாள்.

அவளைக்கண்டு பேசுவதற்கென்று எப்பவாவது யாராவது வீடு தேடி வருவது உண்டு. அவர்கள்கூட பின்வாசல் வழியாக வந்து, அடுப்படியில் உட்கார்ந்து வம்பளந்து விட்டு, வந்த சுவடு தெரியாமல் போய்விடுவதுதான் வழக்கம்.

அந்த வீட்டில் விசேஷ நாட்களில் கலகலப்பும், பெண்மைப் பொலிவும், பேச்சும் சிரிப்பாணியும் நிறைந்து நிற்கும். அதே போல, மகள் சூடிக்கொடுத்த நாச்சியார் தன் தோழிப் பெண்களோடு கூத்தடிக்கிற போதும் வீடு தூள் பறக்கும்.

சின்ன வயசிலிருந்தே அவள் 'அப்பா செல்லம்.' அவள் என்ன லூட்டி அடித்தாலும், எத்தனை பேரைக் கூட்டி வைத்து ஆட்டம் போட்டாலும், பிறவிப்பெருமாள் பிள்ளை அதட்டிச் சொல்ல மாட்டார். 'சின்னப் புள்ளைகள் விளையாடத்தானே செய்யும்! விளையாடிட்டுப் போகட்டும். வீடுதான் பெரிசா இருக்குதே. புள்ளைகளாவது ஓடி ஆடி விளையாடி, வீட்டுக்கு உயிர் அளிக்குதே!' என்றுதான் அவர் சொல்வார்.

அம்மாதான் 'தொண்டைத் தண்ணீர் வற்றிப் போகும்படி' கூப்பாடு போட்டுக் கொண்டிருப்பாள். சூடி அதை எல்லாம் சட்டை பண்ணுவதில்லை.

வீட்டினுள் தொட்டிக்கட்டில் ஊஞ்சல் தொங்கியது. சூடியும் அவள் சிநேகிதிகளும் சதா அதில் ஆடிக் களிப்பார்கள். பல அறைகளிலும் எங்காவது உட்கார்ந்து தாயக்கட்டம், பல்லாங்குழி என்று விளையாடி மகிழ்வார்கள். பாட்டுப் பாடிக்கொண்டு அம்மானை ஆடுவார்கள். வாசலில் பாண்டி விளையாடி ஒரே புழுதிக் காடாக்குவார்கள். நிலா பூச்சொரியும் இரவுகளில் பலவிதமான ஆடல்களும் ஆடி பொழுது போக்குவார்கள். சூடி கல்யாணம் ஆகிப் போகிறவரை இதெல்லாம் அந்த வீட்டில் கோலாகலமாக நடந்து கொண்டுதானிருந்தது.

அவள் திருமணமாகி, கணவன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த பிறகு, ஒத்தை வீட்டில் கோலாகலக் கலகலப்பும் குடியோடிப் போய்விட்டது என்றே சொல்லவேண்டும். அவள் ஒரே அடியாக மாமா மகனோடு எங்கோ போய்விட்ட பிறகு அந்த வீட்டின் வாசல் வெறிச்சோடியது; உள்ளே சோகம் குடிபுகுந்தது. அதன் ஆட்சியை வலுப்படுத்துவது போல் சேர்ந்துகொண்டது பெரிய பிள்ளையின் மரணம்.

பிறவிப்பெருமாள் பிள்ளைக்கு இரண்டு பையன்கள். இருவரும் சின்னப் பையன்கள்தான். பெரியவன் புன்னைவன நாதனுக்குப் பத்து வயது. சின்னவனான வெயிலுகந்தநாதனுக்கு ஏழு வயது.

ஆகவே, தையல்நாயகி அம்மாள்தான் குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்த வேண்டியதாயிற்று. இந்த நிலைமை ஏற்பட்ட பின்னர், அம்மாளின் சுயரூபம் மெதுமெதுவாக மேலோங்கி ஆட்டம்

போடத் தொடங்கியது. அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டிருந்த அவளுடைய சுபாவங்கள் கட்டவிழ்த்து விடப்பட்ட குரங்குகள் ஆயின.

தையல்நாயகி அம்மாளுக்கும். பெரும்பாலான பெண்களைப் போலவே, பிறந்த இடத்துப் பாசமும், அதனால் ஏற்பட்ட பெருமையும் அதிகம் இருந்தன. பேச்சுக்குப் பேச்சு, 'எங்க அப்பா வீட்டிலே' என்றும், 'எங்க அம்மா....எங்க அம்மா' என்றும், 'எங்க அண்ணாச்சி இருந்தாகளே, அவுக..' என்றும் 'புரவோலங்களை' உதிர்த்துக் கொட்டுவதில் அவளுக்கு அலுப்பு உண்டாகாது. கேட்டுக் கொண்டிருப்பவர்களுக்குத்தான் சலிப்பும், எரிச்சலும் உண்டாகும்.

பிறந்த இடத்தை விட்டு மகிழ்வண்ணபுரத்துக்கு அவள் வந்து எத்தனையோ வருடங்கள் ஆகிவிட்ட போதிலும் கூட, 'எங்க வீடு' 'எங்க ஊரு' என்று உச்சரிப்பதிலேயே அந்த அம்மாள் பெருமையும் மகிழ்வும் அனுபவித்து வந்தாள். கணவன் இறந்து, இந்த வீட்டில் முழு அதிகாரமும் அவளுக்கு வந்துவிட்ட பிறகும் அவள் தனது பிறந்த இடத்துப் பெருமைகளைக் கூறிக்கொண்டிருப்பதில் அலாதியான ஒரு மனச்சுகம் பெற்று வந்தாள்.

தையல்நாயகியின் பிறந்த வீடு ரொம்பவும் சாதாரணமானது தான். அவள் உறவினர் வயல்களில் இறங்கி உழுது பயிரிட்டுக் கொண்டிருந்தார்கள்; தோட்டங்களில் கீரை பயிரிட்டு விற்பனை செய்து வாழ்ந்தார்கள். இதெல்லாம் பிறவிப்பெருமாள் பிள்ளைக்கு உவப்பான விஷயங்களாக இருந்ததில்லை. எனவே அவர்களை அவர் ஒதுக்கியே வைத்திருந்தார். அவர்கள் சொந்தம் பாராட்டி வீடு தேடி வருவதை பிள்ளை ஆதரித்ததுமில்லை.

அவர் இறந்த பிறகு தையல்நாயகியின் அன்பு பெருக்கெடுத்தது. ஒத்தை வீட்டின் வாசல் அவர்களுக்கு எப்போதும் திறந்தே இருந்தது. அதனால் அவளது பிறந்த ஊர்காரர்கள்-சுற்றி வளைத்து ஏதோ உறவு சொல்லக் கூடியவர்கள் கூட-இங்கு வந்து விருந்தாடி விட்டுப் போனார்கள். அவளுக்குப் பிடித்தமான மச்சினியும், அக்காளும், பெரியம்மாவும், அத்தையும் நாள் கணக்கில் தங்கிச் செல்வதும் சகஜம் ஆயிற்று.

அவர்கள்-தாமரைக்குளம் மந்திரவாதி, செண்பகராமன்

நல்லூர் குறிகாரன், எப்போதும்வென்றான் என்ற ஊரிலிருந்த சோதிடன், மடவார்வளாகம் சாமிகொண்டாடி-என்று சிலாகித்துப் பேசி, அம்மாளின் மன அரிப்பைத் தூண்டிவிடுவதும் இயல்பு ஆயிற்று. சில பேரிடம் பணம் கொடுத்து அந்த இடங்களுக்குப் போய் குறி கேட்டு வரும்படி அவள் அனுப்புவதில் ஆர்வம் கொண்டாள்.

வீட்டு வாசலுக்கு வரும் குறிகாரிகளையும் மந்திரவாதி களையும் சோதிடர்களையும் அவள் தாராளமாக ஆதரித்தாள். அனைவரும் அவளது மகத்தான எதிர்காலம்பற்றி வரையறை இல்லாது அளந்து தள்ளினார்கள். மனம் மகிழ்ந்த அம்மாள் அரிசியாகவும் நெல்லாகவும், பழந்துணிகள் என்றும் அவர்களுக்குப் பரிசளித்தாள்.

எனவே, ஊருக்குப் பிழைப்பு தேடி வரும் குடுகுடுப்பைக் காரன்கள், கோடங்கி குறிகாரன் வகையினருக்கு, 'அடையா நெடுங்கதவு'டன் விளங்கிய ஒத்தை வீடு நல்ல புகலிடமாக அமைந்து விட்டது.

வயிறு குளிரச் சாப்பிடும் வாய்ப்பைப் பெறுகிறவர்கள், அப்படி அருள்புரிகிற அம்மாளின் செவி குளிர-மனம் குளிர இனிப்பான சேதிகள் சொல்லாமல் இருக்க முடியுமா? சொன்னார்கள். நிறையவே சொன்னார்கள்.

அந்த வீட்டில் புதையல் இருக்கிறது என்றார்கள். அது அந்த அம்மாள் காலத்திலேயே கிடைத்து விடும் என்று உறுதி கூறினார்கள். சின்ன மகன் வெயிலு ரொம்ப அதிர்ஷ்டசாலி என்றார்கள். புதையல் அவனுக்கே கிடைக்கக்கூடும் என்றும் சொன்னார்கள்.

ஒரு சோதிடர் எல்லோரையும் மிஞ்சி விட்டார். "வெயிலுகந்தநாதனின் ஜாதகம் ரொம்ப அதிர்ஷ்ட ஜாதகம். ராஜ ஜாதகம். இதைப்போன்ற யோகம் உடைய ஜாதகத்தை நான் இந்த ஜில்லாவிலேயே இதுவரை பார்த்ததில்லை. இந்த ஜாதகனுக்கு குரு சந்திர யோகம் இருக்கு. இவன் பிரமாதமா வாழப் போறான்" என்று அளந்தார். சொன்னதையே திரும்பத் திரும்பச் சொன்னார்.

அதைக் கேட்ட அம்மாளுக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம். இனிக்கும் இந்தச் செய்தியை சொன்ன சோதிடருக்கு அவள்

நிறையவே பணம் கொடுத்தாள்.

அன்று முதல் சின்ன மகன் மீது அவளுக்கு இருந்த பிரியம் மேலும் அதிகரித்தது. 'வருவது தெரிந்து கூறியவர்கள் உடனடியாக வர இருந்த ஒரு துயர அனுபவத்தைப் பற்றி சாடைமாடையாகக் கூடச் சொல்லவில்லை. பாவம், அவர்கள் என்ன கண்டார்கள்! ஆனாலும் அது நிகழத்தான் செய்தது.

மழைக்காலம். திடீர் திடீரென்று மழை பெய்தது. சிலசமயம் விடாது, கொட்டு கொட்டென்று கொட்டியது. அப்படி ஓயாது மழை கொட்டிக் கொண்டிருந்த ஒரு அந்திப் பொழுதிலேதான் அது நிகழ்ந்தது.

எல்லா வீடுகளிலும் உயிரியக்கம் இல்லாதது போல் தோன்றியது. ஒத்த வீட்டிலும் கதவு அடைத்துக் கிடந்தது.

யாரோ கதவைத் தட்டுவது போல் ஓசை எழுந்தது. உள்ளே சும்மா படுத்துக் கிடந்த தையல் நாயகி, 'நாசமாப்போற காத்தும் மழையும் என்ன வரத்து வருது! பேயாய் படுத்துதம்மா சனியன். சன்னல் கதவை ஓங்கிச் சாத்தட்டா, வாசல் கதவை தட்டிக் குலுக்கட்டாயின்னு...' என்று தானாகவே பேசிக் கொண்டாள்.

மறுபடியும் கதவு தட்டப்படுகிற ஓசை. சந்தேகத்துக்கிட மில்லாமல் ஆள் தட்டுவதாகத்தான் தோன்றியது.

அம்மாள் எழுந்து வந்து கதவைத் திறந்து பார்த்தாள். திடுக்கிட்டாள். 'யாரு-யாரு நீ?' என்று கேட்டாள். ஆயினும் தொண்டைக் குழிக்குள்ளேயே அது ஒடுங்கி விட்டது. குரல் சரியாகவே எழவில்லை.

அவள் தேகம் நளுக்கிக் கொடுத்தது ஒரு கணம். உள்ளத்தில் ஒரு பதைப்பு. 'பேய் பிசாசாக இருக்குமோ? இன்னிக்கு செவ்வாய்கிழமைதானே? செவ்வாய் அந்திப் பொழுது..'

இந்த நினைப்பு எழவும், மடாரென்று கதவை ஓங்கிச் சாத்தி தாழ்ப்பாளை அவசரமாகப் போட்டாள். 'அப்பனே முருகா' என்று முணு முணுத்து, திருநீற்றை அள்ளி நெற்றி நிறையப் பூசிக்கொண்டாள்.

அந்நேரத்தில் பையன்களும் வீட்டில் இல்லை. அவர்கள் சிற்றப்பாவோடு எங்கோ ஒரு ஊருக்குப் போயிருந்தார்கள்.

வெளியே கதவு மறுபடியும் தட்டப்பட்டது. பலமாகத் தட்டப்பட்டது.

"அம்மா... அம்மா... என்னை தெரியலையா? நான்தான் சூடி..."

தீனமாக ஒலித்தது வெளியேயிருந்து குரல்.

'முருகா, முருகா' என்றாள் வீட்டுக்குள்ளிருந்த அம்மாள். பேய் எப்படி வேண்டுமானாலும் வரும். நினைத்த உரு எடுக்கும்; மயக்கும்படி பேசும். அவளுக்குத் தெரியாதா என்ன? மேலவீட்டு அக்காளும், சண்பகராமநல்லூர் அத்தையும் கதைகதையாகச் சொல்லவில்லையா? சூடியாம் சூடி! அவள் எங்கே போயொழிந்தாளோ?

நேரம் ஓடியது. சூடியின் நினைப்பு அம்மாளின் மனசை கனக்கச் செய்தது. கண்களில் நீர் பெருகியது. 'பாவிமகளுக்கு புத்தியும் போச்சே அப்படி. எல்லோர் மூஞ்சியிலும் கரியைப் பூசிட்டுப் போனாளே...'

அவளே வந்தாலும் வந்திருப்பாளோ என்ற சந்தேகமும் மொட்டு விட்டது.

"அம்மா, கதவை திறவேன். நீ இப்போ திறக்கலேன்னா, நான் இந்த இடத்திலேயே உயிரை விட்டிருவேன். விடிஞ்சு கதவை திறக்கையிலே நீ என் பிணத்தைத்தான் பார்ப்பே" என்று வெளியே நின்றவள் அறிவித்தாள். சூடியாகத்தான் இருக்கும் என்றது அம்மாளின் உள்ளம். துணிந்து கதவை திறந்தாள்.

வந்தவள் வேகமாக உள்ளே புகுந்தாள். "அம்மா, என்னமா, விறைக்கு...குது குதுன்னு வருதே..." என்று புலம்பினாள். சூடி தான் 'மழையில் நன்றாக நனைந்து போயிருந்தாள். அவள் தேகம் நடுநடுங்கிக் கொண்டிருந்தது. பல்லோடு பல் அடித்தது. அவளால் நிற்கவே முடியவில்லை. ஒரு மூலையில் விழுந்து முடக்கிக் கொண்டாள்.

தாயின் மனம் இப்போது தவித்தது. ஒரு அறைக்குள் போய், பெட்டியைத் திறந்து நல்ல சேலை எடுத்து வந்தாள். மகளை தூக்கிப் பிடித்து, ஈரச் சேலையை களைந்து விட்டு, நல்ல சேலையை கட்டினாள். "பாவிமட்டை, எங்கே இருந்துட்டீ இப்படி வாறே? உடம்பு அனலாக் கொதிக்குதே...காய்ச்சல் போட்டுப்

பொரிக்குதே" என்று புலம்பினாள். கைப்பக்குவமாக மருந்துகள் தயாரித்துக் கொடுப்பதில் ஈடுபட்டாள்.

நாலு வருஷங்களுக்கு முன்னாலே போனவ நாயா அலைஞ்சிட்டு இப்போ தானா வந்திருக்கா. மெலிஞ்சு, கறுத்து, என்னமாத்தான் ஆகியிருக்கா. இவளை இக்கோலம் கண்ட கரிமுடிவான் என்ன ஆனானோ?...தாயின் மனம் புழுங்கியது.

சூடி கடுமையான காய்ச்சலினால் கஷ்டப்பட்டாள் அநேக நாட்கள். இடையிடையே தன் கதையையும் சொல்லித் தீர்த்தாள்.

ஆசை அலைக்கழிக்க, உணர்ச்சிகள் இயக்குவிக்க, இஷ்டம் போல் மாமன் மகன் சுந்தரமூர்த்தியுடன் வீட்டை விட்டு வெளியேறிய சூடிக்கொடுத்த நாச்சியார் வெகு சீக்கிரமே அனுபவ ஞானம் பெற்றாள். அவனோடு கூட்டு வாழ்க்கையில் அவள் சொர்க்கங்களை நிறுவ முடியவில்லை. அவனிடம் பணம் இல்லை. அவளுடைய நகைகள் வெகுகாலம் ஈடுகொடுக்கவில்லை. இரண்டு பேரும் முதலில் மதுரைக்குப் போனார்கள். வேலை தேடுகிறேன் என்று அவன் வீணாக அலைந்து திரிந்ததுதான் கண்டபலன். பிறகு வெவ்வேறு நகரங்களுக்குப் போனார்கள். சில சில மாதங்கள் தங்கினார்கள். அவனது குணங்கள் மாறி வந்ததாக அவள் உணர்ந்தாள். மோகம் தீர்ந்து, வறுமை வளர்ந்து, அன்றாட வாழ்க்கையின் பிரச்னைகள் தலைதூக்கவும், இரண்டு பேரும் நாயும் பூனையுமானார்கள். அடிக்கடி சண்டையும் சச்சரவும்தான். சில சமயம் அவன் அவளை அடித்து உதைத்ததும் உண்டு.

ஏதோ ஒரு மயக்கத்தில் வீட்டை விட்டு ஓடி வந்தது எவ்வளவு பெரிய தவறு என்பதை சூடி தினந்தோறும் உணர்ந்து வருத்தப்படலானாள். சுந்தரம் ஏதேதோ வேலைகளில் சேர்ந்தான். எதிலும் நிலையாக இருக்கவில்லை. அரைப்பட்டினி, முக்கால் பட்டினி கிடந்த நாட்களுக்குக் கணக்கேயில்லை.

அவளும் தன்னால் இயன்ற அளவுக்கு சிறுசிறு வேலைகள் செய்து காசு தேட முயன்றாள். மிகவும் சிரமமான வாழ்க்கை தான். அதுவரை செல்லமாக வளர்ந்து விட்டவள் என்ன வேலையை செய்துவிட முடியும்? ஓய்ந்து படுத்தால், அவன் ஏசிப் பேசினான்.

எப்படியோ வருடங்கள் ஓடின. சுந்தரமூர்த்தி அவளை

வெறுக்கலானான். அடிக்கடி வீட்டுப் பக்கம் தலைகாட்டாமல் போகத் தொடங்கினான். அவள் காரணம் கேட்டால் ஏச்சும் பேச்சும் அடியும் மிதியும்தான். அவள் வாழ்க்கை நரகம் ஆகிவிட்டது. இருந்தாலும் சகிப்புத் தன்மையோடு நாட்களை கழித்து வந்தாள். அதிலும் சோதனை மிகுந்தது.

ஒரு நாள் வெளியே போன சுந்தரமூர்த்தி திரும்பி வரவேயில்லை. ஒரு நாள்-இரண்டு நாள் என்று அவள் நாட்களை எண்ணிக் காத்திருந்தாள். பத்து நாட்களாகியும் அவன் வரவில்லை.

அவன் வரவே மாட்டான் என்று அவளுக்குப் பட்டதும் அவள் பயந்து போனாள். என்ன செய்வது? எப்படி காலம் கழிப்பது? ஆற்றிலே குளத்திலே விழுந்து செத்துப் போகலாம் என்று எண்ணினாள். அதற்கும் துணிச்சல் எழவில்லை. அம்மாவை அடிக்கடி நினைத்தாள். அப்பாவைப்பற்றி எண்ணினாள். அவர்களைப் பார்க்க வேண்டும் என்று மனம் தவித்தது. ஆசை இருந்தாலும், கூடவே பயமும் வெட்கமும் தடை விதித்தன.

முடிவில், என்ன ஆனாலும் சரிதான்; ஊருக்கே போவது என்று தீர்மானித்தாள். கைவசமிருந்த பண்ட பாத்திரங்களை விற்றுக் காசாக்கிக் கொண்டு புறப்பட்டு வந்தாள்.

மகிழ்வண்ணபுரத்தில் காலடி வைப்பதற்கு முன்பே, தந்தை இறந்து சில வருடங்கள் ஆகிவிட்டன என்ற தகவல் அவளுக்குக் கிடைத்தது. அம்மாவைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் பிடித்துத் தள்ளியது. இரவு நேரத்தில்தான் ஊருக்குள் வரவேண்டும் என்று சூடி விரும்பினாள். மழை அடிக்கடி பெய்தது தொல்லையாக இருந்தது. அதுவே ஒரு வசதியாகவும் அமைந்தது. ஆள்நடமாட்டம் இல்லை. அவள் நனைந்தவாறே வந்தாள்.

மகளின் தலைவிதியை எண்ணி தையல்நாயகி கண்ணீர் வடித்தாள். "போயும் போயும் உனக்கு புத்தி இப்படிப் போச்சே! உன் தலையில் நீயே மண்ணை வாரிப் போட்டுக்கிட்டியே" என்று புலம்பினாள். சூடி வந்ததை யாருக்கும் தெரிவிக்கக் கூடாது என்று தாய் நினைத்தாள். ஆனால் அது எப்படி சாத்தியம்?

தையல்நாயகியைக் கண்டு பேசுவதற்காக வந்தவர்கள் தெரிந்துகொண்டார்கள். அவள் முன்னே அனுதாபப்பட்டார்கள்;

கண்ணீர் வடித்தார்கள். வெளியே போனதும், அவரவர் வீட்டிலும் வெளியிலும், எதிர்ப்பட்டவர்களிடம் நீட்டி முழக்கிப் பேசினார்கள். அதைக் கேட்டுவிட்டு, சூடியைப் பார்ப்பதற்கென்றே பலரும் வரத்தொடங்கினார்கள்.

வந்தவர்கள் ஆள் ஆளுக்கு ஒன்றைச் சொன்னார்கள். சூடியின் வாயைக் கிளறிவிட முயன்றார்கள். உபதேசித்தார்கள். குறை கூறினார்கள். பழித்தார்கள். இனி என்ன செய்யப் போறியாம் என்று குத்தினார்கள்.

திடீரென்று நிலைமை மாறியது. எல்லோரும் சூடியிடம் அனுதாபமும் அக்கறையும் கொள்ள நேரிட்டது.

யார் என்ன பேசினாலும் வாய்திறவாது தலையை தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த சூடி சிரிக்க ஆரம்பித்தாள். வாய்விட்டுக் கலகலவென்று சிரித்தாள். தொடர்ந்து அழத் தொடங்கினாள். விம்மி விம்மி அழுதாள். அப்புறம் தலைமுடியை அவிழ்த்துவிட்டுக் கொண்டு, ஒரு மாதிரி விழித்து நோக்கியபடி இருந்தாள். பிறகு மயக்கம் போட்டு விழுந்து கிடந்தாள்.

இவ்வாறு அடிக்கடி செய்துகொண்டிருந்தாள் அவள். வேண்டுமென்று செய்யவில்லை; ஏதோ நோய்க்கோளாறு என்று அனைவருக்கும் புரிந்தது.

வைத்தியர்கள் வந்தார்கள். மருந்துகள் கொடுத்தார்கள். சூடியின் சிரிப்பும் அழுகையும் நிற்கவில்லை.

'இது பேய்க்குத்தம்' என்று பெண்கள் சொல்லலானார்கள். சூடியின் சிரிப்பும் அழுகையும் நிற்கவில்லை.

பேய் ஓட்டத் தெரிந்தவர் என்று பெயர் பெற்றிருந்த பூசாரிகள், மந்திரவாதிகள் ஒருவர் பின் ஒருவராக வந்து போனார்கள்.

பூசை, மந்திரித்தல் என்று அந்த வீடு தடபுடல்பட்டது. சிலர் பேயோட்டுகிறேன் என்று சூடியைப் பிரம்பால் அடித்தார்கள். அவள் சிரித்துக்கொண்டு தானிருந்தாள். தொடர்ந்து அழுதாள். பிறகு மணிக்கணக்கில் கட்டை மாதிரிக் கிடந்தாள்.

'இந்த மூதி வீடு தேடி வராமல், ஒரே போக்காப் போயிருந் திருக்கலாம். இவளாலே எனக்குக் கெட்ட பேரும் அவமானமும் தான். மனவேதனையும் பணச்செலவும் தான்' என்று தையல்நாயகி புலம்பினாள்.

சூடி திடீரென்று உரத்த குரலில் பாட ஆரம்பித்தாள். தேவாரம், திருவாசகம் போன்ற பக்திப் பாடல்கள் கணீரென்று ஒலித்தன. இதை எல்லாம் இவள் எப்போ கற்றுக்கொண்டாள் என்று அவளுடைய அம்மாவே அதிசயிக்கும் விதத்தில் சூடி பாடிக் கொண்டே இருந்தாள். மணிக்கணக்கில் பாடினாள். பாட்டு நின்றதும் "தம்பி...தம்பி" என்று கத்தினாள்.

புன்னைவனம் 'என்ன அக்கா?' என்றபடி அருகில் வந்து நின்றான்.

"அவன் எங்கே-வெயிலு? அவனையும் கூப்பிடு. திருநீறு கொண்டுவா!" என்று பணித்தாள்.

திருநீற்று மரவையோடு இரண்டு பேரும் வந்தார்கள்.

"இப்படி பக்கத்திலே உட்காருங்க. திருநீறை அள்ளி என் மேலே எல்லாம் பூசுங்க" என்று அவள் உத்திரவிட்டாள். அவர்கள் பூசினார்கள்.

"உடம்பு பூரா எரியுது. இன்னும் நிறைய அள்ளிப் பூசுங்க!' என்று சொல்லிக் கொண்டேயிருந்தாள் அவள். இந்தக் கூத்தும் அடிக்கடி நிகழ்ந்தது.

வீட்டில் தயாரித்து வைத்திருந்த திருநீறு முழுவதும் தீர்ந்தது. அவள் நோய்தான் தீரவில்லை.

சூடிக்கு 'ஞானக்கிறுக்கு' என்று சிலர் சொன்னார்கள். 'காமக் கிறுக்கு' என்று மற்றும் சிலர் பேசினார்கள்.

"செய்வினை வச்சிருப்பாங்க. இவளோட மாப்பிள்ளை வீட்டுக்காரங்க வேலைதான்" என்று ஒரு பெரியவள் 'ரொம்பத் தெரிந்தவள் மாதிரி' உறுதியாகக் கூறினாள்.

'இருக்கும் இருக்கும்' என்று தலையாட்டினாள் தையல்நாயகி.

சில குறிகாரர்கள் அவள் சந்தேகத்தை ஊர்ஜிதப் படுத்தினார்கள்.

'செய்வினை' வைப்பதிலும் எடுப்பதிலும் அந்த வட்டாரத்திலேயே கொம்பன் எனப் பெயர் பெற்றிருந்த செல்லம்பண்டிதர் வந்து சேர்ந்தார்.

ஒரு வெள்ளிக்கிழமை அந்தி நேரத்தில் குத்துவிளக்கு முன்னே அமர்ந்து 'திருநீறு போட்டு'ப் பார்த்தார். "செய்வினைதான்.

பகிலுக்கு தகடு மந்திரிச்சு வைக்கணும். புள்ளைக்கு தாயத்து கட்டணும். நீங்க சொல்லுங்க, அந்த வீட்டு ஆளுக்கும் கைகால் விளங்காமல் பண்ணிப் போடுதேன்" என்றார்.

தையல்நாயகி யோசித்தாள். மகளைப் பார்த்தாள். சூடி சிரித்தாள். பிறகு அழுதாள். அம்மாவுக்கு வேதனையோடு, பழிவாங்க வேண்டும் என்ற வெறியும் ஏற்பட்டது.

"சரி அப்படியே செய்யும்" என்று சொன்னாள். பண்டிதர் கேட்ட பணத்தையும் கொடுத்தாள்.

'கடைசிச் செவ்வாய்' இரவு அந்த வீட்டில் சாம்பிராணி வாசனை கவிந்து நின்றது. மர்மமான-திகில் கலந்த-ஒரு சூழ்நிலை நிலவியது. செல்லம் பண்டிதர் உரிய முறையில் பூசையில் ஈடுபட்டார்.

குத்து விளக்கின் முன்னே, பூக்களின் குவியலுக்கிடையே இரண்டு செப்புத் தகடுகள் மினுமினுத்தன. அற்றில் சக்கரமும் சதுரங்களும் சில கிறுக்கல்களும் காணப்பட்டன.

"செய்வினை எடுக்கறதுக்கு முந்தி நம்மை பாதுகாப்பா மந்திரத்தினாலே கட்டிக்கிடணும். பேய்கள் வீட்டுக்கிட்டே நெருங்க விடாதபடி, வீட்டைச் சுற்றி காஞ்சீரான் முளைகளை அறையணும், இது ஒரு மரத்திலேயிருந்து எடுத்து வாறது. காஞ்சீரான் முளைக்கு அருகிலே பேய்கள் அண்டாது" என்று பெருமையாகச் சொன்னார். சில குச்சிகளை அந்த வீட்டைச் சுற்றிலும் தரையில் பதித்து வைத்தார்.

வெளியே ஒருவனை காவல் நிற்க வைத்தார். "இதெல்லாம் மத்தவங்களுக்குத் தெரியப்படாது. ரொம்பவும் ரகசியமாச் செய்ய வேண்டிய காரியம். சம்பந்தப்பட்டவங்களுக்குத் தெரிஞ்சா வீண் வம்புதான் வளரும்" என்று பண்டிதர் எச்சரித்தார். இந்த முன்னேற்பாடுகளை செய்துவிட்டு அவர் மந்திரிப்பில் ஈடுபட்டார். நேரம் ஊர்ந்தது.

காவல் காத்து நின்றவன் பரபரப்பு அடைந்தான். விளக்கு வெளிச்சம் வீட்டை நோக்கி வருவதைக் கண்டான். இரண்டு மூன்று விளக்குகள் அசைவதை உணர்ந்தான். வண்டி மாடுகளின் மணியோசையும், சக்கரங்கள் வேகமாக உருண்டு வருகிற சத்தமும் கேட்டது. இந்தப் பக்கம்தான் வருகிறது என்று புரிந்து

கொண்டதும், வீட்டுக்குள் ஓடினான்.

"ஆட்கள் வருது. வண்டி வண்டியா வருது" என்று பதை பதைப்போடு பேசினான் அவன். செல்லம் பண்டிதர் சுதாரித்துக் கொண்டார். "சேதி தெரிஞ்சு நம்மை தடுக்கறதுக்குத்தான் ஆட்கள் வாறாங்க. நம்ம பாடு ஆபத்து" என்று அவர் உணர்ந்தார்.

"ஆச்சி, அபாயம் நெருங்குது. இதை எல்லாம் அப்புறப் படுத்துங்க, சீக்கிரம்" என்று சொல்லி, தகடுகள் தனது மந்திரச் சாமான்கள் முதலியவற்றை அவசரம் அவசரமாக அள்ளி மூட்டையாய் கட்டிக்கொண்டு வெளியேறினார். போகிற போதும் "பூக்கள் சாமான்களை எல்லாம் தோட்டத்துப் பாழ்ங்கிணத்திலே அள்ளிப் போடுங்க" என்று எச்சரிக்கையாய் கூறிவிட்டு, வேகமாய் நடந்து இருட்டோடு கலந்து போனார். தையல்நாயகிக்கும் உள்ளூற பயம் ஏற்பட்டது. சூடியின் மாப்பிள்ளை வீட்டுக்காரங்கதான், விஷயத்தை எப்படியோ கேள்விப்பட்டு, கலகம் பண்ணித் தடுப்பதற்காக ஆட்களைச் சேர்த்துக் கொண்டு வருகிறார்கள் என்று அவள் பயந்தாள். விளக்குமாறை எடுத்து அங்கிருந்த அனைத்தையும் கூட்டிப் பெருக்கி, பனைநார்ப்பெட்டி ஒன்றில் அள்ளி அமுக்கினாள். அருகில் நின்ற புன்னைவனத்திடம் கொடுத்து, "இதை தோட்டத்துக் கிணத்திலே கொட்டிட்டு வா, ராசா. நல்ல பிள்ளையில்லா!" என்று கொஞ்சலாகவும் கெஞ்சலாகவும் சொல்லி அனுப்பிவைத்தாள்.

அவனும் பயந்து கொண்டே போய், பாழுங்கிணற்றில் பெட்டியோடு போட்டுவிட்டு, திரும்பிப் பாராமல் ஓடிவந்தான். அவன் நெஞ்சு திக்திக்கென்று அடித்துக்கொண்டது. வாசல்படி அருகே வந்ததும், அவன் 'தூ தூ' என்று எச்சிலை துப்பிவிட்டு வீட்டுக்குள் புகுந்தான்.

அப்போதுதான் வாசலுக்கு முன்னால் வண்டிகள் வந்து நின்றன. ஆண்களும் பெண்களுமாகப் பலர் இறங்கினார்கள். தையல்நாயகி, 'வாங்க, வாங்க' என்று வரவேற்பதற்குக்கூட வாய் வராதவளாய் திகைத்து நின்றாள்.

"என்ன அக்கா இப்படி நின்னுட்டே? நாங்கதான்" என்று சிரித்துக் கொண்டே முன் வந்தார் ஒருவர்.

அம்மாள் திடீர் விழிப்புற்றவள் மாதிரி, சமாளித்துக்

கொண்டே "வாங்க வாங்க எல்லாரும் வாங்க. திடீர்னு வந்ததுனாலே யாரோ என்னவோன்னு நின்னுட்டேன்" என்றாள். லேசாகச் சிரித்தாள்.

எல்லோரும் வீட்டுக்குள் வந்தார்கள். "ஒரே பூ வாசமா இருக்குதே" "சாம்பிராணி மணக்குதே?" "பூ வாசனை இருக்கு. பூக்களை காணோம்?" என்று ஒவ்வொருவர் ஒவ்வொன்றைச் சொல்லி, அங்குமிங்கும் பார்த்தார்கள். குத்துவிளக்கு, கை விளக்குகள், இரண்டு அரிக்கன் லாந்தர்கள் எரிந்து போதுமான வெளிச்சம் நிலவியது.

"ஏது ஒரே வெளிச்சமும் வாசமுமா இருக்கு? என்ன பண்ணிக்கிட்டிருந்தே அக்கா?" என்று விசாரித்தார் விருந்தாளியாக வந்த தம்பி. தையல்நாயகி பதில் சொல்வதற்குள், சூடி கலகலவென்று சிரித்தாள். சிரித்துக் கொண்டேயிருந்தாள். தொடர்ந்து, அழுதாள். எல்லோருக்கும் 'ஐயோ பாவம்' என்றிருந்தது.

"நாங்க சாத்தா கோயிலுக்கு பூசை போட வந்ததோம். நேரமாயிட்டுது. இருட்டு நேரத்திலே ஊருக்குப் போவானேன், அக்கா வீடுதான் இருக்கே, ராத்தங்கிட்டு, பலபலன்னு விடியயிலே எழுந்திருச்சுப் போகலாம்னு எண்ணி, வண்டியை இங்கே திருப்பினோம். சூடிக்கு உடம்பு நல்லாயில்லேன்னும் கேள்விப்பட்டிருந்தோமா; அவளையும் பார்த்தாப்பலே ஆச்சுன்னும் நினைச்சோம். அதுதான் திடீர்னு வந்து நிக்கிறோம்" என்று விவரித்தார் நல்லகண்ணுப்பிள்ளை.

தையல்நாயகி அம்மாளுக்கு உறவினர்தான் அவர். ஒவ்வொரு குடும்பத்துக்கும் 'குலதெய்வமான' சாத்தா அந்தக் குடும்பம் வசிக்கிற ஊரிலேயே இருப்பதில்லை. வேறு எங்காவது ஒரு இடத்தில்-பல மைல்கள் தூரத்துக்கு அப்பால்-கோயில் கொண்டிருக்கும். அது ஏன் அப்படி என்று அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த யாருக்கும் தெரியாது. எவராவது காரணம் கேட்டாலும், "நம்ம முன்னோர்கள் கும்பிட்டு வந்த தெய்வம். அவங்க அந்தக் காலத்திலே அந்த இடத்திலே இருந்திருப்பாங்க" என்று சொல்லி வைப்பார்கள்.

அதே ரீதியில்தான், நல்லகண்ணுப்பிள்ளை குடும்பத்துக்கு

உரிய சாத்தா மகிழ்வண்ணபுரத்திற்குத் தெற்கே ஒரு மைல் தள்ளியிருந்த மாந்தோப்பில் இடம் பெற்றிருந்தது. 'நேர்த்திக் கடனை தீர்த்து' பொங்கல் வைத்துப் பூசை பண்ணுவதற்காக அந்தக் குடும்பம் இந்தச் செவ்வாயன்று வந்திருக்கிறது. நேரம் ஆகிவிட்டபடியால், குடும்பத் தலைவர் சொன்னதுபோல அக்காள் வீட்டில் இராப் பொழுதைக் கழிக்கும் நோக்கத்துடன் வீடு தேடி வந்தது.

அந்த நேரம் ஒத்தை வீட்டின் 'போதாத நேரம்' ஆக அமைந்திருந்தது! "மாவு இருக்கு. தோசை சுட்டுத் தாறேன். எல்லாரும் சாப்பிடுங்க" என்று தையல்நாயகி உபசரித்தாள்.

"வேண்டாம் வேண்டாம்" என எல்லோரும் மறுத்து விட்டனர். "தோப்பிலே வச்சு பொங்கல் சாப்பிட்டுதான் புறப்பட்டோம். சர்க்கரைப் பொங்கல் மிச்சமிருக்கு. நீங்களும் சாப்பிடலாம். ஏ மீனாட்சி, சர்க்கரைப் பொங்கலை எடுத்துக் கொடு" என்று நல்லகண்ணுப்பிள்ளை கூறினார். மீனாட்சி பொங்கல் பானையை எடுத்தாள்.

"இன்னிக்கு விரதம். சூடிக்கு விபூதி மந்திரிச்சுப் பூசினோம். அதுதான் சாம்பிராணி வாசனை இருக்கு," என்று அம்மாள் தெரிவித்தாள்.

இருந்தாலும், பிள்ளை விடவில்லை. "சர்க்கரைப் பொங்கல் தானே. கோயில் பிரசாதம். சும்மா சாப்பிடலாம்" என்று சொல்லி, அனைவருக்கும் விநியோகித்தார். அன்று இரவில் எல்லோரும் படுத்துத் தூங்குவதற்கு வெகுநேரம் ஆயிற்று.

அதிகாலையில், வெளிச்சம் நன்றாகப் பாய்ந்து பரவுவதற்கு முன்னதாகவே, நல்ல கண்ணுப் பிள்ளை எழுந்து, அனைவரையும் எழுப்பி விட்டார். வண்டிகளைத் தயார் பண்ணி பிரயாணத்துக்கு ஆயத்தமானார். "இருந்து, சாப்பிட்டுட்டுப் போங்க. இப்பவே என்ன அவசரம்?" என்றாள் தையல் நாயகி.

"வந்தாச்சு, பார்த்தாச்சு. பின்னே என்ன? சீக்கிரம் போனால் சோலிகளை கவனிக்க முடியும்" என்று கூறி பிள்ளை புறப்பட்டுப் போனார். வண்டிகள் மறைந்ததும், தையல் நாயகி பெருமூச்சு விட்டு, "ராத்திரி சனியன் மாதிரி வந்து காரியத்தைப் பாழாக்கிப் போட்டான்" என்று கசந்து கொண்டாள். அவளது மனக்கசப்பும்

துயரமும் அதிகரிக்கும்படி காரியங்கள் நிகழ்ந்தன. புன்னைவனம் இரவில் சரியாகத் தூங்கவில்லை. பதறிப் பதறி விழித்தான். துர்ச்சொப்பனம் கண்டவன் போல் தூக்கத்தில் அலறி அடித்து எழுந்து உட்கார்ந்தான். பிறகு தூங்குவது போல் கிடந்தான்.

காலையில் அம்மாள் அவனை கவனிக்கச் சென்ற போது, அவன் நிலைமை மோசமாகியிருந்தது. உடல் கொதித்தது. அவனது கண்கள் மிரளமிரள உருண்டு கொண்டிருந்தன. "ராசா, என்ன செய்யுது ஐயா?" என்று அருமையாக விசாரித்தாள் அம்மாள்.

அவன் பேசவேயில்லை. பயந்தவன் மாதிரி அலறினான். "அந்தா...அந்தா...அம்மா, நானில்லே..." என்று கதறினான்.

"புள்ளை நல்லாப் பயந்திருக்கு. நேத்து ராத்திரி அப்படி ஆயிட்டுதுல்லா. அதுதான்" என்று அங்கலாய்த்தாள் தாய்.

செல்லம் பண்டிதருக்கு ஆள் அனுப்பினாள். அவர் அகப்படவேயில்லை. இரண்டு மூன்று தரம் வேலைக்காரன் அலைந்தும் பயனில்லை. பண்டிதர் தலைமறைவாக எங்கோ போய் விட்டார் என்று தோன்றியது. அவர் வந்தாலும் எதுவும் சாதித்திருக்க முடியாது. வேண்டுமானால், ஒரு செந்தூரப் பொடியைத் தந்து, தேனிலே கலந்து கொடுங்க என்று கூறியிருப்பார். திருநீறை அள்ளி நெற்றியில் பூசி விட்டு, உள்ளங்கையில் மீதியை வைத்து, அவன் முகத்துக்கு நேராகப் பூ என்று ஊதியிருப்பார். அதிலே கொஞ்சம் அவனது கண்களில் விழுந்து, அவன் கண்ணைக் கசக்கும்படி செய்திருக்கும்.

இப்போது அதெல்லாம் நடக்கவில்லை. எதுக்கும் அவசியம் இல்லாமலும் போய்விட்டது. பையன் உள் பயத்தினால் மிகுதியும் பாதிக்கப்பட்டு, அந்த பயத்துக்கே இரையாகிப் போனான்.... புன்னைவனநாதன் செத்துப் போனான். அப்போது அவனுக்கு வயது பதினைந்து.

ஒத்தை வீட்டிலே தையல்நாயகி அம்மாளின் ஓலம் பயங்கரமாக ஒலித்தது. கேட்போர் நெஞ்சைக் கவ்விப் பிழிவது போல் சோகம் அதில் படிந்திருந்தது.

## நான்கு

புன்னைவனநாதன் செத்தது 'அநியாயச் சாவு' என்று ஊர் பூராவும் வருத்தப்பட்டது.

சூடியின் கணவனை கைகால் விளங்க விடாமல் பண்ணுவதற்காக 'செய்வினை வைக்க' திட்டமிட்டதற்குத் தனக்கு கிடைத்த தண்டனை இது என்று தையல்நாயகியின் மனசுக்குப் பட்டது. அப்படி 'செய்வினை' வைக்க முயன்ற போது தடை ஏற்பட்டுவிட்டதால் ஆத்திரமடைந்த ஏவல் பேய் புன்னைவனத் தைப் பலி கொண்டு விட்டது என்றும் அவள் நினைத்தாள். அவளுக்கு 'மனசே சரியில்லாமல்' போய் விட்டது. கொஞ்ச நாளைக்காவது இந்த இடத்தை விட்டு வேறு இடங்களுக்குப் போய்வர வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள்.

தம்பி இறந்த பிறகு சூடியின் உடல் நிலையில் சிறிது குணம் கண்டிருப்பது போல் தோன்றியது. அவள் பித்துப் பிடித்தது போல், வெறும் வெளியை வெறித்துப் பார்த்தபடி நெடுநேரம் உட்கார்ந்திருந்தாளே தவிர, முன்ன மாதிரி சிரிக்கவும் இல்லை; அழுவுமில்லை. நாலு இடங்களுக்குப் போய் வருவது சூடிக்கும் நலம் பயக்கும் என்று அம்மாள் எண்ணினாள். திருச்செந்தூர், கன்னியாகுமரி, திருக்குற்றாலம், பழனி, மதுரை, ராமேஸ்வரம் என்று போய் வந்தால் புண்ணியத்துக்குப் புண்ணியமும் சேரும்; மனசுக்கு நலமும் உடலுக்கு பலமும் கிட்டும் என்று அவள் கருதினாள். இந்த எண்ணத்தை மகளிடம் கூறிய போது அவளும் இணங்கினாள்.

பன்னிரண்டு வயது வெயிலுகந்தநாதனைத் தங்களோடு அழைத்துப் போக வேண்டாம் என்றே அம்மாள் விரும்பினாள். அவனிடம் தங்கள் திட்டத்தைப் பற்றி அறிவித்தபோது, "போயிட்டு வாங்க. நான் எங்கேயும் வரலே" என்று அவன் சொல்லி விட்டான். நல்லதாப் போச்சு என்றே அம்மாள் சந்தோஷப்பட்டாள்.

நல்ல நாள் பார்த்து அம்மாவும் மகளும் கிளம்பினார்கள். வெயிலுப் பையனை அவனுடைய சிற்றப்பா பொறுப்பில் விட்டு வைத்து, வீட்டுச் சாவியையும் அவரிடமே ஒப்படைத்து விட்டுச் சென்றார்கள்.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு இருவரும் திரும்பி வந்தார்கள். சூடி ஆரோக்கியமாய் காணப்பட்டாள். ஓத்தை வீடு மறுபடியும் கலகலப்பாக விளங்கியது. ஊர்வழி போய் வந்தவர்களை விசாரித்து, சேமலாபங்கள் பரிமாறிக் கொள்வதற்காகப் பலரும் வந்து போனார்கள். மகிழ்வண்ணபுரம் பெரிய கோயிலில் கோடைகாலச் சொற்பொழிவு நிகழ்த்துவதற்காக மதுரையிலிருந்து ஒரு சாமியார் வந்தார். பதினைந்து நாட்கள் சைவசமயக் கதை எதையாவது எடுத்துச் சொல்வது வழக்கம்.

அப்படி வருகிறவருக்கு ஒவ்வொரு நாள் ஒவ்வொரு வீட்டில் சாப்பாடு என்று ஒரு திட்டம். அதன்படி ஒரு நாள் அந்தச் சாமியார் ஓத்தை வீட்டுக்கும் வந்தார். அங்கு அவருக்கு விருந்து உபசாரங்கள் பலமாக நடைபெற்றன. அவருக்கு ரொம்ப திருப்தி. சூடி விழுந்து விழுந்து உபசரித்ததும், சிரித்துச் சிரித்துப் பேசியதும் அதைவிட அதிக மகிழ்ச்சி தந்தன. அன்று முதல், அந்த ஊரில் இருந்தவரை, தினசரி அவர் பெரிய வீட்டுக்கு வந்து பேசிப் பொழுது போக்குவதை வழக்கமாகக் கொண்டார். அது சூடிக்கு மிகுந்த சந்தோஷம் அளித்தது.

இது போன்ற விஷயங்களில் அக்கறையும் அளவுக்கு அதிகமான கவனிப்பும் செலுத்தும் இயல்புபெற்ற சில பிரகிருதிகள் "சாமியான் வலைவீசுதான் போலிருக்கு. மீனும் வசமாச் சிக்கிக்கிடுமின்னுதான் தோணுது" என்று பேசிக் கொண்டார்கள்.

"ஏய் வெயிலு! சாமியான் அலையிற அலைச்சல் சரியில்லே. அவன் சரியான அர்ச்சுன சந்நியாசி. வீட்டிலே அதிகம் அண்ட விடாதே. சாக்கிரதையா இருந்துக்கோ" என்று எச்சரித்தும் வைத்தார்கள்.

அம்முறை சாமியார் ஒழுங்காய் போய் சேர்ந்தார்.

ஆனால் ஒரு மாசத்தில் திரும்பவும் வந்தார். பக்கத்து நகரத்தில் சொற்பொழிவுக்கு ஏற்பாடாகியிருக்கிறது என்றும், வந்ததோ வந்தோம், இங்கு வந்து இவர்களையும் பார்த்துவிட்டுப் போகலாமே என்று தோன்றியதால் மகிழ்வண்ணபுரத்துக்கும் வந்ததாகவும் அவர் சொன்னார். சூடிக்கு மகிழ்ச்சிதான். மகள் சந்தோஷமாக இருந்தால் சரிதான் என்று தாயும் மகிழ்ச்சி

காட்டினாள். அதன் பிறகு சாமியார் அடிக்கடி அந்த வீட்டுக்கு வர ஆரம்பித்தார்.

அவர் ஏன் அப்படி வருகிறார் என்று ஊரின் 'உண்மை தேடி'களும், 'பொதுஜன நலம் நாடி'களும் கவலைப்படலானார்கள். வெயிலைக் கூப்பிட்டு சாமியான் என்ன பேசினான், ஏது செய்தான் என்றெல்லாம் தூண்டித் துளைத்தார்கள். "ஏய், அவனை நடை ஏத்தாதே. வீட்டுக்கே ஆபத்து வந்து சேரும்" என்று உபதேசித்தார்கள்.

"அந்தச் சாமியான் வர்றது எனக்கும் பிடிக்கல்லே" என்று வெயிலு சொன்னான்.

"அப்போ சரி. அடுத்த தடவை ஒரு வழி பண்ணுவோம்" என்று அவர்கள் உறுதியாய் சொன்னார்கள்.

அந்த சந்தர்ப்பமும் வந்தது. அடுத்த முறை சாமியார் ரயிலிலிருந்து இறங்கி, சாலையில் நடந்து வரும்போது, நல்லது விரும்பி ஒருவன் பார்த்துவிட்டான். உடனே இதர 'நலம் நாடி' களையும் 'உண்மை தேடி'களையும் கூட்டிக்கொண்டு, கும்பலாக ஊர்முக்கிற்கு வந்து சேர்ந்தான்.

சாமியார் கவலையற்றவராய், "ஞாயிறு திங்கள் செவ்வாய்-அவை நல்ல நல்ல; புதனோடு வியாழன், வெள்ளி, சனியும் நல்ல நல்ல- அவை நல்ல நல்ல" என்று பாடியபடி மெதுநடை நடந்து வந்தார்.

"ஆமா ஆமா. ஊர்ச்சாப்பாட்டை மூக்கு முட்டத் தின்னு போட்டு ஊர் மேயத் திரிகிற தடிமாடன்களுக்கு எல்லாமே நல்ல-நல்ல தாண்டா!" என்று ஒருவன் அவர் முன்னே வந்து நின்று கனத்த குரலில் சொன்னான்.

சாமியார் திடுக்கிட்டார். திகைத்து நின்றார். "என்ன? என்ன? ஏன் என்னை வழி மறிக்கிறீங்க?" என்று கேட்டார்.

"வேய், உம்மைப்போல ஒரு சாம்பல் பூசிதான் ஒரு சமயம், ஓகோ இதுதான் பூலோகமா? நீங்கள் எல்லாம் மானிடக் குட்டிகளா? என்று கேட்டானாம். உம்மைப் போல எத்துச் சாமி கள் எத்தனையோ பேரை நாங்கள் பாத்திருக்கோம். இப்போ நீரு வந்து சேர்ந்திருக்கீரு!" என்று இன்னொருவன் பேசினான்.

"ஏய் கொட்டைகட்டி! பெரிய வீட்டுச் சூடிக்கும் உமக்கும் என்ன உறவு? எதுக்கு அவளைத் தேடி ஓடி வாறேரு?" என்று கேட்டபடி, அவர் கழுத்திலே கிடந்த பருமனான உத்திராட்ச மாலையைப் பிடித்து இழுத்தான் ஒருவன். அவன் இழுத்த இழுப்பில் அது அறுந்துவிட்டது.

"ஓம் முருகா!" என்றார் சாமியார். "நீங்க ஏதோ தப்பிதமாக எண்ணிக் கொண்டு, இப்படி எல்லாம் பேசுகிறீர்கள். ஆண்டவன் உங்களை கேட்பார்" என்று பிரசங்க பாணியில் பேசினார்.

"இவரு எப்பவும் சரியாகவே எண்ணி, சரியாகவே பேசி, சரியாகவே செயல்புரியும் சரிச்சாமி! தெரியும் வே" என்று கூறி, மற்றொருவன் அவர் தலையில் ஒரு தட்டு தட்டினான்.

"ஏ பாவிகளா!" என்று கத்தினார் சாமியார்.

"வீண் பேச்சு எதுக்கு? சாமியாரே, ரொம்ப காலமா நாங்க உம்மை கவனிச்சு வாறோம். உம்ம நடத்தை சரியில்லே, வேறு எந்த ஊரிலே நீரு என்ன நாடகம் நடத்தினாலும் எங்களுக்குக் கவலையில்லை. உம்ம அர்ச்சுன பாணி பவளக்கொடி லீலைகளை இந்த ஊரிலே வச்சுகிட வேண்டாம். அதிலும் பெரிய வீட்டிலே அதைக் காட்ட வேண்டாம். ஆமா, சொல்லிப் போட்டேன்" என்று எச்சரித்தான்.

"வந்த மச்சான் திரும்பிப் போனான் இளிச்ச வாயோடேன்னு ஒழுங்காப் போய்ச் சேரும். இதுதான் வழி!" என்று அவரைத் திருப்பி ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகும் திசையைக் காட்டினான் ஒருவன்.

"போயிட்டு வாரும். இந்த அடியை எப்பவும் ஞாபகம் வச்சுக்கிடும்" என்று பிடறியில் பலமாக ஒரு அறை கொடுத்தான் மற்றொருவன்.

முன்னால் போய் விழுவதுபோல் தடுமாறி, தாக்குப் பிடித்து, விழாமல் தப்பிக்கொண்டார் சாமியார். "காலிப் பயலுக.... உருப்படமாட்டானுக!" என்று முணகியவாறே நடந்தார்.

"ஏய் காவி வேட்டிப் பயலே! ஒழுங்கா ஊர் போய்ச் சேரனும்னு சொன்னா, மூச்சுக் காட்டாமப் போ. வீணா வாயை மேயவிடாதே. அப்புறம் இந்தப் புறமடையிலே பூத்து வச்சிருவோம்

பூத்து! ஆள் விலாசமே இல்லாமப் போயிருவே. ஆமா" என்று கத்தினான் ஒரு நபர்.

உயிரோடு திரும்பினால் போதும் என்று எண்ணி, வேகமாக நடந்தார் சாமியார். தங்கள் வீரதீரச் செயலை விளம்பரப்படுத்து வதற்காக உற்சாகமாக நடந்தார்கள் இளைஞர்கள்.

ஆனால் ஒரு மாசத்துக்குப் பிறகு, அவர்கள் நினைத்திராத காரியம் நடந்தது. சூடிக்கொடுத்த நாச்சியார் மதுரைக்குப் போய்விட்டாள் என்று அவர்களுக்குத் தெரிய வந்தது. சாமியார் நடந்த விவரத்தை அவளுக்குக் கடிதம் மூலம் தெரிவித்து விட்டார் என்றும், அவர்களுக்கிடையே கடிதப் போக்குவரத்து தொடர்ந்தது என்றும், அவரே திட்டம் வகுத்துக் கொடுத்து அவளை வரவழைத்துக் கொண்டார் என்றும் தெரிந்தது.

"கெட்டலைஞ்ச கழுதை! ஒரு தடவை ஓடிப்போனது, கட்டிப்போட்ட மாதிரி வீட்டோடவா கிடக்கும்? சவம், அது புத்தியைக் காட்டிவிட்டது" என்று காறித் துப்பினார்கள் அவர்கள்.

"சாமியான் நமக்கு பட்டை நாமத்தைக் குழைச்சுப் போட்டுட்டானே! எமப்பளுவன்தான்" என்று ஒருவர் சொன்னார்.

"இப்போ தப்பிட்டான். இன்னொரு சமயம் வசமா வந்து சிக்குவான்" என்று கறுவினான் இன்னொருவன்.

வெயிலும் கொதிப்புற்றிருந்தான். "அடுத்த தடவை வீடு தேடி வரட்டும். அவ காலை முறிச்சு அவள் கையிலே கொடுக்கறேன். ஓடு காலி!" என்று சூளுரைத்தான் அவன்.

பையன் பெரியவன் ஆகிவிட்டான் என்று புரிந்து கொண்டாள் தாய்.

## ஐந்து

வெயிலுகந்தநாதன் பெரியவனாகிக் கொண்டிருந்தான்.

அனைத்தையும் வேடிக்கை பார்க்கிற சின்னப் பையனாக வளர்ந்தவன்தான் அவன். வீடு கட்டியதை வேடிக்கை பார்த்தான். புதையல் கிடைக்கும் என்று அப்பா விளையாட்டாகச் சொன்னதை நம்பிக்கொண்டிருந்தான். கட்டப்பெற்ற வீட்டில் ஒரு அறையில்

சுவர் ஓரத்தில் காலால் மிதித்தால் திம்-திம் என்று ஓசை எழுந்தது. அங்கே பூமிக்குள் புதையல் பானை இருக்கிறது என்று அப்பா சொன்னார். அதிலிருந்து, தினசரி அவன் அந்த இடத்திலில் கால் வலிக்கும் வரை மிதித்து மிதித்துப் பார்த்தான். சத்தம் எழுவதைக்கேட்டு சந்தோஷப்பட்டான்.

"அப்பா, புதையல் எப்போ கிடைக்கும்? அது பெரிய பானையா இருக்குமா? அந்தப் பானைக்குள் என்னென்ன இருக்கும்?" என்று கேட்டுத் தொணதொணத்தான் பையன்.

"தங்கக் காசுகள், நகைகள் எல்லாம் இருக்கும். பெரிய பானையாகவும் இருக்கலாம். சின்னப் பானையாகவும் இருக்கலாம்" என்று அப்பா பொறுமையாகச் சொல்லுவார்.

"புதையல் மண்ணுக்குள்ளே எப்படிப் போச்சு?"

"நமக்கு முந்தி எப்பவோ வசித்தவங்க, தங்கம், நகைநட்டுகள் எல்லாவற்றையும் பானைக்குள் போட்டு, பத்திரமாக இருக்கட்டும்னு மண்ணுக்குள்ளே புதைச்சு வச்சாங்க. சாகிறபோது அதை யாரிடமும் சொல்லாமலே செத்துப் போயிருப்பாங்க. அப்புறம் எந்தக் காலத்திலாவது அது யாருக்காவது அகப்படும்; அகப்படாமலும் போகும்."

வெயிலு அடிக்கடி புதையல் பற்றி விசாரிக்கவும், ஒரு சமயம் அவர் எரிந்து விழுந்தார். "உன்னையாவது உன் அண்ணனை யாவது பலி கொடுத்தால்தான் புதையல் கிடைக்கும்" என்று கோபத்தோடு சொன்னார். அதன் பிறகு அவன் தந்தையிடம் புதையல்பற்றி பேச்செடுக்கவில்லை.

புதுவீடு கட்டி பிறவிப்பெருமாள் பிள்ளை ரொம்ப காலம் ஆண்டு அனுவிக்கவில்லை. அவர் லட்சுமி நாராயணர் செம்பை வைத்துத்தான் கும்பிட்டாரே தவிர, வீட்டின் சுவர்களில் வேறு சாமி படங்களை மாட்டிவைத்து, பூ மாலை சூட்டி, கும்பிட ஆசைப்படவில்லை.

வேறு சில வீடுகளில் சுவர்களில் படங்கள் தொங்குவதை வெயிலு பார்த்தான். "நம்ம வீட்டிலும் ஏனப்பா படங்கள் மாட்டவில்லை?" என்று கேட்டான். "சுவர்கள் வம்பாப் போகும்" என்று அப்பா சொன்னார். அது அவனுக்குத் திருப்தி அளிக்கவில்லை. என்றாலும் அப்போது அவன் வாய் திறந்து

எதுவும் பேசவில்லை.

பிறவிப்பெருமாள் பிள்ளை செத்துப்போன பிறகும், புதையல் நினைப்பு வெயிலுக்கு இருந்து வந்தது. அம்மா கேட்ட சோதிடர்களில் ஒருவர் அவனது யோக ஜாதகம் பற்றிப் புகழ்ந்து பேசி, அவனுக்குப் புதையல் கிடைக்கும் என்று கூறியது அவன் மனப் பெட்டியினுள் புதைந்து கிடந்தது. ஆயினும் அப்பா சொன்ன 'பலி விஷயம்' அவனை உறுத்தியது.

அண்ணன் அநியாயமாய் செத்துப் போனதும், பேய் அவனைப் பலி வாங்கிவிட்டது என்று அம்மா சொன்னதும், வெயிலு, தந்தையின் பேச்சை நினைவு கூர்ந்தான். இனிமேல் புதையல் எனக்குக் கிடைத்தாலும் கிடைக்கும் என்று ஆசைப்பட்டான். தரையில் ஓசை எழுந்து வந்த இடத்தை மிதித்துப் பார்த்தான். அங்கே சத்தம் எதுவும் எழவில்லை. திரும்பத் திரும்ப மிதித்தான். பழைய சத்தம் கேட்கவில்லை. அவனுக்கு ஏமாற்றமாகத்தான் இருந்தது. இயற்கையாக அந்த இடத்தில் ஏதோ குறை இருந்து, நாளடைவில் அது சரிப்பட்டுப் போயிருக்கும் என்று பிற்காலத்தில் அவனுடைய அறிவு விளக்கம் கூறிக்கொண்டது. ஆனால் அந்தச் சமயத்தில், 'பூதம் புதையல் பானையை பூமிக்குள்ளே ரொம்ப ஆழத்துக்கு இழுத்துக் கொண்டு போயிருக்கும்' என்றுதான் நினைக்க முடிந்தது அவனால்.

காலை நேரத்தில் அந்த வீட்டின் முன்னே தபால் பையைச் சுமந்து கொண்டு 'ரன்னர்' போவான். அவன் கையில் ஈட்டிக் கம்பு இருக்கும். அதில் இரண்டு வளையங்கள் கிடந்து, அவன் ஓடுகிறபோது ஒலி எழுப்பும். தபால் பை சுமந்து வருகிறவன் வரவைக் கூறுவது போலவும், காட்டு வழிப் போகையில் மிருகங்களுக்கு பயமூட்டி விரட்டவும், அவனுக்குப் பாதுகாப்பாகவும் அந்த ஈட்டியும் வளையங்களும் உள்ள கம்பு பயன்படும் என்று அவனுடைய அப்பா சொன்னார். 'ரன்னர்' வருவதையும் போவதையும் வெயிலு தினந்தோறும் வேடிக்கை பார்ப்பது வழக்கம்.

சிலசமயம் 'சிலுங்-சிலுங்' என்று வளையங்கள் குலுங்க ஈட்டியை ஆட்டிக் கொண்டு அந்த 'ரன்னர்' மாதிரி ஓடவேண்டும் என்று அவன் ஆசைப்படுவான். சிறுபிள்ளைத்தனமான ஆசைதான். அதுபோல் சிறுபிள்ளைத்தனம் மற்றொன்று

அவனிடம் இருந்தது.

அந்நாட்களில் கந்தகத் தீக்குச்சிதான் எங்கும் கிடைத்து வந்தது. பளிச்சிடும் சிகப்பு வர்ணத் தலைகளைக் கொண்ட 'லூஸிபர் மேட்சஸ்.' அந்தக் குச்சிகளை அதற்குரிய மருந்து பூசிய, தீப்பெட்டி ஓரங்களில் உரசித்தான் பற்றவைக்க வேண்டும் என்பதில்லை. தரையில், சுவர்மீது, கட்டைகளில் எங்கே உரசினாலும் நெருப்பு வெடிக்கும். தரைமீது போட்டு அழுத்தமாய்த் தேய்த்தாலும் தீ பற்றிக் கொள்ளும். குச்சியை உரசித் தேய்த்த இடத்தில் மஞ்சளாகக் கந்தகக் கறை படியும். சிறிது நேரம் கந்தக நெடியும் நிலவும். இந்த விதமான செந்தலைத் தீக்குச்சிகளின் காரணமாகத்தான், சிவப்புத் தொப்பி தரித்து வந்த போலீஸ்காரர்களை 'தீக்குச்சிகள்' என்று குறிப்பிடுவதும் எழுதுவதும் வழக்கத்துக்கு வந்தது.

வெயிலு இத் தீக்குச்சிகளை கண்டகண்ட இடத்திலெல்லாம் உரசி, குச்சியில் நெருப்பு வெடித்துச் சீறுவதை வேடிக்கை பார்த்துக் களிப்பதைப் பழக்கமாக்கியிருந்தான். இந்தப் பழக்கம் அவனோடு ஒட்டி வளர்ந்தது.

அப்பா காலத்திலிருந்தே அந்த வீட்டில் வண்டியும் மாடுகளும் இருந்தன. சின்னப்பையனாக இருந்த போதே, தானே வண்டி ஓட்ட வேண்டும் என்று அவன் ஆசைப்பட்டான். 'இருப்புச் சட்ட'த்தில் வண்டிக்காரன் இருக்கிறபோதே, வெயிலு 'கோசுப் பெட்டி' மீது அமர்ந்து, கயிறுகளைக் கையில் பற்றிக் கொண்டு மாடுகளை முன்னேற விடுவதில் ஆர்வம் காட்டினான். வயது ஆகஆக, தானே தனியாக வண்டி ஓட்டிச் செல்லக் கூடிய சந்தர்ப்பங்களை அவன் உண்டாக்கிக் கொண்டான்.

வெயிலுக்கு படிப்பில் ஆர்வமும் ஈடுபாடும் இல்லை. இருந்தாலும், பள்ளிக்கூடம் போய்வந்தான். மகிழ்வண்ணபுரத்துப் பையன்கள் ஐந்தாறு மைலுக்கு அப்பால் இருந்த நகரத்துப் பள்ளிக் கூடத்துக்குப் போய்வந்தார்கள். ரயிலில் போய் வரவேண்டும். ரயில் நிலையம் ஊருக்கு மேற்கே இரண்டு மைல் தள்ளி இருந்தது. எட்டு மணிகு ஒரு ரயில்வண்டி. அதில் போனால்தான் பள்ளிக்கூடத்துக்கு நேரத்துக்குப் போய்ச் சேரலாம். ஆனால் அந்த வண்டி எட்டரை மணிக்குள்ளாக நகரை அடைந்துவிடும். பத்து மணி வரை பையன்கள் நகரச் சூழ்நிலையில் இஷ்டம்போல் சுற்றித்

திரிந்து பொழுது போக்க வாய்ப்பு கிட்டும். ஆனால், எட்டு மணி ரயிலைப் பிடிக்க, ஏழு மணிக்கே ஊரிலிருந்து கிளம்பி நடந்துபோக வேண்டும். ஐந்தரை, ஆறு மணிக்கே எழுந்து எல்லா வேலைகளையும் கவனிக்க வேண்டும்.

மாலையில் ஆறு மணிக்குத்தான் ரயில். அதில் வந்து இறங்கி, பையன்கள் மெதுவாக நடந்து வருவார்கள். வீடு வந்து சேர்வதற்குள் இருட்டிவிடும். வந்தவுடன் சாப்பிட்டு விட்டு, படுக்கலாம் என்றுதான் தோன்றும் வெயிலுக்கு. படிப்பதற்கு உற்சாகம் இருக்காது. மழை நாட்களில் சிரமங்கள் அதிகம். எனினும் தினசரி பல பையன்களோடும் சேர்ந்து ரயிலில் போய் வருவது மனோகரமாக இருந்தது அவனுக்கு. நகரத்தில் சுற்றித் திரிந்து பொழுது போக்குவது ஜாலியாக இருந்தது.

சில மாதங்களுக்கு ஒருமுறை நகரத்தில் நாடகக் கம்பெனி ஏதாவது வந்து முகாமிடும். பையன்களுக்கு நாடகம் கவர்ச்சி சக்தியாக விளங்கியது. நாடகங்களைப் பற்றியும், நாடகத்தில் நடிக்கிறவர்களைப் பற்றியும், முக்கியமாக நாடகக்காரிகள் பற்றியும் பேசுவது இன்பமான விஷயமாக அமைந்தது.

பெரிய பையன்கள் நகரத்தில் இருந்த சில தெருக்களைப் பற்றி அங்கே அந்தி மந்தாரைகளாய் பூத்தொளிரும் தனிரகமான பொம்பிளைகளைப் பற்றி சுவையாகப் பேசினார்கள். ஒன்றிரண்டு பையன்கள் அதுமாதிரி வீடுகளுக்குப் போய் வந்து அனுபவம் பெற்றிருப்பதாகக்கூட அளந்தார்கள். வளர்ந்து கொண்டிருந்த வெயிலுக்கு அப்படி அனுபவம் பெற வேண்டும் என்ற ஆசை துடித்தது. ஆனால் செயல்புரியத் துணிச்சல் இல்லை. பதினைந்து வயதாகியும், அவன் எட்டாவது வகுப்பிலேயே மட்டம் போட்டு விட்டதால், படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டான்.

"ராசா படிச்சு என்ன ஆகப்போகுது? இருக்கிற சொத்துக்களை மேல்பார்த்துக்கிட்டு இருந்தாலே போதுமே!" என்று அம்மாக்காரி பெருமையாகச் சொன்னாள்.

பையன் சீட்டாடுவதிலும், வம்பளப்பதிலும், நாடகங்கள் பார்க்கப் போவதிலும் அக்கறை காட்டினான்.

'பூனைக்கராப்பெட்டி' (பிற்காலத்தில் 'கிராமபோன்' என்று பெயர் பெற்றுவிட்ட 'போனகிராப்' பெட்டி) வாங்கினான்.

'ஊமத்தம்பூக் குழாய்' வைத்த அழகான பெட்டி. அதில் இசைத் தட்டு சங்கீதம் கேட்டு மகிழ்வதற்காக எப்போதும் ஒரு கூட்டம் கூடியது. ஆகவே, ஒத்தை வீடு கலகலப்பாகவே இருந்தது.

வீட்டின் சுவர்கள் வெறுமையாய்க் கிடப்பது வெயிலுக்குப் பிடிக்கவில்லை. படங்கள் வாங்கி மாட்டினான்.

இந்தியர்கள் தெய்வங்கள் என்று போற்றி, பூமாலை போட்டு, சூடன் கொளுத்தி, பூசை பண்ணிக் கும்பிடுவதற்குப் பயன்பட்ட ரவிவர்மாவின் லட்சுமி, சரஸ்வதி, பூதேவி சீதேவி சமேதரான ஸ்ரீமந் நாராயணன், பார்வதி பரமேஸ்வரன், பிள்ளையார் முதலிய படங்கள் பலவும் பல வர்ணங்களில் வசீகமாக ஜெர்மனியில் அச்சிடப்பெற்று வந்து, கண்ணாடி சட்டம் போடப் பெற்று, தெருத்தெருவாக விற்பனை செய்யப்பட்டன. அவற்றை வாங்கிச் சுவர்களில் மாட்டி வைத்தான் வெயிலு. மோகினி, ஊஞ்சல் சுந்தரி, பந்து பயிலும் அழகி, லிகிதம் எழுதும் சகுந்தலை, அசோக வனத்துச் சீதை போன்ற இதர ரவிவர்மா சித்திரங்களையும் (ஜெர்மானியத் தயாரிப்புகள்) வாங்கி எடுப்பான இடங்களில் மாட்டி வைத்தான். மதுரையிலிருந்து அழகான சுவர்க்கடியாரம் ஒன்று வாங்கி வந்து, எல்லோர் பார்வையிலும் படக்கூடிய இடத்தில் மாட்டினான்.

இப்படி எல்லாம் வீட்டை அழகு படுத்துவதில் ஆர்வம் காட்டிய வெயிலு தன்னை சிங்காரித்துக் கொள்வதிலும் அக்கறை எடுத்துக் கொண்டான்.

அந்நாட்களில் பிரபலமாக இருந்த - வாங்கிக் கட்டுவது அந்தஸ்தின் சின்னம் என்றும், நாகரீகம் என்றும் மதிக்கப்பட்டு வந்த - லங்காஷயர் மில் தயாரிப்பான, மிக நைஸான, மல் வேட்டிகளை அவனும் வாங்கிக் கட்டினான். ப்யூஜி ஸில்க் சட்டைகள் அணிந்தான். 'க்ரமெண்ட்ஸ் கோல்ட் பட்டன்ஸ்' என்று பெரிதாகப் பேசப்பெற்ற தங்கப் பித்தான்களையே சட்டைகளுக்குப் பயன்படுத்தினான். பாதங்களில் விலை உயர்ந்த ஸ்லிப்பர் அணிந்து திரிந்தான்.

வில் வண்டியை அழகு படுத்தினான். நல்ல விலையில் உயர்ந்த ஜாதி மாடுகளையே வாங்கினான். அடிக்கடி 'மாட்டுத் தாவணி'யில் அவற்றை மாற்றி மகிழ்ந்தான். 'டவுனுக்குப் போய்

வருவதற்காக' ராலி ஸைக்கிள் வாங்கினான். அவனைப் போன்ற ஜாலி பிரதர்கள் போட்டு மினுக்குகிறார்கள் என்பதற்காக அவனும் 'ஸெர்ஜ் கோட்' தைத்துக் கொண்டான். வெகுநாள் வரை நீளமாக வளரவிட்டிருந்த தலைமுடியை கிராப் செய்து கொண்டான். மெதுவாகவும் வேகமாகவும் நாட்டிலே பரவி வந்த பல்வேறு மாற்றங்களும் வெயிலுகந்தநாதனிடமும் பாதிப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்தன.

'வீட்டுக்குச் சீதேவி வேணும். பையனுக்கு சீக்கிரமே கல்யாணத்தை பண்ணி வச்சிரனும்' என்று தையல்நாயகி அம்மாள் பறந்தாள். தீவிர முயற்சிகள் செய்தாள். வெற்றியும் பெற்றாள்.

வெயிலுகந்தநாதனுக்கு, அவனுடைய பத்தொன்பதாவது வயசில் கல்யாணம் நிகழ்ந்தது. வீட்டின் ஒளி விளக்காக வந்து சேர்ந்தாள் காந்திமதி.

## ஆறு

மகிழ்வண்ணபுரத்தில் ஒரு புதுமை நிகழ்ந்தது. முதல் தடவையாக அந்த ஊருக்கு ஒரு நாடகக்குழு வந்தது. 'ஸ்பெஷல் டிராமா' என்ற பெயரில், உதிரி நடிகர்களை சேர்த்துக் கொண்டு, குழு அமைத்து, ஒரு 'காண்ட்ராக்டர்' ஊர்ஊராகப் போய் நாடகங்களை நடத்துவார். நடிக நடிகைகளுக்கு ஒரு இரவுக்கு இவ்வளவு சம்பளம் என்று ஒப்பந்தம் செய்திருப்பார். இதர செலவுகள் எல்லாம் போக லாபம் காணும்படியாக வசூல் வர வேண்டும்.

மகிழ்வண்ணபுரத்தில் நல்ல வசூல் இருக்கும் என்றே தோன்றியது. மிஸ் கிருஷ்ணவேணி என்ற நடிகை மேடை மீது ஜொலித்து, ஏகப்பட்ட ரசிகர்களை கவர்ந்து கொண்டிருந்தாள். "அவளுக்கு பதினேழு வயதுதான் இருக்கும். டால் வீசும் ஜில் சுந்தரியாக விளங்குகிறாள், அவள் சிரிப்பு அப்படியே ஆளை கிறங்க வைக்கிறது" என்று ரசிகசிகாமணிகள் பேசி மகிழ்ந்தார்கள். வள்ளித் திருமணம் நாடகத்தில் வள்ளியாக வந்து பேச்சு சாதுர்யத்தினால் ஜனங்களை பரவசப்படுத்திய மிஸ் கிருஷ்ணவேணி, 'ஜில் சதார்'த்தில் இளவரசனாகத் தோன்றி

பேச்சாலும் நடிப்பினாலும் ரசிகர்களுக்குக் களிப்பூட்டினாள் 'அல்லி அர்ஷஜுனா'வில் அல்லியாகத் தோன்றி அமர்க்களப்படுத்தியவள் 'பவளக்கொடியாய் மாறி இனியவளாய், எழிற்கொடியாய் ஜிலுஜிலுத்தாள். இப்படியாக எல்லோர் நினைப்பிலும் பேச்சிலும் இடம் பெறக்கூடிய காந்த சக்தியாய் திகழ்ந்தாள் மிஸ் கிருஷ்ணவேணி.

அவள் புகழ் காந்தியில் கிறுகிறுத்துப் போனவர்களில் வெயிலுகந்தநாதனும் ஒருவன் ஆனான்.

அவ்வூரில் ஒருநாள் விட்டு ஒருநாள் நாடகம் நடைபெற்றது. ஒவ்வொரு நாடகத்தின் போதும் முதல் வரிசைப் பிரமுகர்களில் ஒருவனாக வெயிலு விளங்கினான். அந்நேரங்களில் அவன் தன்னைத் தானே ஒரு 'அயன் ராஜபார்ட்' ஆக எண்ணிக் கொள்வது உண்டு. மிஸ் கிருஷ்ணவேணி அரங்கத்தில் அநாயாசமாக ஆட்சி புரிகிறபோது, அவள் கவனத்தை கவர்வதற்கான வேலைகளை அவன் செய்வான். கை தட்டுவான். தனிரகச் சிரிப்பு ஒலிபரப்புவான். "ஆகா...பிரமாதம்...பேஷ்பேஷ்" என்று பாராட்டுச் சொற்களை உதிர்ப்பான். இதற்கெல்லாம் பலன் இல்லாது போகவில்லை. 'முத்துச்சிரிப்பு மோகனாங்கி' என்றும், 'புன்னகைப் பூஞ்சோலை', 'இளமுறுவல் எழிலரசி', 'மின்னல் சிரிப்பழகி' என்றும் பலவாறாக நோட்டீஸ்களில் விளம்பரப்படுத்தப்பட்டு வந்த சொக்கும் சிரிப்பை அவனுக்காகக் காட்டி, ஒயில் பார்வை ஒன்றையும் அவன் பக்கம் அனுப்பிவைப்பாள் அந்த நடிகை.

ஒரு நாடகத்தில் மிஸ் கிருஷ்ணவேணி வசீகர ராஜகுமாரனாக வேடம் தரித்து மேடையில் மின்னிக் கொண்டிருந்தாள். மினுக்கும் வயலட் நிறவெல்வட் கோட்டும் கால்சட்டையும்; அவற்றில் அங்கங்கே மினுமினுக்கும் ஜரிகை வேலைப்பாடுகள். வெள்ளை வெளேரென மிளிரும் ஸாக்ஸ் கால்களோடு ஒட்டியிருந்தன. அழகான கறுப்பு ஸ்லிப்பர்கள் அவளது சின்னஞ்சிறு பாதங்களுக்கு வடிவமைத்தது. தலையிலே ஜோரான கிரீடம். அதன் முகப்பில் இனிமையாய் சிலிர்த்து நின்ற வெள்ளைப்பறவைச் சிறகு போன்ற ஒரு அழகு அணி. இடையிலே தங்கநிற உடைவாள், நீளமாக. கவர்ச்சிகரமாக ஒப்பனை செய்யப்பட்ட முகம். அதிலே குறுகுறுத்துச் சுழலும் ஒளிச்சுடர்கள்

போன்ற விழிகள்; காண்போரைக் கிறுகிறுக்கச் செய்த பழச்சுளை உதடுகளில் பூத்துப் பூத்துச் சிந்திய சிறு சிரிப்பு. சொக்கிப்போனான் வெயிலு. அவளையே பார்த்தபடி இருந்தான்.

பபூனை கேலி பண்ணிக்கொண்டிருந்தாள் அவள். ஒரு சந்தர்ப்பத்தில், "உமது பேர் என்ன?" என்று கேட்டாள்.

பபூனை முந்திக்கொண்டு, முதல்வரிசைப் பிரமுகராய் ஜம் மென்றிருந்த வெயிலுகந்தநாதன் உரத்த குரலில் சொன்னான் "மாமா!" என்று. "மாமா....டாப்பர் மாமா" என்றும் கத்தினான்.

மிஸ் கிருஷ்ணவேணி அவன் பக்கம் ஒய்யாரமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு, பபூனை நோக்கிப் பாடினாள், "டாப்பரே, உம்மை நம்பின பேர்கள் பாப்பரே!" என்று.

"ஆகா, பிரமாதம்!" என்று ஆரவாரித்தான் வெயிலு. கடைசி நாடகத்தன்று அவன் மிஸ் கிருஷ்ணவேணிக்கு, அவள் நடிப்புத் திறமையை மெச்சி ஒரு மோதிரம் பரிசளித்தான்.

அத்துடன் இது முடிந்து விடவில்லை. அந்த ஸ்பெஷல் நாடக கோஷ்டி முகாமிடுகிற ஊர்களுக்கெல்லாம் வெயிலுவும் போய் வருவதில் உற்சாகம் காட்டினான். அதன் கான்ட்ராக்டருக்கு நெருங்கிய நண்பனானான். கால ஓட்டத்தில் அவனே நாடகக் கான்ட்ராக்டராகவும் மாறிவிட்டான்.

அப்போது வெயிலுக்கு முப்பது வயது. ஒத்தை வீட்டில் சில மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. வெயிலுவின் அம்மா தையல்நாயகி இறந்துபோயிருந்தாள். அவள் சாகிற வரையில், மகள் சூடி என்றேனும் ஒருநாள் திரும்பி வரக்கூடும் என்ற நம்பிக்கையோடேயே யிருந்தாள். ஆனால் மகளைப் பற்றிய சிறு தகவல்கூடக் கிடைக்கவில்லை.

"அவள் போன இடம் புல்லு முளைச்சுப் போச்சு!" என்று வெயிலு கிண்டலாகச் சொல்வது வழக்கம்.

வெயிலு அந்தப் பெரிய வீட்டுக்கு ஒரு மாடி கட்டுவித்தான். மாடியையே தனது இருப்பிடமாகவும் கொண்டுவிட்டான். சாப்பாடு, படுக்கை, சும்மா பொழுது போக்குவது எல்லாமே மாடியில்தான். அதனால் அந்த ஊரில் 'மாடிப் பிள்ளை' என்றொரு பெயரும் அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

ஜோரான குதிரைவண்டி ஒன்று வைத்துக் கொண்டான் வெயிலு. வண்டி பார்ப்பதற்குப் பளபளவென்று அழகாக இருந்தது. குதிரை கம்பீரமாகக் காணப்பட்டது, வெளியூர் நாடகங்களுக்கு அவன் அந்த வண்டியிலேதான் போய் வந்தான்.

வீட்டில் அரிக்கன் லாந்தர் போதுமான வெளிச்சம் பரப்பவில்லை என்று சொல்லி, பெட்ரோமாக்ஸ் லைட்டுகளை வாங்கி எரிய விட்டான். "எதுவுமே பளபளப்பாய், பிரகாசமாய், இருந்தால்தான் எனக்குப் பிடிக்கும்" என்று அவன் சொல்வது வழக்கம்.

ஆனால் அவன் மனைவி காந்திமதி 'டிம்' அடிச்ச விளக்காக இருந்தாள். அவளிடம் அழகு அம்சங்கள் இல்லை; அவள் முகத்திலும் பிரகாசம் இல்லை. போதும் போதாததற்கு நோய்களின் வளர்ப்புப் பண்ணையாகவும் அவள் விளங்கினாள். அவளுடைய அறை ஒரு குட்டி ஆஸ்பத்திரியாக இருந்தது. தனக்குக் குழந்தை பிறக்கவில்லையே என்று காந்திமதி வருத்தப் பட்டுக் கொண்டிருந்தாள். குழந்தை எதுவும் பிறக்காதது நல்ல காலந்தான் என்று வெயிலு மகிழ்ந்து போனான்.

அவள் அவனை சந்தேகித்தாள். அவனது ஆரோக்கியத்தை யும் சந்தோஷத்தையும் கண்டு அவள் புகைந்தாள்; பொறாமைப் பட்டாள். முணுமுணுத்தாள். சண்டைபிடித்தாள். அதை எல்லாம் வெயிலு சட்டைபண்ணவேயில்லை. அவன் போக்கில் அவன் முன்னேறிக் கொண்டிருந்தான்.

ஸ்பெஷல் நாடகங்கள் நடத்துவதில் அவனுக்கு ஈடுபாடு ஏற்பட்டதே மிஸ் கிருஷ்ணவேணியின் நட்பையும் உறவையும் பெற்று அவற்றைப் பேணிவளர்க்க வேண்டும் என்ற அவனுடைய ஆசையினால்தான். அதில் அவன் வெற்றியும் கண்டான். ஆனால் பணம் நிறையவே அவன் கையைவிட்டுப் போயிற்று. அதைப் பற்றி வெயிலு கவலைப்படவேயில்லை. கிருஷ்ணவேணி அவனுடைய பிரிய சிநேகிதி ஆகிவிட்டாளே; அது எவ்வளவு பெரிய பாக்கியம்!

அவளோடு அவன் அடிக்கடி குற்றாலத்துக்குப் போனான். இரண்டு மூன்று நாட்கள் அங்கேயே தங்கினான். அங்கே ஒரு சிறு பங்களாவை விலைக்கு வாங்கிவிட்டான்.

அவனுக்கு நாடகங்கள் நடத்துவதிலும். நடிகர்களை நிர்வகிப்பதிலும் நல்ல திறமை இல்லை. நாடகங்களில் அக்கறை காட்டுவதைவிட, நடிகை கிருஷ்ணவேணியிடம் அளவுக்கு அதிகமான அக்கறை காட்டிவந்தான். நாடகங்கள் பொருளாதார வெற்றியாக அமையவில்லை. சில மாதங்களிலேயே பல ஆயிரம் ரூபாய் நஷ்டம் ஏற்பட்டது. வெயிலு மேலும் சில ஆயிரங்களை பறக்கவிட்டிருப்பான்தான். ஆனால் கிருஷ்ணவேணி அவன்மீது அனுதாபப்பட்டு, அவனைத் தடுத்து விட்டாள்.

"கொஞ்ச நாட்களுக்கு நாடகம் எதிலும் நடிக்காமலே இருக்கணும்னு எனக்கு ஆசையாயிருக்கு. நீங்க நாடகங்களுக்கு ஏற்பாடு பண்ண வேண்டாம்" என்று அவள் கேட்டுக் கொண்டாள்.

கிருஷ்ணவேணியின் விருப்பம் எதுவானாலும் அதை நிறைவேற்றச் சித்தமாக இருந்த வெயிலு அவளுடைய இந்த எண்ணத்துக்குத் தடையா சொல்லப் போகிறான்? குற்றாலம் பங்களா இருக்கவே செய்தது...வெயிலு மகிழ்வண்ணபுரத்தை மறந்து விட்டான் என்றே தோன்றியது. காந்திமதி அவனை மறக்கும்படி விட்டுவிடுவாளா? ஆள் மேல் ஆள் அனுப்பினாள். ஒன்றரை மாதங்களுக்குப் பிறகு வெயிலு வீடு திரும்பினான். கிருஷ்ணவேணியும் கூடவே வந்தாள். அவளை மாடியில் இருக்கும்படி உபசரித்து விட்டு, வெயிலு வீட்டுக்குள்ளே போனான்.

அவனைக் கண்டதுமே காந்திமதி 'லபோ லபோ' என்று கத்த ஆரம்பித்தாள். வெறிபிடித்தவள் போல் கூச்சலிட்டாள். மரியாதை பார்க்கவில்லை அவள். "நீரும் ஒரு மனுசன்னு வெள்ளையும் சுள்ளையுமா அலையிதேரே! தூ, வெட்கமில்லை? கூத்தாடித் தேவ்டியா கொடுக்கைப் புடிச்சுக்கிட்டு அலையித உமக்கு வீடு வாசல், வண்டி மாடு, பொண்டாட்டி எல்லாம் என்னத்துக்கு?" என்று ஆரம்பித்து, அவள் பாட்டுக்குப் பொரிந்து கொட்டினாள்.

"ஏய், அநாவசியமா வாயாடாதே..." என்று வெயிலு வாய் திறக்கவும், அவளுடைய வெறி அதிகமாயிற்று. மேலும் உரத்துக் கத்தினாள். திடீரென்று, "நீரு விளங்குவீரா? என் வயித்தெரிச்சலை கொட்டிக்கிட்டு நீரு வாழ்ந்திர முடியுமா? என்னை வயிறெரியப் பண்ணுகிற அந்தத் தேவ்டியாதான் நல்லாயிருப்பாளா?" என்று

கத்திக்கொண்டு, தன் நெஞ்சில் தானே மடார் மடாரென அறைந்தாள் காந்திமதி.

'இவளுக்குப் பைத்தியம்தான் புடிச்சிருக்கு!' என்று வெயிலு நினைத்தான். மரக்கட்டிலின் மீது அமர்ந்திருந்தவன் பார்வையில், அங்கே சன்னலில் சிறு விளக்கருகில் கிடந்த தீப்பெட்டி பட்டது. கந்தகத் தீப்பெட்டி. தீப்பெட்டியை எங்கே எப்போது பார்த்தாலும் வெயிலுகந்தநாதனுள் உறையும் சிறு பிள்ளைத்தனம் தலையெடுத்துவிடும். பெட்டியை எடுத்து, ஒவ்வொரு குச்சியாக வெளியே இழுத்து, தரையில் கீச்சி, அதில் தீ சீறிவெடிப்பதை வேடிக்கை பார்ப்பான். இப்போதும் அப்படித்தான் செய்தான். ஒவ்வொரு குச்சியும் கட்டில் மீது உரசப்பட்டதும், சர்ரெனச் சீறி நெருப்பு கிளம்பியது. கந்தக நெடி பரவியது. அது அவனுக்கு மேலும் மேலும் ரசிக்கப்பட வேண்டிய ஒரு தமாஷாக அமைந்தது. அதிலேயே லயித்து விட்டான் வெயிலு.

இவன் இடிச்சபுளி மாதிரி உட்கார்ந்திருந்தால் கூட காந்திமதி சகித்திருப்பாள். தன்னை அலட்சியப்படுத்தி விட்டு அவன் இப்படி ஒரு விளையாட்டில் மூழ்கிவிட்டால்? அவளுடைய ஆத்திரம் அதிகரித்தது. "நான் என்ன மனுஷியா, வேறே என்னவுமா? நான் சொல்லிக்கிட்டே இருக்கேன், நீரு கவனிக்காம என்னமோ பண்ணுதீரே!" என்று கூச்சலிட்டபடி, காந்திமதி அவனை நெருங்கினாள். அவன் கையிலிருந்த தீப்பெட்டியை தட்டி விட்டாள். அது அவள் காலடியில் விழுந்தது. அவள் அடங்காத கோபத்தோடு அந்தப் பெட்டியை ஓங்கி மிதித்தாள். ஆத்திரமாகக் காலால் அதைத் தேய்த்து நசுக்கினாள். தீப்பெட்டியில் குச்சிகள் நிறையவே இருந்தன. கந்தகக் குச்சிகள். தரையோடு தேய்த்து நசுக்கப்பட்டதும் சூடுற்று அவை குப்பெனப் பற்றிக் கொண்டன.

காளியாக மாறிக் கூத்தடித்த காந்திமதியின் சேலைத் தலைப்பு கீழே தொங்கிப் புரண்டு கொண்டிருந்தது. குச்சிகளில் வெடித்தெழுந்த தீ சேலையை நக்கி வலுப்பெற்றுச் சிரித்தது. வேகமாக எவ்வியது.

எரியும் தீ தனக்கெனத் தனி விளையாட்டை ஆடிக் களிப்பதையே பார்த்துக் கொண்டிருந்தான் வெயிலு.

# ஏழு

மாடியில் இருந்த கிருஷ்ணவேணியின் காதுகளில் காந்திமதியின் கூப்பாடு மிகவும் தெளிவாகக் கேட்டது. அவள்தான் காட்டுக்கத்தல் கத்திக்கொண்டிருந்தாளே! மனைவி என்கிற உரிமையோடு 'அந்தப் பொம்பிள்ளை' ஒரு நாடகமே ஆடிக் கொண்டிருப்பதாக மிஸ் கிருஷ்ணவேணிக்குப் பட்டது. திடீரென்று அலறலின் தொனி மாறியதை அவள் உணர்ந்தாள். பீதியினால், செய்யும் வகை அறியாது, அலறுகிற அவலக் கூச்சலாக ஒலித்தது காந்திமதியின் குரல். என்னவோ ஏதோ என்று பதறியடித்து கீழே ஓடிவந்தாள் கிருஷ்ணவேணி. துணிபற்றி எரியும் நாற்றம் வேறு வந்தது. அவள் வேகமாக வீட்டுக்குள்ளே ஓடினாள்.

உடுத்திய சேலையில் தீ தாவித்தாவிப் படர, காந்திமதி பயந்து கதறியவாறே அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தாள். அதனால் தீயின் வேகம் எவ்வியது. அவளை வியப்போடு பார்த்துக் கொண்டிருந்த வெயிலுவைக் கண்டதும் கிருஷ்ணவேணி ஆத்திரம் கொண்டாள். "என்ன இது? இவளைக் காப்பாத்தாமே இப்படி உட்கார்ந்திருந்தா என்ன அர்த்தம்? தீ எப்படிப் புடிச்சுது?" என்று கேள்விகளை அடுக்கிக்கொண்டு, அவற்றுக்குரிய பதிலை எதிர்பார்க்காமலே, அவள் பரபரத்தாள்.

பக்கத்து அறையில் சுவர் ஓரமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த நெல்லு மூட்டைகள் மீது கிடந்த காலிக் கோணிப்பைகள் அவள் பார்வையில் பட்டன. அவள் வேகமாகப் பாய்ந்து அவற்றில் இரண்டை எடுத்து வந்து, காந்திமதிமீது போர்த்தி, அவளை கீழே படுக்கவைத்து உருட்டினாள். இதற்குள் காந்திமதியின் ஓலத்தால் ஈர்க்கப்பெற்று, எதிர்த்த வீட்டிலிருந்து சிலர் ஓடி வந்திருந்தார்கள். வண்டிக்காரன் வீட்டில் இல்லை. எல்லோரும் செய்த உதவியினால் தீ அணைந்து போயிற்று. காந்திமதியின் உடம்பில் நெருப்பு பல இடங்களைச் சுட்டிருந்தது. நோஞ்சானான அவள் இப்போது மூர்ச்சை அடைந்து விட்டாள். மகிழ்வண்ண புரத்தில் ஆபத்து அவசரத்துக்கு உதவக்கூடிய ஒரு வைத்தியர் இருந்தார். அவர் வரவழைக்கப்பட்டார். அவர் வந்து தன்னாலான சிகிச்சைகளை செய்துவிட்டு, "அம்மாவை டவுன் ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போறதுதான் நல்லது" என்று அறிவித்தார்.

வெயிலுவின் குதிரை வண்டி தயாராயிற்று. காந்திமதியை அதில் படுக்கவைத்து, கிருஷ்ணவேணியும் அருகமர்ந்தபடி, டவுணுக்கு எடுத்துச் சென்றார்கள். வெயிலுகந்தநாதன் ராலி சைக்கிளில் வேகமாய்ப் போனான். என்ன செய்தும் காந்திமதி பிழைக்கவில்லை. மூன்று நாட்களுக்குப் பிறகு அவள் உடல் ஒத்தை வீட்டுக்கு எடுத்துவரப்பட்டது. அங்கிருந்து 'பிரேதம்' மிகுந்த தடபுடலோடு சுடுகாட்டுக்குக் கொண்டு போகப்பட்டது.

வெயிலு பதினாறு நாள் இழவை அமர்க்களமாகக் கொண்டாடினான். கிருஷ்ணவேணியும் அந்த வீட்டிலேயேதான் இருந்தாள். இழவு விசாரிக்க வந்துபோன ஊர்க்காரர்களும் உறவுமுறையினரும் உதிர்த்த பேச்சுக்களை அவனோ அவளோ பெரிதுபடுத்தவில்லை. "காந்திமதி போனது இவங்களுக்கு நல்லதாப் போச்சு. இந்த நாடகக்காரியே ஒத்த வீட்டின் சொந்தக்காரி ஆகிவிடுவா. அவளை அவன் கல்யாணம் பண்ணினாலும் பண்ணிக்கிடுவான்" என்று பலரும் சொன்னார்கள். இந்த ரகமான பேச்சுக்கள் அவ்விருவர் காதுகளிலும் விழத்தான் செய்தன.

காந்திமதியின் கருமாதி விசேஷம் எல்லாம் முடிந்த மறுநாள். கிருஷ்ணவேணி பொலிவிழந்து காணப்பட்டாள். அவள் முகத்திலே சதா விளையாடிக் கொண்டிருக்கக் கூடிய சிரிப்பைக் காணோம்.

"என்ன கிருஷ்ணா, ஒரு மாதிரி இருக்கியே? என்ன விஷயம்?" என்று வெயிலு கேட்டான்.

அவள் அவன் முகத்தை கூர்ந்து நோக்கினாள். "நீங்கதான் அவளுக்குத் தீ வச்சேளா?" என்று கேட்டாள்.

"சேச்சே! அவ தனக்குத்தானே கொள்ளி வச்சுக்கிட்டா!" என்று வறண்ட குரலில் வெயிலு சொன்னான். லேசாகச் சிரித்தான். "தீ எப்படி புடிச்சுதுன்னு நான்தான் அன்னைக்கே சொன்னேனே!"

"நீங்க ஏன் அணைக்கலே? ஏன் வேடிக்கை பார்த்துக்கிட்டு இருந்தீங்க? அவ தொலையட்டும்கிற கெட்ட நெனைப்புதானே காரணம்?"

அவள் இப்படி எல்லாம் ஏன் குறுக்கு விசாரணை

பண்ணுகிறாள் என்று திகைத்தான். “உனக்கு இன்னிக்கு என்ன வந்துது கிருஷ்ணா? ஏன் இப்படி....?”

அவள் எதையோ மோப்பம் பிடிப்பது போல், மூக்கைச் சுளித்து, ‘ஹூம்ப்...ஹூம்ப்’ என்று சுவாசித்தாள். “உங்களுக்குத் தெரியுதா? துணி கருகி எரிகிற வாசம்? சதை தீய்கிற நாத்தம்?” என்று கேட்டாள். “அவ வந்திருக்கா. நேற்று ராத்திரி வந்தா. அவரு என்னை கொன்னு போட்டாரு. உன்னாலேதான். பாதகத்தி நீ எனக்கு எமனா வந்து சேர்ந்தேயின்னு சொன்னா. சீலை பத்தி எரிய, தீயிலே குளிச்சுக்கிட்டு, அவ என்னைப் பார்த்த பார்வை.... அடியம்மா, இப்போ நினைச்சாலும் பயமாயிருக்கு...” அவள் தேகம் பயத்தால் நடுங்குவதுபோல் குலுங்கியது. அவள் ஒரு திக்கையே வெறித்துப் பார்த்தாள்.

“கிருஷ்ணா, கிருஷ்ணா! இங்கே பாரு.. அங்கே என்னத்தை அப்படிப் பார்க்கிறே?” என்று அவளைப் பிடித்து உலுக்கினான் வெயிலு.

“அவ வந்து நிக்கிறா.... தீப்புடிச்சு எரியிற நாத்தம் தெரியலே?”

“அதுல்லாம் ஒண்ணுமில்லே, கிருஷ்ணா. உன் நெனைப்பு தான். காந்தி தீப்பத்தி அலறிக்கிட்டு நின்னதை நீ பார்த்ததேயில்லே. அது உன் மனசுக்குள்ளேயே பதிஞ்சிருக்கு. அந்த நெனைப்பிலே...”

அவள் குறுக்கிட்டாள்: “அவ பேயா வந்திருக்கா. இந்த வீட்டைச் சுத்திச் சுத்தி வாறா...” இவளிடம் பேசிப் பிரயோசன மில்லை என்று வெயிலு சும்மா இருந்து விட்டான்.

ஆனாலும், கிருஷ்ணவேணி சும்மா இருக்கவில்லை. சில நாட்கள் குறுகுறு என்று உட்கார்ந்து விடுவாள்.

‘இந்த வீட்டிலே ஏதோ கோளாறு இருக்கு. முன்னாலே சூடிக்கு ஒரு மாதிரி வந்துக்கிட்டிருந்துது. அப்புறம் காந்திமதி வெறிபுடிச்சுக் கத்திக்கிட்டு அமைதியை குலைச்சா. இப்போ இவளுக்கும் ஏதோ சனியன் புடிச்சிட்டுது. இந்த வீட்டுக்கும் பொம்பிளைகளுக்கும் ராசி இல்லே போலிருக்கு!’ என வெயிலுகந்தநாதன் எண்ணலானான்.

கிருஷ்ணவேணியின் மனக்குரங்கு எப்படி எப்படியோ தாவிக்

கொண்டிருந்தது. "எனக்கு இந்த வீட்டிலே இருக்கவே பிடிக்கலே. இங்கேயே இருந்தா எனக்குப் பைத்தியம் புடிச்சிரும்னு தோணுது" என்று அடிக்கடி புழுபுழுத்தாள்.

"குத்தாலம் பங்களாவுக்குப் போயிருவோமா?" என்று கேட்டான் வெயிலு. "திரும்பவும் டிராமாவுக்கு அரேஞ் பண்ணுவோமா?" என்றான். தன் மனசை தானே புரிந்து கொள்ள முடியாதவளாய் அவள் குழம்பித் தவித்தாள்.

ஒருநாள், "நாளைக்கு அமாவாசை நாளைக்கு அமாவாசை" என்று அவள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"அமாவாசைன்னா நமக்கென்ன!" என்று அலட்சியமாகச் சொன்னான் வெயிலு.

"பேய்களுக்கு கொண்டாட்டமான நாளு!" என்று முணுமுணுத்தாள் அவள்.

"கிருஷ்ணா, இந்தா பாரு. எல்லாத்துக்கும் மனசுதான் காரணம். குரங்கை நினைச்சுக்கிட்டு மருந்தைத் தின்னாதேயின்னு ஒரு வைத்தியன் எச்சரித்தானாம். அதுவே தப்பாய் போச்சு. அந்த நோயாளி மனசிலே குரங்கு நினைப்பே பதிஞ்சு போச்சு. மருந்தைத் தொட்ட போதெல்லாம் குரங்கு நினைப்பேதான் வந்துது. அதுனாலே அவனாலே மருந்தைச் சாப்பிடவே முடியலே. அது மாதிரித்தான் உன் மனசும் வேலை பண்ணுது. எப்ப பார்த்தாலும் நீ காந்திமதியையும் பேயையும் நினைச்சு நினைச்சே குழம்பிக் கிட்டிருக்கே. வேறே நல்ல விஷயங்களை நினை, கிருஷ்ணா!" என்று அவன் எவ்வளவோ சொன்னான்.

நள்ளிரவு. வெயிலு அசந்து தூங்கிக் கொண்டிருந்தான். திடீரென்று ஒரு பயங்கரமான கூச்சல் ஒலித்தது. யாரோ எவரோ கழுத்து நெரிக்கப்பட்டு, வேதனையால் அலற முடியாமல் அலறுகிற மாதிரி. நீண்ட நேரம் அது ஒலித்திருக்க வேண்டும். அவன் பிரக்ஞை உலுக்கப்படுவதற்கு சிறிது நேரம் பிடித்தது. அவன் திடுக்கிட்டு விழித்தான்.

அச்சமூட்டும் கூக்குரல். மனிதக் குரல்வளையிலிருந்து எழுந்த போதிலும், தெளிவில்லாமல், ஏதோ ஒரு மிருகத்தின் அவலக் கூச்சல் போலவும் மனிதனது துயர ஓலம் போலவும், அது தொனித்தது. அவன் உடல் நடுங்கியது. உள்ளத்தில் பதை

பதைப்பு. "யாரது?....ஏய் கிருஷ்ணா..கிருஷ்ணா" என்று கத்தினான்.

எழுந்து உட்கார்ந்து, தலையணை அருகிலிருந்த பாட்டரி லைட்டை எடுத்து, ஒளி உண்டாக்கினான். கிருஷ்ணவேணி படுக்கையில் உருண்டு வளைந்து நெளிந்தபடி அலறிக்கொண்டு கிடந்தாள். 'சனியன்! என்னமாக் கத்துது, பேய் மாதிரி!' என்று அவன் மனம் பேசியது.

பேய் என்றதும் அவள் சொன்னதெல்லாம் நினைவு வந்தது. அவன் அவளை வேகமாக உலுக்கினான். "எந்திரி...கிருஷ்ணா... முழிச்சுக்கோ... எந்திரி கிருஷ்ணா" என்று மந்திரம் உச்சரிப்பது போல் சொல்லிக் கொண்டேயிருந்தான்.

ஒரு மட்டும், கிருஷ்ணவேணி விழிப்படைந்தாள். எழுந்து உட்கார்ந்தாள். மிரள மிரள நோக்கினாள். அவன் "என்ன கிருஷ்ணா, ஏனிப்படிக் கத்தினே?" என்று கேட்டதற்குப் பதில் பேசாமல் குறுகுறுவென்று உட்கார்ந்திருந்தாள்.

"சொப்பனம் ஏதாவது கண்டியா?"

"உம்ம்" என்றாள். பிறகு "சொப்பனமாத்தான் இருக்கும்" என்று முனகினாள். அப்போது சுவர்க்கடியாரம் ஒரு மணி அடித்தது.

"இப்ப மணி என்ன, ஒண்ணா?"

அவன் பேட்டரி வெளிச்சத்தைக் கடியாரத்தின் மேல் திருப்பினான். மணி பன்னிரண்டரை. "பன்னிரண்டரையா? நடுச்சாமமா? அப்போ அது சொப்பனமா இருக்காது" என்றாள் அவள்.

"பின்னே என்னவாம்? பேயா?" அர்த்தம் பொதிந்த பார்வையை அவன் முகத்தில் நிறுத்தினாள் கிருஷ்ணா. 'நாசமாப் போச்சு போ!' என்றது வெயிலுவின் மனம்.

அவன் எழுந்து, அரிக்கன் லாந்தரை ஏற்றினான். "இன்னமே தூக்கமாவது மண்ணாவது! சிவராத்திரிதான்" என்றான்.

வெளிச்சம் அவளுக்கு நல்ல விழிப்பு தந்தது. விழிப்பு மெது மெதுவாக தைரியம் அளித்தது. அவள் நெடுமூச்சுயிர்த்து, நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"சீ! இப்படியும் உண்டுமா? நல்லாப் பயந்தேன் போ. ஆனா,

நெசமாலும் நடந்த மாதிரி அல்லா இருந்தது. அவ கண்ணும், வெறிச் சிரிப்பும்.... என்னை வாழவிடாமப் பண்ணுனியே, நான் உன்னை வாழ விட்டிருவேனா? விடுவேனான்னு கத்திக்கிட்டு அவ நகங்கள் வளர்ந்த விரல்களாலே என்ன பிராண்டுனா. அவ நகம் பட்ட இடமெல்லாம் தீயாக் காந்துது. உடனே அங்கே அங்கே குப்குப்னு தீ கிளம்புது. என் மேலு, கையி, கழுத்தெல்லாம் தீ. அவ விரல்கள் தீ நாக்குகளா ஜொலிக்குது. என் கழுத்தைப் புடிச்சு நெரிக்கிறா. நான் கத்த முடியாமக் கத்துறேன்...சீ, என்ன மோசமான சொப்பனம் அம்மா!"

வெயிலுக்கு அழவேண்டும் போலிருந்தது. 'எப்படி இருந்தவள்! எவ்வளவு சந்தோஷமா, கலகலப்பா, இருந்தவ! இந்த வீட்டுக்கு வந்து இப்படி ஆயிட்டாளே!' என்று அவன் உள்ளம் புலம்பியது.

மறுநாள் கிருஷ்ணவேணி ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள். "இனிமே என்னாலே இந்த வீட்டிலே இருக்க முடியாது. இந்த வீட்டிலே மட்டுமில்லே; உங்க கூட நான் இருக்கிறதும் நல்ல தில்லே. எனக்குப் பைத்தியம் புடிச்சிரும். இத்தனை நாள் சந்தோஷமா இருந்தோம். நமக்குக் கொடுத்து வச்சது அவ்வளவு தான். நான் உங்களை பிரிஞ்சு போறதுன்னு முடிவு பண்ணிட்டேன்" என்றாள்.

வெயிலுக்கு இது ஒரு அதிர்ச்சிதான். "இந்த வீட்டை உன் பேருக்கு எழுதி வைக்கலாம்னு எண்ணியிருந்தேன். நீ இந்த வீட்டிலேயே இருப்பேன்னு..."

அவள் சிரித்தாள். அது விகாரமாக ஒலித்தது. "இந்த வீடா? எனக்கா? நான் இந்த வீட்டிலா?... பேய் புடிச்ச வீட்டிலா?...."

அவள் சிரிப்பும் பேச்சும் அவனுக்குப் பிடிக்கவில்லை. உடனடியாக அவள் வெளியேறினால் போதும் என்று தோன்றியது அவனுக்கு. வெயிலுகந்தநாதன் கிருஷ்ணவேணிக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்தான். "எங்கே போகப் போறே? இனி என்ன செய்யப் போறே?" என்றும் கேட்டான். "நாடகமே உலகம்! நாளை நடப்பதை யார் அறிவார்? இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதிவிட்ட சிவனும் செத்துவிட்டானோ!" என்று நாடக வசனம் பேசினாள் கிருஷ்ணவேணி.

## எட்டு

வானம் இர்ருண்டு வருது
மேகம் திர்ரண்டு வருது!
வெள்ளம் புர்ரண்டு வருது
பொண்ணு மிர்ரண்டு ஓடுது!

இப்படி ஒரு பாட்டு ஒத்தை வீட்டிலிருந்து சத்தமாக ஒலிக்கலாயிற்று. அடிக்கடி ஓலமாக எழுந்தது. வேளை கெட்ட வேளைகளில் எல்லாம் கரகரத்து ஒலித்தது. இது கேட்கத் தொடங்கியதுமே; "சரி, வெயிலு மூக்கு முட்டக் குடிச்சிட்டான்!" என்று ஊர்க்காரர்கள் புரிந்து கொள்வார்கள்.

கால ஓட்டம் வெயிலுவின் வாழ்க்கையிலும் அநேக மாறுதல்களை சேர்ப்பித்தது. கிருஷ்ணவேணி அவனை விட்டுப் பிரிந்து போனதிலிருந்து அவன் 'ஆளே மாறிப்போனான்' என்பது அனைவருக்கும் புலனாயிற்று. மனைவி காந்திமதி இறந்துவிட்டது கூட அவனை அவ்வளவுக்கு பாதித்ததில்லை. 'கிருஷ்ணா இப்படி, போவான்னு நான் நினைக்கவேயில்லையே! நான்தான் காந்தியின் சாவுக்குக் காரணம்னு அவ எண்ணிப்போட்டா. அதனாலே என் கூட இருக்கிறதுக்கே அவளுக்கு விருப்பமில்லை' என்று வெயிலு திரும்பத் திரும்ப எண்ணிக் குமைந்தான். அதனால் அவனுக்கு 'மனசே சரியில்லாமப் போயிட்டுது' என்கிற கோளாறு பிடித்தது! ஒரு மாறுதலுக்காக அவன் குடிக்க ஆரம்பித்தான்.

ஊரின் மற்றொரு மூலையில் இருந்தது '1-ம் நிர் சாராயக் கடை'. அதிலிருந்து 'மருந்து' வாங்கி வருவதற்கென்று ஒரு ஆளை நியமித்தான். அவனே சமையல்காரனாகவும் செயல்பட்டான். சாராயத்துக்குப் 'பக்கமேளமாக' கரம் மசாலா சேர்த்த மொச்சைக் கொட்டை சுண்டல் தயாரிப்பதில் அவன் தேர்ந்த நிபுணனாக விளங்கினான். மெதுமெதுவாக இந்தக் குடிக்கு தனிச்சுவையும் அதிகமான விறுவிறுப்பும் அளிக்கக் கூடியவை மாமிச பதார்த்தங்கள்தான் என்று கூறி, ருசிகரமாகத் தயாரித்துக் கொடுத்து, வெயிலுக்கு அந்த ரக உணவு வகைகளில் ஈடுபாடு பிறக்கும்படி செய்தான். சுத்த சைவர்கள் வாழ்ந்த மகிழ்வண்ணபுரத்தில், ஒத்தை வீட்டில்தான் முதன்முதலாக

மாமிச உணவு வகைகள் பக்குவம் செய்யப்பட்டன என்று சொல்லலாம். இதர வீட்டுக்காரர்களில் சிலசில பேருக்கு அசைவ உணவில் ஆசை ஏற்பட்டால், மூச்சுக் காட்டாமல் டவுனுக்குப் போய் முஸ்லீம் ஓட்டல்களில் ஒரு கை பார்த்துவிட்டு (அல்லது, அவர்கள் பாஷையில் 'ஒரு வெட்டு வெட்டிவிட்டு'), வெற்றிலை போட்டுக் குதப்பிக் கொண்டு ஊர் திரும்பி விடுவார்கள்.

படிக்கப் போகிற பிள்ளையாண்டான்களும் என்றைக்காவது ஒருநாள் ஜாலி பண்ணுவது உண்டுதான். 'சுல்தானியா ஓட்டலில்' ஒரு பிடி பிடிப்பதும், சிகரெட் புகைப்பதும்தான் 'அவர்கள் நோக்கின்படி ஜாலி' ஆகும். இந்தச் சூழ்நிலையில் துணிச்சலாகச் செயல் புரிந்தவன் வெயிலுதான். தனக்கு வேண்டியதை அவன் தன் வீட்டிலேயே தயாரித்துக் கொண்டான். அடுத்த தாவுதல் ஆக, வெவ்வேறு பெண்கள் அந்த வீட்டுக்கு வந்து போகும் வழக்கத்தை அவன் ஏற்படுத்தினான். எத்தனையோ பேர் வந்தார்கள்; போனார்கள், ஒரு இரவுக்காக; தொடர்ந்து சில இரவுகளுக்கென்று. சில நாட்கள் வீட்டிலேயே தங்கிப் போனவர்கள்..... சில வாரங்கள் இருந்தவர்கள்..... இப்படி எத்தனையோ ரகங்கள்.

எவளும் அவனுக்கு பூரண திருப்தி அளிக்கவில்லை. கிருஷ்ணாவின் பிரிவு ஈடு செய்ய முடியாத இழப்பாகவே அவனை துயரப்படுத்திக் கொண்டிருந்தது, அவன் அதிகம் அதிகமாகக் குடிக்கலானான். 'வானம் இருண்டு வருது' பாட்டை ரசித்துப் பாடிக் கொண்டே இருந்தான்.

கிருஷ்ணவேணி மதுரையில் 'உணவு விடுதி' வைத்து நடத்துகிறாள்; வெற்றிகரமாக வியாபாரம் நடைபெறுகிறது என்ற செய்தி ஒரு நாள் அவனுக்குக் கிடைத்தது. உடனே மதுரைக்குக் கிளம்பிவிட்டான் வெயிலு. மதுரையில் கிருஷ்ணவேணியை அவன் சந்தித்தான். அவள் சந்தோஷமாக இருந்தாள்— அவனை வரவேற்று நன்கு உபசரித்தாள்.

"உனக்கு எதுக்கு இந்தப் பிழைப்பு, கிருஷ்ணா?. என்னோடு வந்துவிடு. வீட்டில் எஜமானியாக இரு!" என்று அவன் அவளிடம் சொன்னான்.

"அதெல்லாம் முடிஞ்சு போன கதை. அது திரும்பி வராது.

நீங்களும் புதுக்கணக்கு போட்டுக்கிட வேண்டியதுதான். உங்க இனத்திலேயே நல்ல இடமாப் பார்த்து, ஏழை எளியதா யிருந்தாலும் குணமுள்ள நல்ல பெண்ணாப் பார்த்து, கல்யாணம் பண்ணிக்கிடுங்க. உங்க குலம் விளங்குறதுக்கு உங்களுக்கு பிள்ளை குட்டிக வேணுமில்லா? சீக்கிரமா ஒரு கல்யாணத்தைப் பண்ணுங்க. அப்பதான் நீங்க நல்லபடியா வாழமுடியும்" என்று அவள் உபதேசம் புரிந்தாள்.

வெயிலு உரக்கச் சிரித்தான். "உபதேசம் பண்றியா உபதேசம்!" என்று வார்த்தைகளைக் கடித்துத் துப்புவதுபோல் உச்சரித்துவிட்டு, திரும்பிப் பாராமலே நடந்தான்.

ஊருக்குத் திரும்பி வரும்போதே, 'ஃபுல் லோடிலே' தான் வந்தான்.

"ஏய்-மேகம் திர்ரண்டு வர்ருது!
வெள்ளம் புர்ரண்டு வர்ருது!
உலகம் உர்ருண்டு வர்ருது!
எஹ்ஹெஹே..உருண்டு வருது!"

என்று கத்திக்கொண்டு தட்டுத் தடுமாறி நடந்தான். வீட்டுக்குள் போய் மீண்டும் குடித்தான். குடித்துக் கொண்டேயிருந்தான்.

வெயிலுகந்தநாதன் படுத்த படுக்கையானான். சாராயத்தையே மருந்து-மருந்து என்று குடித்தான். தன்னைத்தானே அழித்துக்கொள்ள ஆசைப்படுவது போல் அவன் செயல் புரிந்தான். அதில் அவன் வெற்றியும் பெற்றான்.

## ஒன்பது

மகிழ்வண்ணபுரத்தில் ஒதுங்கியிருந்த 'ஒத்தை வீடு' சில வருடங்களாய்ப் பூட்டியே கிடந்தது. அதில் வசிப்பதற்கு யாரும் இல்லை என்பது போக, அந்தப் பெரிய வீட்டில் பேய் இருக்கிறது என்ற பேச்சுப் பரவியதும் அதற்கு ஒரு காரணம் ஆகும்.

திட்டமிட்டுச் செய்யப்படுகிற சில காரியங்கள் உரிய முறையில் பலன் தராமல்-எதற்காக எப்படி அவை பயன்பட வேண்டுமோ அப்படிப் பயன்படாமல்-துவக்கி வைத்தவரின்

நோக்கம் சிதைவுற்ற தன்மையில் மாறிவிடுவதும் உண்டு என்று சுட்டுவது போல வெறுமையாய் காட்சி தந்து நின்றது அந்த வீடு. ஆசையோடு வீடு கட்டிய பிறவிப்பெருமாள் பிள்ளை அதில் நீண்ட காலம் வாழ்ந்துவிடவில்லை. அவர்தான் ஆண்டு அனுபவிக்காமல் போய்விட்டார் என்றால், தன் மக்களும் 'வழி வழிவாரு வம்மிச விருத்தியா' வாழ்ந்த அந்த வீட்டில் வளம் கொழித்துச் செழிக்க வேண்டும் என்று அவர் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாரே, அதுவும் பொய்த்துவிட்டதே!

சின்னவயசிலிருந்து நாற்பத்திரண்டு வயது வரை, ஒரு முப்பத்தைந்து வருட காலம், 'பெரிய பிள்ளை'யின் மகன் வெயிலுகந்தநாதன் அந்த வீட்டில் வசித்தான். எப்படி எப்படி எல்லாமோ வாழ்ந்து மடிந்தான். அவனோடு அந்தக் குடும்பத்தின் கதை முடிந்துவிட்டது. அக்குடும்பத்தின் கொழுந்துகளில் ஒன்றான சூடிக்கொடுத்த நாச்சியார் உயிரோடு இருந்தாளா, செத்து ஒழிந்தாளா என்பது அந்த ஊர்காரர்களுக்குத் தெரியாது. வீட்டைவிட்டு ஓடிப்போனவள் பற்றி எந்தவிதமான செய்தியும் வராததால், அவள் செத்துப் போயிருப்பாள் என்று எல்லோருமே முடிவு கட்டிவிட்டார்கள்.

அது அப்படித்தான் இருக்க வேண்டும். அவள் உயிரோடு இருந்திருப்பின், அந்தக் குடும்பத்தில் மற்ற அனைவரும் இறந்து விட்டார்கள் என்ற செய்தியை எப்படியாவது கேள்விப்பட்டு, பெரிய வீட்டையும் எஞ்சியிருக்கக் கூடிய சொத்தையும் அனுபவிப்பதற்காக உரிமை கோரி வந்திருப்பாளே. வருடங்கள் ஓடின. அவள் வரவேயில்லை. ஆகவே, 'திரும்பி வராத இடத்துக்கே சூடியும் போய்விட்டாள் என்பதில் சந்தேகமேயில்லை' என்று சொந்தக்காரர்கள் உறுதியாய் சொன்னார்கள்.

சொத்து என்று அதிகமாக எதுவும் இருக்காது. நாடகம் நடத்துகிறேன் என்று சொல்லி, வெயிலு முக்கால் வாசியை நாசமாக்கி விட்டான். அப்புறமும் அடிக்கடி வயல்களை விற்று இஷ்டம்போல் தாறுமாறாகச் செலவு பண்ணினான். கொஞ்சம் நிலம் மிஞ்சியிருக்கக் கூடும். வீடும் இருக்கிறது. உறவினர் கணிப்பு இது.

இவற்றை யார் அடைவது என்ற தகராறு தலைதூக்கியது. வெயிலுவின் பெரியப்பா மகனும் மகள்களும் 'எங்களுக்கு-

எங்களுக்கு!' என்றார்கள். சித்தப்பாவுக்கு ஒரே மகன். அவனுக்குப் பல பிள்ளைகள். சித்தப்பா மகன் "எனக்கு! எனக்குச் சேரவேண்டும்!" என்று உரிமைக்குரல் எழுப்பினான். ஊர் பெரியவர்கள் சமரசம் பண்ண முன்வந்தார்கள். சம்பந்தப் பட்டவர்களுக்குள் சமரசம் ஏற்படுவதாயில்லை. சித்தப்பா மகன் சிவகுருநாதன் கோர்ட்டில் வழக்கு தொடர்ந்தான். 'கேஸ்' நடந்து கொண்டிருந்தது. அந்த வீடு பாழடைந்ததுபோல் தோற்றம் காட்டி மூடியே கிடந்தது.

## பத்து

வெயிலு காலத்தில் சர்வ சாதாரணமாக இருந்து வந்த கந்தகத் தீக்குச்சிகள்-'லூஸிபர் மேச்சஸ்'-இல்லாமலே போயின. அவற்றினால் ஆபத்துக்கள் அடிக்கடியும் அதிகமாகவும் நிகழ்ந்து கொண்டிருந்தன என்பதால், தீமை பயக்காத 'ஸேப்டி மேச்சஸ்' வந்தன.

குத்துவிளக்குகளும் அரிக்கன் லாந்தர்களும் கூடப் பின்னுக்குத் தள்ளுண்டன. தெருக்களில் கல் கம்பங்கள் மீது ஏற்றி வைக்கப்பட்ட லாந்தர்களும், முக்கிய இடங்களில் கம்பங்களில் தொங்கிப் பிரகாச ஒளி சிதறிய கியாஸ் லைட்டுகளும் மறைந்து போயின. எலெக்ட்ரிக் விளக்குகள் வந்து சேர்ந்தன.

ஊமத்தம்பூப் போன்ற பெரிய குழாயைக் கொண்டிருந்த கிராமபோன் பெட்டிகள் நாகரிகமற்றனவாகி, குழாயில்லாத சதுரப்பெட்டிகள் இடம் பெற்றுக் கொண்டிருந்தன.

கிராப்புத் தலைகள் சர்வசகஜமாக எங்கும் தென்பட்டன.

மகிழ்வண்ணபுரமும் கால ஓட்டத்தில் ஏற்பட்ட சுழிப்புகளை பிரதிபலிக்காமலில்லை. எனினும், ஊரிலும் ஊரார் வாழ்க்கை முறையிலும் பிரமாதமான மாற்றங்கள் ஏற்பட்டதாகத் தோன்ற வில்லை. ஊராரின் வாழ்க்கை நியதிகள் எப்போதும் போல் மந்தகதியிலேயே அமைந்து கிடந்தன. நாட்டு நடப்புகள் அவர்களின் வாழ்வைப் பெரிதும் பாதித்துவிடவில்லை. சாதாரணர்களின்-சராசரிகளின்-போக்குகளும் வாழ்க்கை நியதிகளும் எவ்விதத் தாக்கங்களினாலும் தீவிர மாறுதல்களைப்

பெற்று விடுவதில்லை. சில வருட காலம், பாழ்பட்ட தோற்றம் கொண்டு, பூட்டியே கிடந்த 'ஒத்தை வீடு' மீண்டும் உயிர் பெற்றிருந்தது.

கோர்ட்டு வழக்கு இழுத்துக் கொண்டே போன நிலையில்-அதிகமாகப் பணம் செலவானதால்-சம்பந்தப்பட்டவர்கள் விழிப்படைந்தார்கள். முக்கியஸ்தர்களைக் கூட்டி, தங்களுக்குள் பேசி, விவாதித்து, சண்டை போட்டும் கூச்சலிட்டும், ஒரு மாதிரியான சமரசத்துக்கு வந்தார்கள். வெயிலுவின் வீட்டையும் சொத்துக்களையும் அவனுடைய பெரியப்பா பிள்ளைகளும் சித்தப்பா பிள்ளையும் சரிசமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டியது. எல்லாவற்றுக்கும் முறைப்படி ரூபாய் மதிப்பு நிர்ணயித்து, பங்கீடு செய்து, சமமாகப் பிரித்துக் கொள்வது. நிலம் அல்லது வீட்டின் பகுதி தேவைப்படாதவர்கள், அவர்கள் பங்குக்கு உரிய தொகையைப் பெற்றுக் கொள்வது. தேவைப்பட்டவர்கள்-வசதி உடையவர்கள்-அந்தப் பணத்தைக் கொடுத்து விட்டு உரிய பங்கை எடுத்துக் கொள்ளலாம். இந்த முடிவின்படி செயல்பட்டார்கள்.

வீட்டை இரண்டு பாகமாக்கி, பெரியப்பா மகன் ஒரு பாகத்தையும், சித்தப்பா மகன் இன்னொரு பாகத்தையும் எடுத்துக் கொள்ளலாம் என்றொரு யோசனை எழுந்தது. பெரியப்பா பிள்ளை தனக்கெனத் தனிவீடு வசதியாகக் கட்டிக் கொண்டு குடியிருப்பதால், இந்தப் பெரிய வீட்டில் ஒரு பகுதி தேவையில்லை என்று அபிப்பிராயப்பட்டார். சிவகுருநாதனுக்கு சொந்த வீடு இல்லை; விரும்பினால் அவனே முழு வீட்டையும் எடுத்துக் கொள்ளலாம் என்று அவர் தெரிவித்தார். சிவகுருநாதனும் அதற்கு இசைந்தான். நகைகளை விற்றுப் பணம் புரட்டி, பங்குத் தொகையைக் கொடுத்து விட்டு, பெரிய வீட்டை தனது உடைமை ஆக்கிக் கொண்டான்.

'ஒத்தை வீடு' மறுபடியும் கலகலப்பு அடைந்தது. பிள்ளைகள் பலர் இருந்தார்கள். தங்களுக்குள் அடிக்கடி சண்டை போட்டார்கள். கூச்சலிட்டுக் குதித்தார்கள். சிவகுருநாதன் வீட்டைச் சுற்றிலும் காய்கறித் தோட்டம் போட்டான். வீட்டுப் பக்கத்திலேயே வைக்கோல் படப்பை பெரிதாக அடைத்து வைத்தான். பிள்ளைகள் 'தட்டட்டி' (மொட்டைமாடி) மேலே ஏறி, 'கவுதச் சுவர்' மீது நின்று,

வைக்கோல் போரின் மேல் குதித்தார்கள். உயரத்திலிருந்து படப்பு மீது தொபுக்கடீர் என்று குதிப்பது ரொம்பவும் உற்சாகமான விளையாட்டாக அமைந்தது.

அவ்விதம் பையன்கள் குதித்து விளையாடிக் கொண்டிருந்த போது, ஒருவன் குறி தவறி, படப்பு மீது பாய்வதற்குப் பதில் விலகித் தரை மேலே வந்து விழுந்தான். பலத்த அடி. அவனால் எழுந்திருக்க இயலவில்லை. முதுகெலும்பில் அடிபட்டிருக்கும் என்று மற்றவர்கள் சொன்னார்கள். கையைத் தூக்கமுடியாமலும் மடக்க முடியாமலும் கஷ்டப்பட்டான் பையன். எலும்பு பிசகியிருக்கும் என்று சிலர் சொன்னார்கள்.

பையனை வண்டியில் போட்டுக் கொண்டு சிறுகுளம் சிவலிங்க நாடாரை தேடிப் போனார்கள். எலும்பு முறிவு முதலிய கோளாறுகளை கவனித்து, சரிபண்ணி, மட்டை வைத்துக் கட்டி சீர்படுத்துவதில் மிகுந்த கெட்டிக்காரர் என்று பெயர் எடுத்திருந்தார் அந்த நாடார்.

பையனை வண்டியில் போட்டு எடுத்துச் சென்றதும், ஊரில் பலரும் பலவிதமாகக் கருத்து தெரிவித்தார்கள். "இது ஆக்கங் கெட்ட வீடு. இங்கே இருக்க வாரவங்களை படாதபாடு படுத்தி விடும். ரொம்பவும் கொணக்கி முடக்கும். இதுவரை நடந்தது நமக்குத் தெரியாதா என்ன?" என்றார்கள்.

நாடார் பையனுக்கு வேண்டிய சிகிச்சை செய்து அனுப்பி வைத்தார். ஆறு ஏழு மாதங்களாச்சு பையன் சுகப்படுவதற்கு. செலவும், அலைச்சலும், மனக்கஷ்டமும் பெரியவர்களுக்கு. அதன் பாதிப்பு சிவகுருநாதன் பேச்சிலும் தெரியலாயிற்று. "இது ராசி இல்லாத வீடு...தரித்திரம் புடிச்ச வீடு. இங்கே வந்ததிலேயிருந்து நமக்கு கஷ்டத்துக்கு மேலே கஷ்டம்தான். பணநஷ்டம் வேறே. கடன் ஏறிக்கிட்டே போகுது" என்று அவன் புலம்பலானான். "எங்களுக்குத் தெரியும். அதனாலேதான் நாங்க அந்த வீட்டிலே வசிக்க விரும்பலே" என்று வெயிலுவின் பெரியப்பா மக்கள் இப்போது பெருமையாகப் பேசினார்கள்.

அந்த நாட்களில் ஜனங்கள் அதிகமாக போட்டோ எடுத்துக் கொள்ள ஆசைப்படவில்லை. போட்டோ பிடிக்கிற வசதிகளும் வாய்ப்புகளும் அக்காலத்தில் மிகவும் குறைவு என்பது இதற்குக்

காரணமில்லை. போட்டோ பிடித்துக் கொண்டால், ஆயுசு குறைந்து போய் விடும் என்று ஜனங்கள் நம்பினார்கள். படம் எடுத்துக் கொள்ள ஆசைப்பட்டவர்களைக் கூட அநேகர் இந்த எண்ணத்தைச் சொல்லி மிரட்டினார்கள்.

இருந்தபோதிலும், தங்களையும் தங்களுக்கு வேண்டியவர் களையும் போட்டோ எடுத்து, அந்தப் படங்களுக்குக் கண்ணாடியும் சட்டமுமிட்டு, சுவரில் மாட்டி வைக்கிற மோகம் கொஞ்சம் கொஞ்சமாக வேரூன்றி வளர்ந்தது. மகிழ்வண்ண புரத்திலும் அது சிவகுருநாதன் மூலம் தலைகாட்டியது. அவன் தன்னையும் தன் மனைவியையும் பெரிதாகப் படம் பிடித்து, ஒத்தை வீட்டின் முக்கிய அறையில் எடுப்பான இடத்திலே தொங்கவிட்டான்.

மனிதர்களைப் படம்பிடித்து மிஷின் மூலம் படங்களுக்கு உயிர் கொடுத்து திரையிலே ஆட வைக்கிற அதிசய வேலை 'பயாஸ்கோப்' என்ற பெயரில் சிலசில நகரங்களில் தோன்றியது. ஜனங்கள் இந்த அதிசயத்தைப் பார்ப்பதற்காக வண்டி கட்டிக் கொண்டு போனார்கள். கிராமங்களிலிருந்து ஜனங்களை ஈர்க்கும் சக்தி நகரங்களுக்கு அதிகரித்துக் கொண்டே போயிற்று. ஏதாவது காரணத்தைக் கூறி அநேகர் நகரங்களை நோக்கிப் போனார்கள்.

"நாமும் டவுணிலேயே ஒரு வீடு பார்த்துக் கொஞ்ச நாள் தங்கியிருக்கலாமே? புள்ளைகள் படிக்கிறதுக்கு வசதியாக இருக்கும்" என்று திருமதி சிவகுருநாதனான அன்னம்மாள் ஓயாது அரித்துக்கொண்டே இருந்தாள். பிள்ளைகளும் பிச்சுப் பிடுங்கினார்கள். சிவகுருநாதனுக்கும் சபலம் தட்டியது.

எனவே, ஒரு நல்ல நாள் பார்த்து, அந்தக் குடும்பம் டவுணுக்குக் குடியேறியது. டவுணில் அப்போது வீடுகள் வாடகைக்கு சுலபமாகக் கிடைத்தன; வாடகை குறைவாகவும் இருந்தது.

கிராமத்தில் சும்மா வீட்டைப் பெருக்கி மெழுகி, விளக்கேற்றி வைத்துக் கொண்டிருக்க யாராவது கிடைத்தால் போதும்; அவர்கள் வாடகை என்று ஏதாவது கொடுத்தால் அது லாபம்; வீட்டை வாடகைக்கு விட்டுத்தான் ஆகனும் என்ற கட்டாயம் எதுவும் இல்லை என்ற நிலை இருந்தது. கிராமம் என்ற நிலையிலிருந்து சிறிது உயர்ந்துள்ள, ஆயினும் ஒரு நகரத்தின் தன்மைகளைப்

பெற்றிராத, 'இரண்டும் கெட்டான்' ஊரான மகிழ்வண்ணபுரத்தில் வீடுகளில் வாடகை கொடுத்து ; குடியிருப்பதற்கு ஆட்கள் கிடைப்பது அரிதாக இருந்தது. அப்படியாப்பட்ட காலம் அது. என்றாலும், தெரிந்தவர்களிடமெல்லாம் சொல்லி வைத்தும், தானே தேடியும், முடிவாக ஒரு ஆளைக் கண்டுபிடித்தான் சிவகுருநாதன்.

நம்பகமான அந்தப் புள்ளிக்கு வீட்டை வாடகைக்கு விட்டு விட்டு சிவகுருநாதனும் டவுனுக்குப் போய்ச் சேர்ந்தான். நகரத்தில் ஒரு பலசரக்குக் கடை நடத்தும் திட்டத்தோடு.

## பதினொன்று

நாடு நெடுகிலும் பெரும் விழிப்பு ஏற்பட்டிருந்தது. சுதந்திர தாகம் மக்களை பலவிதமான செயல்களில் ஈடுபடுத்தியிருந்தது. அரசியல் பிரசாரக் கூட்டங்கள், ஜவுளிக்கடை மறியல்கள், கள்ளுக்கடை பகிஷ்கரிப்பு என்ற பரபரப்பான செயல்கள் எல்லா ஊர்களிலும் நிகழ்ந்து கொண்டிருந்தன. செயல்புரிய முடியாதவர்கள் தேசீயத் தலைவர்களின் படங்களை வாங்கித் தங்கள் வீட்டுச் சுவர்களில் தொங்கவிடுவதன் வாயிலாகத் தங்களுடைய நாட்டுப்பற்றைக் காட்ட முன் வந்தார்கள். மகாத்மா காந்தி, பண்டிட் மோதிலால் நேரு, மதன்மோகன் மாளவியா போன்ற தலைவர்களின் உருவப் படங்கள் மகிழ்வண்ணபுரத்தின் ஒத்தை வீட்டுச் சுவர்களில் இடம் பெற்றன. சட்டசபையில் வெடிகுண்டு வீசி நாட்டைக் குலுக்கி - அந்நிய ஆட்சியாளருக்கு அதிர்ச்சி தந்து-தூக்குமேடை ஏறிய வீரர்களான பகத்சிங், சுகதேவ், ராஜகுரு ஆகியோரின் படங்கள், விதம் விதமானவைகூட, அங்கு இடம் பெற்றன.

'பறி கொடுத்தோமே-பண்டித மோதிலால் நேருவைப் பறி கொடுத்தோமே!' என்ற பாட்டை ஓட்டல்களிலும் கடைகளிலும் உள்ள கிராமபோன்கள் மட்டுமின்றி, ஒத்தை வீட்டிலிருந்த கிராம போனும் அடிக்கடி ஓலமிட்டது. இரவு பத்து மணிக்குக்கூட அழுவதை வழக்கமாகக் கொண்டுவிட்டது அந்த வீட்டின் இசைப்பெட்டி.

அந்த வீட்டில் குடியிருந்த மாணிக்கம் தினசரிப் பத்திரிகைகள், வாரப் பத்திரிகைகள் வாங்கிப் படித்தார். பத்திரிகைகளைப் பார்க்கவும் வம்பளக்கவும் பலபேர் கூடினார்கள் அங்கே. சும்மா கூடுகிறவர்கள் 'சுதந்திர சங்கம்' என்று தங்கள் கூட்டத்துக்குப் பெயரை சூட்டிக் கொண்டார்கள். வீட்டின் முகப்பில் தேசீயக் கொடியை ஏற்றி வைத்தார்கள்.

மகிழ்வண்ணபுரத்துக்கு தேசீயப் பிரசாரம் பண்ண வந்த தொண்டர்களுக்கெல்லாம் 'சுதந்திர சங்கம்' வரவேற்பளித்தது. அவர்கள் இரவில் தங்குவதற்கு ஒத்தை வீடு இடம் தந்தது. அந்த வீட்டின் சுவர்களில் மாட்டப்பட்டிருந்த ரவிவர்மா சித்திரங்களை எல்லாம் கழற்றி ஒரு அறைக்குள் கொண்டு வைத்தார் அவர். தேசத் தலைவர்களின் படங்கள் பெரிது பெரிதாக, கடைகளுக்கு வந்திருந்தன. பாரத மாதா சித்திரமும் விலைக்குக் கிடைத்தது. அவற்றை எல்லாம் வாங்கி 'சுதந்திர சங்கம்' நிலைபெற்றுவிட்ட ஒத்தை வீட்டுச் சுவர்களில் மாட்டினார். தேசப்பற்றை தீவிரமாகப் பரப்புவதில் முன்னணியில் நின்ற 'சுதந்திர சங்கு' என்ற காலணாப் பத்திரிகையை வாங்கி வந்து, உற்சாகத்தோடு உரக்கக் கத்திப் படிப்பார் மாணிக்கம். தேசத் தலைவர்கள் சரிதம், விடுதலைப் போராட்ட நிகழ்ச்சி முதலியவற்றை விறுவிறுப்பான நடையில் சொல்லும் காலணாப் பிரசுரங்கள் அந்நாட்களில் செல்வாக்குடன் திகழ்ந்தன. அவற்றை விடாது வாங்கினார் மாணிக்கம். திரும்பத் திரும்ப மற்றவர்களுக்கும் படித்துக் காட்டினார்.

ஒருநாள் மாணிக்கம் டவுனுக்குப் போனார். ஊருக்குத் திரும்பி வரவில்லை. ஜவுளிக்கடை மறியலில் ஈடுபட்டு சட்ட விரோதமான பாட்டுக்களை தெருவில் பாடி கூட்டம் சேர்த்தார் என்று குற்றம் சாட்டப்பட்டு மாணிக்கம் கைது செய்யப்பட்டார் என்ற செய்தி கிடைத்தது.

## பனிரெண்டு

ஜாதிப் பெயர்களை பட்டம்போல் தங்கள் பெயர்களுக்குப் பின்னால் சேர்த்துக்கொள்கிற-எழுதுகிற-பழக்கம் அடியோடு மறைந்து போகாவிட்டாலும் குறைந்து வந்தது. சிலபேர் காலத்தின்

போக்கை அனுசரித்து ஜாதிப் பெயர்களை விட்டு விட்டார்கள். அவர்களில் சிவகுருநாதனும் ஒருவன்.

மாணிக்கம் மூன்று மாதம் கடுங்காவல் தண்டனை பெற்று பெல்லாரி ஜெயிலுக்குக் கொண்டு போகப்பட்டார் என்று தெரிந்ததும், சிவகுருநாதன் ஆத்திரம் அடைந்தார். "இந்தக் காலத்திலே யாரையும் நம்ப முடியறதில்லே. யாரு எந்தச் சமயத்திலே எப்படி இருப்பான், அல்லது எப்படி மாறுவான் என்றே ஊகிக்க முடிவதில்லை. மாணிக்கம் நல்லவனாக இருப்பான்னு நினைச்சுத்தான் அவன்கிட்டே வீட்டை ஒப்படைத்தேன். அவன் என்னமா மாறிட்டான் பார்த்தியா!" என்று நெஞ்சோடு கிளத்தி அலுத்துக் கொண்டார் அவர். அப்புறம் வீட்டை வந்து பார்த்ததும், அது இருந்த இருப்பைக் கண்டதும், "இதுக்குத்தான் வீட்டை வாடகைக்கே விடப்படாது என்கிறது. என்னதான் இருந்தாலும், வீட்டுக்காரன் மாதிரி, வாடகைக்கு இருக்கிறவங்க வீட்டைப் பேணவா செய்வாங்க?" என்றும் அவர் கூறிக் கொண்டார். ஆனால் வீட்டை வாடகைக்கு விடாமல் சும்மா பூட்டிப் போட்டு வைப்பதிலும் பிரயோசனமில்லை; அப்பவும் வீடு வம்பாத்தான் பாகும் என்று அவர் மனம் பேசியது. அவ்வளவு பெரிய வீட்டுக்கு புந்த ஊரில் வாடகை மாதம் பத்து ரூபாய்தான் கிடைத்தது. புதற்கு மேலே கொடுக்க எவரும் முன்வரவில்லை.

வேறு வழி இல்லை என்று அந்தப் பணத்துக்கே வீட்டை வாடகைக்கு விட்டார் அவர். பாண்டியன் பிள்ளை குடும்பம் ஒத்தை வீட்டில் குடி புகுந்தது. குடும்பத் தலைவர் பாண்டியன் பிள்ளை ஒரு அப்பாவி. ஆனால் அயராது உழைப்பார். எந்த வேலையையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வார். எவ்வளவு தூரமானாலும் நடந்தே போய்விடுவார்.

அவர் மனைவி பர்வதம் சரியான தாடகை 'பிராண்டு'. பெரிய வாயாடி. அவள் ஏச்சுக்கு எவரும் பயப்படத்தான் வேண்டும். தெருச்சண்டை, ஊர்ச்சண்டை என்று நாள்தோறும் ஏதாவது சண்டையில் புகுந்து வெற்றி வீராங்கனையாக வீடு திரும்புவாள். வெளிச்சண்டை கிடைக்காவிட்டால், வீட்டில் புருஷனோடு சமருக்கு நிற்பாள். அவர்களுக்கு நான்கு பெண்கள், ஒரு பையன். பையன் பலசரக்குக் கடையில் வேலைபார்த்தான். பெரியமகள்

கல்யாணமாகி, விதவையுமாகி, அம்மாவுக்கு ஒத்தாசையாகப் பிறந்த வீட்டோடு வந்துவிட்டாள். மற்ற மூன்று பேருக்கும் இனிமேல்தான் கல்யாணம் நடக்க வேண்டும். அந்தக் குடும்பம் எப்போதும் சுறுசுறுப்பாக இயங்கி வந்தது. மூன்று எருமை மாடுகள் நின்றன. பர்வதம் பால் வியாபாரம் பண்ணிவந்தாள். மோர், நெய் விற்பனையும் உண்டு. அந்த வீட்டில் ஆடுகள் வளர்ந்தன. கோழிகள் வளர்க்கப்பட்டன. கோழிகள் வீட்டுக்குள் நெடுகிலும் தாராளமாய் திரிந்து, எல்லா இடங்களையும் அசுத்தப்படுத்திக் கொண்டிருந்தன.

தோசைக்கு மாவு அரைக்க முடியாத வீட்டுக்காரர்களுக்காக காசு வாங்கிக்கொண்டு இந்த வீட்டில் மாவு ஆட்டிக் கொடுத்தார்கள். தோசைமாவு அரைக்கப்படாத சமயங்களிலும் ஆட்டுரலுக்கு வேலை இருந்தது. கழிவுத் தாள்களை தண்ணீரில் வெந்தயத்துடன் ஊற வைத்து, மறுநாள் ஆட்டுரலில் போட்டு அரை அரை என்று அரைத்துக் கூழாக்கி, கூடைகள் பெட்டிகள் கொட்டான்கள் என்று ஏதேனும் செய்து வைப்பார்கள். இதனால் எல்லாம் ஆட்டுரல் ரொம்ப தேஞ்சு போச்சு என்று சிவகுருநாதன் மனைவி கூப்பாடு போட்டது உண்டு. அது பிற்காலத்தில் நிகழ்ந்த விஷயம். அந்தக் குடும்பம் ஒத்தை வீட்டில் தங்கள் சுகசௌகரியங்களுக்கு ஏற்பக் காரியங்கள் செய்து கொண்டிருந்தது.

ஒத்தை வீட்டின் தெற்கு மூலையில், வீட்டுக்குள்ளேயே வெளிச்சுவர்களை ஒட்டி, ஒரு கிணறு இருந்தது. கிணற்றினுள் இறங்குவதற்கு வாகாக, கால்களை அங்கங்கே ஊன்றிக் கொள்ள வசதியாக, எட்டத்தில் எட்டத்தில் கற்கள் சுவர்களில் பதிக்கப் பட்டிருந்தன. கிணற்றுக்கு மேலே காம்பவுண்டுச் சுவர் சுமார் ஐந்தடி உயரத்துக்குக் கட்டப்பட்டிருந்தது. உயரே திறந்த வானவெளிதான். ஒரு இரவு. நிலவு மங்கலாக ஒளிர்ந்தது. எட்டு, எட்டரை மணி இருக்கலாம். கிணற்றுப் பக்கம் வந்த பர்வதம் எட்டிப் பார்த்தாள். சுவரோடு சுவராக ஒட்டிக் கொண்டு ஒரு ஆள் நிற்பது தெரிந்தது. ஆள் தான். கறுப்பாய், தடிக்கட்டை மாதிரி. மேலே ஒன்றுமில்லை. இடுப்பில் வேஷ்டி வெள்ளையாய் பளிச்சிட்டது. 'எவனோ திருட்டுக் கழுதை. திருடிட்டுப் போக வந்து, பதுங்கியிருக்கான்' என்று அவள் மனம் சொன்னது.

"ஏ தேவடியா மகனே!" என்று தொடங்கி, வாய்கூசாது கண்டபடி ஏசத் தொடங்கினாள் பர்வதம் "கரிக்கொல்லன் மேலே விட்டெறியறதுக்கு கல்லுகட்டி எதையும் காணோமே" என்று முணங்கினாள்.

அவள் கூப்பாடு போடுவதைக் கேட்டு மகள்கள் ஓடி வந்தார்கள். உள்ளே எட்டிப் பார்த்தார்கள். "சும்மா இரம்மா-கத்தாதே. ராச்சத்தம். என்னவோ ஏதோன்னு அக்கம் பக்கத்திலே நினைக்கப் போறாங்க" என்று இரண்டாவது மகள் இசக்கியம்மை அம்மா அருகில் நின்று சொன்னாள்.

"என்னட்டி நீ பேசுறது! திருட்டுக் கரிமுடிவான் எவனோ....

அவள் கவனத்தைத் தன்பக்கம் இழுத்தான் அந்தத் திருடன். அவன் விறுவிறு என்று மேலே ஏறி, சுவர்மீது தாவிவிட முயன்றான். அங்கிருந்து தப்பி ஓடும் முயற்சியில் அவன் கருத்தாக இருந்தான். அவனை யார் என்று பர்வதம் கண்டு கொண்டாள். வடக்குத் தெருவில் உள்ள பலகாரக் கடையில் சமையல்காரனாகப் பணிபுரிகிறவன்.

உடனே அவளுக்கு உண்மை பளீரென்று புலனாயிற்று. இந்தத் தடியன் திருட வரவில்லை; கள்ளத்தனமாக இன்பம் அனுபவிக்க வந்திருக்கிறான் என்று புரிந்தது. மின்னல் வேகத்தில் அவள் மூளை இப்படி உணர்த்தியது. விதவை காமாட்சி மீது அவளுக்கு சந்தேகம் உதித்தது.

"ஓகோ, இது வேறே நடக்குதா?" என்று கத்தியவாறே மடை குத்திவிடுவதற்கென்று மூலையில் சாத்தி வைத்திருந்த மூங்கில் கம்பை எடுத்து அவன் முதுகில் பளாரென்று அறைந்தாள் பர்வதம்.

அடி பலமானதுதான். ஆனாலும் அவன் வாய் திறக்காமலே, சுவர் மீது ஏறும் முயற்சியில் வேகம் காட்டினான். பர்வதம் துணிச்சலாக ஒரு காரியம் செய்தாள். எட்டி, துவளத்தின் மேலே சாய்ந்து முன் குனிந்து, கை நீட்டி அந்தத் தடியனுடைய இடுப்பு வேட்டியைப் பிடித்து இழுத்தாள்.

அது அவிழ்ந்து அவள் கையோடு வந்துவிட்டது. வெறும் உடலனாய் அவன் சுவர் மீது தொத்தி ஏறியிருந்தான். அவள்

வாய் மோசமான வசவுகளைப் பொழிந்து கொண்டிருந்தது. அப்போதும் அவள் எதிர்பாராதது நடந்தது.

இசக்கியம்மை வெடுக்கென்று அவள் கையிலிருந்த வேட்டியைப் பிடுங்கினாள். அதை சுருட்டி எடுத்து, "இந்தா முருகா வேட்டி. உடுத்திக்கிட்டு சீக்கிரமாய் போய்ச் சேரு!" என்று கூறியபடியே அந்த ஆளிடம் நீட்டினாள். அவன் அதை வாங்கிக் கொண்டு சுவருக்கு மறுபுறம் குதித்துவிட்டான்.

இப்போது இன்னொரு உண்மை பளிச்சிட்டது பர்வதம் மூளையில்-அந்தத் தடியன் விதவை காமாட்சியைத் தேடி வந்தவனில்லை; இந்தக் குமரி இசக்கியம்மையை நாடி வந்தவன் தான். "ஏ தட்டுவாணிச் சிறுக்கி! எத்தனை நாளாட்டி இது நடக்கு?" என்று கேட்டு, மகளை ஏசியபடி, அவளது தலைமயிரைப் பற்றி தலையைச் சுவர் மீது ணங்-ணங்கென்று ஒலி எழும்படியாக மோதினாள். "கள்ளப்புருசன் மானபங்கப்படாம இருக்கணும்னு வேட்டியைப் புடுங்கி அவன் கிட்டே வீசினியேட்டி. தேவ்டியா! உனக்கு மானம் வெட்கம் சூடு சொரணை கொஞ்சமாவது இருக்கா?"

இசக்கியம்மை வாய் திறக்கவேயில்லை. அவளுக்கே அலுத்து விட்டதும்தான் பர்வதம் மகளை அடிப்பதை நிறுத்தினாள். "சவமே, நீ செத்தொழிஞ்சு போ. அப்பதான் என் மனசு சமாதானப்படும்" என்று முடிவுரை கூறிவிட்டு அந்தத்தாய் படுத்து விட்டாள்.

அப்புறம் வழக்கம் போல எருமைகள் பால் கொடுப்பதும், கோழிகள் வீட்டினுள் எல்லாம் அசிங்கப்படுத்துவதும் ஆடுகள் கத்துவதும் நாய்கள் குரைப்பதும் இடையறாது நடப்பது போலவே இசக்கியம்மையின் காரியங்களும் நடக்கலாயின.

அவளுக்கு மாப்பிள்ளை தேடும்படி-சீக்கிரமே கல்யாணத்தைப் பண்ணி அவளை அந்த ஊரை விட்டு அனுப்பிவிடும்படி-பர்வதம் பாண்டியன் பிள்ளையை விரட்டலானாள். காலம் அதன் இயல்பின்படி ஓடிக்கொண்டிருந்தது. ஒரு கோடை காலம். பகலின் கடுமையான வெயிலைத் தொடர்ந்து, காற்று ஊசலாடாத இரவின் புழுக்கம் தொல்லை கொடுத்தவாறு நகர்ந்தது.

பர்வதம் திண்ணையில் படுத்துக்கிடந்தாள். தன்னை மறந்து தூங்கி விட்டாள். எவ்வளவு நேரம் சென்றிருக்குமோ தெரியாது அவளுக்கு விழிப்பு தட்டியது. உணர்வுகளின் கிளுகிளுப்பு காரணமாக, அவள் கழுத்தில் விரல்கள் மெதுவாக ஊர்ந்தன. கிச்சுகிச்சு காட்டுவதாக, தூக்கக்கிறக்கத்தில் அவள் எண்ணிக் கொண்டாள். அவள் உள்ளத்தில் இன்ப நாடகம் கனவு ரேகையாக நெளிந்தது போலும். பாண்டியன்பிள்ளை விளையாடுகிறார் என்று நினைத்தாள். குகுகும் என்று சிணுங்கிச் சிரித்து, "சும்மா இருங்க. இப்ப இது என்ன இது" என்று செல்லமாகக் குழறினாள். வெடுக்கென்று கழுத்தில் சங்கிலியைப் பற்றி இழுத்த உணர்வு அவளை உலுக்கியது. கை கழுத்தின் பக்கம் சென்றது. தடவியது. வெறும் கழுத்து. அங்கே உறவாடிக் கிடந்த தாலிச் சங்கிலி இல்லாமல் போயிருந்தது.

"ஐயோ மதிமயங்கிப் போனேனே! திருடன்லா என் மூத்திலே கை வச்சிருந்திருக்கான். நான் அவுகளாக்கும்னு நினைச்சேனே. என் புத்தியை செருப்பாலடிக்க.." என்று புலம்ப ஆரம்பித்தாள் பர்வதம்.

என்ன பிரபலாபித்து என்ன பண்ண? போனது போனது தான். பர்வதத்துக்கு ஒத்தை வீடு பிடிக்காமல் போய்விட்டது. "சவம், இது என்ன வீடு? பந்தோபஸ்துக் குறைச்சல். அந்தப் பக்கம் ஆள் இறங்கி வந்து பதுங்கி இருக்க இடமிருக்கு. முன் பக்கமானா திருட்டுப் பய வந்து களவாடிக்கிட்டுப் போக முடியுது. பாதுகாப்பே இல்லையே!" என்று விமர்சித்தாள் அவள். அனுபவ ஞானம் உதிர்த்த கருத்துக்களுக்கு பாண்டியன்பிள்ளை செவி சாய்த்தார்.

## பதின்மூன்று

நாடு சுதந்திரம் பெற்ற பிறகு நெடுகிலும் பலப்பல மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன.

ஒவ்வொரு நகரமும் பேய் வளர்த்தி .பெற்று வந்தது. சில கிராமங்களும் புதுத்தோற்றம் கண்டன. அந்நிலையிலே கூடப் பல ஊர்கள் 'பழைய கறுப்பனே கறுப்பன்' என்ற தன்மையிலேயே இருந்து வந்தன. அப்படிப்பட்ட ஊர்களில் மகிழ்வண்ணபுரமும்

ஒன்று.

மூலை முடுக்குகளில் உள்ள சின்னஞ்சிறு ஊர்களுக் கெல்லாம் பஸ் போக்குவரத்து ஏற்பட்டு விட்டது. அந்த வசதி இந்த ஊருக்கும் கிடைத்தது. இந்த ஊருக்கும் மின்விளக்கு வசதி கிட்டியது. தெருத் தண்ணீர்க்குழாய்கள் வந்தன. பொது ரேடியோ அலறியதோடு, சில சில வீடுகளிலும் ரேடியோவின் குரல் ஓயாது கேட்கலாயிற்று. இவ்வூர்க்காரர்களும் பக்கத்து ஊர்களுக்கு போய் சினிமா பார்த்துவிட்டு, படங்களைப் பற்றியே பேசி மகிழ்ந்தார்கள். சிலர் தினப்பத்திரிகைகள் படித்துவிட்டு அரசியல் பேசினார்கள். அப்புறம் அவரவர் இயல்புகளின்படி சோம்பியிருந்தார்கள்.

அதில் எல்லாம் குறை ஒன்றுமில்லை. ஆயினும், மொத்தத்தில் ஊர் சோபிக்கவில்லை. பிறவிப் பெருமாள்பிள்ளை காலத்தில் அழுது வடிந்தது போல் தான் இப்பவும் தோற்றம் காட்டியது. 'பெரிய பிள்ளை' காலத்தில் மகிழ்வண்ணபுரத்தில் 'பிள்ளைமார் வீடுகள்' எண்பது செயலாக இருந்தன என்று அவர்கள் பெருமைப்பட்டுக் கொண்டார்களே, அது தேய்ந்து போயிருந்தது. குறைந்து குறைந்து, இப்போது இருபது வீடுகளுக்குக் குறுகி விட்டது.

படிக்க வேண்டியதில்லை, இன்னொருத்தன் கிட்டே கைகட்டிச் சேவகம் பண்ண வேண்டியதில்லை என்று அந்தக் காலத்தில் நிலவிய மத்தியதர-மேல் மத்தியதரப் பிள்ளைமார் குடும்ப மனோபாவம் கால ஓட்டத்தில் கரைந்து போயிருந்தது. எங்காவது, எதாவது வேலை பார்த்துத்தான் பிழைக்க வேண்டும் என்ற அவசியம் சிறிது சிறிதாகச் சிலரை அவ்வப்போது வெறியேறச் செய்திருந்தது; நகரங்களுக்குப் போய் பிள்ளைகளைப் படிக்க வைக்க வேண்டும் என்று சில குடும்பங்களைக் குடிபெயர வைத்திருந்தது.

தொழில் வாய்ப்புகள் உள்ள அண்டை அயல் ஊர்கள் சில வருடங்களுக்குள்ளாக நன்கு வளர்ந்து 'டவுண்ஷிப்' என்ற அந்தஸ்தைப் பெற்றிருந்தன. அந்த ஊர்களில் நெருக்கடி ஏற்பட்டதால், வீடு தேடி அநேகர் மகிழ்வண்ணபுரத்துக்கும் வந்தார்கள். அதனால் இந்த ஊர் வீடுகளின் வாடகை மதிப்பும் உயர்ந்தது.

இருப்பினும், ஊரிலேயே பெரிய ஒத்தை வீட்டுக்கு மாதம் இருபது ரூபாய் கொடுத்துக் குடியிருப்பதற்கு எவரும் முன்வரவில்லை. எனவே, அது அநேகமாகப் பூட்டப்பட்டே கிடந்தது. சிலகாலம் பதினைந்து ரூபாய் வாடகையில் யாராவது வந்து தங்குவார்கள். ஒன்றிரண்டு மாதங்கள் இருப்பார்கள். பிறகு, போய் விடுவார்கள். "வீடு பெரிசா இருக்கே தவிர, போதுமான வசதிகள் இல்லை" என்றார்கள். "ஆகிவந்த வீடாக இல்லை. இந்த வீட்டிலே இருந்தாலே மனசு இருளடிச்சுப் போகுது. குழப்பமும் கவலையும் பிரச்னைகளும் அடிக்கடி முளைச்சுக்கிட்டே இருக்கே" என்றார்கள்.

"சில வீடுகளைப் பாருங்க. உள்ளே போனதுமே மனசுக்கு உற்சாகம் தரும். சந்தோஷமா இருக்கும். கையிலே பணம் காசு அதிகம் இல்லேன்னாலும்கூட, அந்த வீட்டுக்குள்ளே இருக்கிறதே ஒரு தெம்பாக இருக்கும். சில வீடுகள் அழுமூஞ்சித்தன்மை கொண்டது போல் தோணும். நம்மிடம் இயல்பாக இருக்கிற சந்தோஷத்தையும் வறளடிச்சுப் போடும். ஒத்தை வீடும் அப்படி யாப்பட்டது" என்று ஒருவர் சொன்னார்.

டவுணில் சிவகுருநாதனின் மளிகைக்கடை 'நல்ல முழிப்பாக' நடந்தது. லாபம் கிடைத்துக் கொண்டிருந்தது. அதனாலே மகிழ்வண்ணபுரத்து 'வீட்டு வாடகை வந்து தான் ஆகவேண்டும்' என்கிற எதிர்பார்ப்பு எதுவும் அவருக்கில்லை. முன்னை மாதிரி 'வீடு திறந்திருக்கணும். யாராவது பெருக்கி மெழுகி விளக்கேத்தி வைக்கணும்' என்ற அக்கறையும் இப்போது அவரிடம் இல்லை.

அவருக்கும் வயது அதிகமாகிக்கொண்டிருந்தது. அவருடைய மகள்கள் இரண்டு பேருக்கும் நல்ல இடங்களில் கல்யாணம் ஆகி விட்டது. மகன்களில் பெரியவன், சென்னைக்குப் போய்விட்டான். இரண்டாவது பையன் மளிகைக்கடையில் சின்னமுதலாளியாக இருந்து 'பிசினஸை கவனித்துக்' கொண்டிருந்தான். மற்றப் பையன்கள் படித்துக் கொண்டிருந்தார்கள்.

"வீடு அது பாட்டுக்கு வீடாக இருக்கட்டுமே. ஊரிலே நமக்கு ஒரு வீடு இருக்குங்கிறதே மதிப்புக்கும் அந்தஸ்துக்கும் உரிய விஷயம் தானே" என்று சிவகுருநாதன் தன் மனைவியிடம்

பெருமையாகச் சொல்வது உண்டு. அவர் இந்த மனநிலையில் இருந்தபோதுதான் 'அதிர்ஷ்டம்' அவரைப் பார்த்துக் கண் சிமிட்டியது!

பேராசிரியர் சிவசிதம்பரம் அவரைத் தேடி வந்தார். நகரக் கல்லூரியில் பணிபுரியும் அவர் சிவகுருநாதனுக்கு தூரத்து உறவு. எப்பவாவது கண்டு பேசிப் பிரிந்திருக்கிறாரே தவிர, உறவு கொண்டாடி நெருங்கியதில்லை. இப்போது ஒரு காரணமாகத் தான் பேராசிரியர் மளிகைக்கடை முதலாளியை அணுகியிருந்தார். "ஊரிலே உங்க வீடு சும்மா தானே கிடக்கு? இப்ப அதிலே யாரும் வாடகைக்கு இருக்கலேல்லா?" என்று கேட்டார்.

"யாரும் இல்லை. அஞ்சாறு மாசமா அடைச்சே தான் கிடக்கு" என்றார் சிவகுரு.

"அப்போ சரி. அந்த வீடு ஒரு ஆளுக்கு வேண்டியிருக்கு".

"யாரு அது? நல்ல ஆளு தானா?" என்று ஒப்புக்கு விசாரித்து வைத்தார் வீட்டுக்காரர்.

"ரொம்ப நல்ல மனுஷன்னு தான் சொல்லணும். நம்ம பக்கத்து ஆளு இல்லே. வாடகை மாசம் தோறும் அம்பது ரூபா தரத் தயாராயிருக்காரு.." என்றார் சிவசிதம்பரம்.

## பதினான்கு

'அறிவு ஜீவிகள்' நடுவிலே-'இன்ட்டெலக்சுவல்ஸ்' என்று தங்களை மற்றவர்கள் மதிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறவர்கள் மத்தியிலும் - ஆராய்ச்சிப் பசியும் 'ஆய்வு' அரிப்பும் அதிகரித்து வந்தன! பட்டம் பெறுவதற்காகவும், பெரிய பெரிய பத்திரிகைகளில் கனமான கட்டுரைகள் எழுதுவதற்காகவும், 'ஸெமினார்'கள் (கருத்தரங்குகள்) கூட்டுவதற்காகவும், புத்தகங்கள் எழுதுவதற்காகவும் 'ஆராய்ச்சி'களில் ஈடுபட்டார்கள் பலப்பலர். உலகம் பூராவுமே இந்த அரிப்பும் பசியும் பரவி வருவதாகத் தோன்றுகிறது. சின்ன விஷயம், பெரிய பிரச்சினை என்று பேதாபேதம் காட்டாமல் எது எதையோ-எல்லா விஷயங்களையுமே-ஆராய்ச்சிக்கு (ஆய்வுக்கு) உரிய பொருளாகக் கொண்டு 'அறிவு ஜீவி'கள் வருடங்களை ஓட்டுவதில்

ஈடுபடுகிறார்கள். காட்டுமிராண்டிகளின் பாஷை முதல் பண்பாடு பெற்ற மக்களின் வாழ்க்கையில் பகிரங்கமாகவும் மறைவாகவும் உலவுகிற 'கெட்ட வார்த்தைகள்' ஈறாக அனைத்து விஷயங்களையும் 'இன்ட்டெலக்சுவல்ஸ்' ஆய்வு செய்து பக்கம் பக்கமாக 'தீஸிஸ்' எழுதித் தள்ளுகிறார்கள். இவற்றால் எல்லாம் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் ஏதாவது பயன் உண்டா என்பதை எந்த 'அறிவு ஜீவி'யும் தனது ஆய்வுக்குரிய விஷயமாக எடுத்துக் கொள்ளவில்லை! இப்படி ஆய்வில் ஈடுபடுகிற அறிவு ஜீவிகளுக்கு தாராளமாகப் பணம் கிடைக்கிறது. ஜாலியாகப் பலப்பல இடங்களுக்கும் பயணம் போய் வர முடிகிறது. உடம்பிலே பிடிக்காமல் வாழ்க்கையை ஓட்டவும் முடிகிறது. பட்டங்கள் பெறவும் முடிகிறது.

இந்த விதமாக ஆய்வு நடத்திக்கொண்டு உலக நாடுகளைச் சுற்றிக் கொண்டிருக்கிற உற்சாகிகளில் ஒருவன்தான் ஆல்பர்ட். ஏதோ ஒரு ஐரோப்பிய நாட்டைச் சேர்ந்தவன். தெற்கு ஜில்லாக்களின் சிற்றூர்களின் வளர்ச்சி தேய்வுகளையும், தமிழ் நாட்டு மக்களின் பழக்க வழக்க மாறுதல்களையும் பண்பாட்டுப் பாதுகாப்புகளையும், சிதைவுகளையும், பல்வேறு ஜாதியினரின் சடங்குகள் ஐதீகங்களையும் 'ஸ்டடி பண்ணுவதாக'ச் சொல்லி ஊர்ஊராகப் போனான். கிழவர்கள், கிழவிகள், கல்யாணமானவர்கள், ஆகாதவர்கள், பெரியவர்கள், சின்னவர்கள் என்று பல ரகமானவர்களையும் சந்தித்துப் பேசினான். டேப் ரிக்கார்டரில் பதிவு செய்தான். போட்டோக்களும் எடுத்துக் கொண்டான். காசுகளைப் பற்றியும் காலத்தைப் பற்றியும் அவன் கவலைப்படவில்லை.

அவனுக்கு தமிழ் பேசத் தெரிந்திருந்தது. அவன் தமிழ் பேசியது மற்றவர்களுக்கு விசித்திரமாக ஒலித்தது. தனக்குத் துணையாக, வேலையில்லாத பட்டதாரி இளைஞன் ஒருவனைக் கூட்டிக்கொண்டு அலைந்தான் ஆல்பர்ட். அவனுக்கும் இவனே செலவு செய்தான். ஊர்சுற்றி விட்டு ஓய்வாகத் தங்குவதற்கும். அமைதியாக இருந்து படிப்பதற்கும் எழுதுவதற்கும் வசதியாகத் தனக்கு ஒரு இடம் இருந்தால் நல்லது என்று ஆல்பர்ட் கருதினான்.

'இரண்டுங் கெட்டான்' ஊரான மகிழ்வண்ணபுரம் அவனை வசீகரித்தது. அந்த ஊரின் பெரிய வீடு அவனை ஈர்த்தது.

"அழகான ஊர், அருமையான வீடு" என்று ஆல்பர்ட் பேராசிரியர் சிவசிதம்பரத்திடம் கூறினான். அவர் இவனுக்கு நண்பர். பல வருடங்களாகக் கடிதத் தொடர்பில் வளர்ந்த நட்பு அது.

"இந்த ஊரை எனக்கு ரொம்பவும் பிடித்து விட்டது". புராதன இயல்புகளில் இது பலமாக வேரூன்றியிருக்கிறது. சுற்றிலும் மோதிச் சாடுகிற பலவிதமான மாற்றங்களும் இதன் வேர்களை அசைத்துவிட இயலவில்லை. இருந்தாலும், இந்த ஊர் பழமையிலேயே குறுகிக்கூனி நின்றுவிடவில்லை. காலமாற்றம், நாகரிக வளர்ச்சி ஆகிய வெளிகளிலும் தன் கிளைகளைப் பரப்பிக் கொண்டிருக்கிறது" என்று ஆல்பர்ட் சொன்னான்.

"நான் ஸ்டடி பண்ணியதில் எனக்குத் தெரியவ்ரும் உண்மைகளில் இதுவும் ஒன்றாகும்" என்று ஒரு சமயம் ஆல்பர்ட் சிவசிதம்பரத்திடம் அறிவித்தான்: "சமுதாய இயல், மானிட இயல் பற்றி எல்லாம் பேசுகிறார்களே-கட்டுரைகள் எழுதுகிறார்களே -அவர்கள் ஸ்டடி பண்ணி எழுதுவதற்கு இங்கு சுவாரசியமான விஷயங்கள் நிறைய இருக்கின்றன. உதாரணத்துக்கு ஐயப்பன் கல்ட் (cult) இந்நாட்டு மக்கள் மத்தியிலே வேகமாக வேரூன்றி விட்டதைக் குறிப்பிடலாம். இந்தப் பிரதேசத்தின் ஒரிஜினல் கடவுள் சிவன் என்கிறார்கள். சுக்குக்கு மிஞ்சிய மருந்துமில்லை; சுப்பிரமணியருக்கு மிஞ்சிய கடவுளும் இல்லை என்றும் சொன்னார்கள். அப்படியிருந்தும்கூட, ஐயப்பன் ரொம்பவும் செல்வாக்குப் பெற்று விட்டான் இங்கே. பார்க்கப் போனால், 1930களுக்குப் பிறகுதான் இந்தச் சாமிபக்தி இங்கு தலையெடுத்துள்ளது. மலையாள நாட்டிலிருந்து வந்து, விளம்பர பலத்தினால் எங்கும் பரவிய இந்த பக்தி இப்போது வலிய சக்தியாக விளங்குகிறது. பழைய சாமிகளின் கோயில்கள் கவனிப்பற்றுக் கிடக்கிற பலப்பல ஊர்களிலும் புதிதாகத் தோன்றிய ஐயப்பசாமி கோயில் பிரமாதப்படுகிறது. இதெல்லாம் ஏன்? மக்கள் மத்தியில் ஏற்பட்டு வந்திருக்கிற இந்த மாற்றம் ஸ்டடி பண்ணப்பட வேண்டிய விஷயம் இல்லையா-"

ஆல்பர்ட்டின் தயவால் அந்தப் பெரிய வீட்டில் 'அறிவு ஜீவித்தனம்' ஒளிரலாயிற்று. அறிஞர்கள், ஆய்வாளர்கள் அடிக்கடி வந்தார்கள். உலகில் சகல விஷயங்கள் பற்றியும் பேசி விவாதித்தார்கள்.

## பதினைந்து

சுயநலத்தினால், தங்களுடைய சொத்தைப் பாதுகாத்துப் பேர் சொல்ல வேண்டும் என்ற ஆசையோடு, தனிமனிதர்கள் தனிநபர்களை தத்து எடுக்கிற வழக்கம் எங்கும் இருந்து வருகிறது.

எல்லோருக்கும் உதவி செய்ய வேண்டும், வசதி குறைந்தவர்கள் வளமும் வாழ்வும் பெறுவதற்கு நாம் உதவிபுரிவோம் என்று அயல்நாடுகள், தூரதொலையில் உள்ள வளம் குன்றிய நாடுகளின் சிலசில கிராமங்களை தத்து எடுத்துக் கொள்கின்றன; உதவிகள் புரிகின்றன.

இந்தக் காலத்து அதிசயங்களில் இதுவும் ஒன்றுதான். மகிழ்வண்ணபுரத்துக்கு இத்தகைய ஒரு வாய்ப்புக் கிட்டியது. அதற்கு ஆல்பர்ட்தான் காரணம்.

அவன், கொள்ள வேண்டிய தொடர்புகளைக் கொண்டு, செய்ய வேண்டிய காரியங்களை முறைப்படி செய்து, பெரிதும் முயன்று அதை சாதித்தான்.

அவனுடைய நாட்டில் உள்ள ஒரு நிறுவனம் (ஃபவுண்டேஷன்) தாராள மனதுடன்ஆல்பர்ட்டின் திட்டத்தை ஏற்றுக் கொண்டது. உதவிகள் புரிய முன்வந்தது.

மீண்டும் சிவகுருநாதனுக்கு "அதிர்ஷ்டம் அடித்தது". அந்தப் பெரிய வீடு இருபத்தையாயிரம் ரூபாய்க்கு விலை போயிற்று. அவ்வூரில் வீடுகளின் பணமதிப்பு குறைவாகவே இருந்தது. ஒத்தை வீட்டின் மதிப்பு பத்தாயிரம் ரூபாய்-அதிகம் போனால், பதினையாயிரம்-என்று தான் ஊர் பிரமுகர்கள் கணித்திருந்தார்கள்.

ஆனால், ஆல்பர்ட், நலம் நாடும் அயல் நாட்டு ஃபவுண்டேஷன் சார்பில், அந்த வீட்டுக்கு இருபத்தையாயிரம் கொடுத்தான்.

இது விஷயமாக அவன் வெளியூர்களில் திரிந்ததால், அந்த வீடு பல வாரங்களாகப் பூட்டிக் கிடந்தது.

திடீரென்று ஒத்தை வீட்டில் பூச்சுமான வேலைகள், வெள்ளை அடிப்பு, பெயின்ட் பூசுதல் எல்லாம் நிகழவும், ஆல்பர்ட் போய் விட்டான்; புதிதாக வேறு யாரோ குடிவரப் போகிறார்கள்

என்றே ஊர்க்காரர்கள் எண்ணினார்கள்.

விரைவிலேயே அவர்களுக்கும் விவரம் தெரிய வந்தது.

மகிழ்வண்ணபுரம் பல வசதிகளைப் பெறுவதற்கு இருந்தது. முதலாவதாக, நல்ல மருத்துவமனையும் மகப்பேறு நிலையமும் நிறுவப்படும். ஒத்தை வீட்டில்தான் இவை அமையும்.

நூல்நிலையம், வாசகசாலை, உயர்நிலைப்பள்ளி எல்லாம் வரிசையாக வந்துசேரும். விளையாட்டு மைதானம், பொதுப் பூங்கா, குடிநீர் வசதிகள்..நாகரிக நகரத்தின் அம்சங்களை எல்லாம் மகிழ்வண்ணபுரம் அடைந்து விடும்.

தொழில் முயற்சிகளும் அவ்வூரில் துவக்கப்பெறும். சுவை மிகுந்த பிஸ்கட்டுகள் தயாரிக்கும் நிலையம், சத்து உணவுகள் உற்பத்திச்சாலை-இப்படி, அநேகருக்கு வேலை வாய்ப்புகளுக்கு வகை செய்யக்கூடிய அமைப்புகளும் தோன்றும்.

மகிழ்வண்ணபுரம் விரைவிலேயே மறுமலர்ச்சி பெற இருந்தது.

அதன் முன் அறிவிப்பு போல் புதுப் பொலிவுடன் விளங்கியது ஒத்தை வீடு.



# பின்னுரை

திரு. வல்லிக்கண்ணன் கிட்டத்தட்ட அரை நூற்றாண்டுக காலமாய்த் தமிழில் எண்ணற்ற சிறுகதைகளும், நாவல்களும் எழுதி வருகிற மூத்த எழுத்தாளர்களில் ஒருவர். சமார் 2 வருடங்களுக்கு முன்னதாகவே அவர் ஆயிரம் சிறுகதைகள் எழுதியிருப்பதாக அறிந்து நான் வியந்திருக்கிறேன்.

மறுமலர்ச்சி காலந் தொடக்கித் தற்காலம் வரை குன்றா இளமையுடன் இவரது எண்ணங்களும் சிந்தனைகளும் திகழ்ந்து வருவதைத் தமிழ் வாசகர்கள் அறிவர்.

இலக்கிய வாழ்க்கையை முழுமையாக அனுபவித்து வரும் முழுநேர எழுத்தாளர்-வல்லிக்கண்ணன்.

அண்மையில், மிகக் காலங்கடந்து சாகித்ய அகாதெமி இவரைக் கௌரவித்தது.

**ஒரு வீட்டின் கதை** தமிழகத்தின் உட்புற வாழ்க்கையின் ஒரு நூற்றாண்டு வரலாற்றைச் சுவைபடச் சொல்லி, சமூக குடும்ப, தனிமனித உறவுகளைப் பின்னிச் செல்கிறது.

பாத்திரப் படைப்பும், போகிற போக்கில் தட்டிவிடுகிற கிண்டல் மொழிகளும் அங்கதச் சிறப்புகளாய் இக்கதை நெடுக விரவிக் கிடக்கின்றன.

அவரது இந்த நாவலை 'கல்பனா' மகிழ்ச்சியுடன் வெளியிட்டு திரு.வல்லிக்கண்ணனுக்குத் தனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறது,

**–ஜெயகாந்தன்**

கல்பனா

ஆகஸ்ட், 1979.

